அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

21/-

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–१५



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

# 15

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.

1964



॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिर्द्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ தக்ஷிணாம்னாய சிருங்கிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்களின் திவ்ய அனுக்ரஹத்தை முன்னிட்டு அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியால் வெளியிடப்பட்டுவரும் ஸ்ரீ ஜகத்குரு க்ரந்த மாலாவில் 15-வது மலர் பூர்த்தியாகியுள்ளது. இதில் "ஸ்ரீ சிவபாதாதி கேசாந்த வர்ணனா ஸ்தோத்ரம்", "ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வர்ணமாலா ஸ்தோத்ரம்", "வேத ஸார சிவ ஸ்தோத்ரம்", "காலபைரவாஷ்டகம்", "ஸுவர்ணமாலா ஸ்துதி" என்ற இந்த ஐந்து சிவ ஸ்தோத்ரங்களும் வழக்கம்போல் பதவுரை, பொழிப்புரை, விசேஷக் கருத்துக்களுடன் வெளியாகியுள்ளன.

பரமசிவனுடைய கேசத்தில் ஆரம்பித்து பாதம் வரை வர்ணிக்கும் ஸ்தோத்ரம் 8-வது மலரில் வெளியாகியுள்ளது. இது திருவடியில் ஆரம்பித்து கேசம் முடிய அங்கங்களை வர்ணிக்கும் ஸ்தோத்ரம். இரு ஸ்தோத்திரங்களும் பகவானுடைய அங்கங்களை வர்ணிக்கிறதாக இருந்தபோதிலும் வர்ணனுப்ரகாரம் வெவ்வேருக அமைந்திருப்பது ஓர் விசேஷம். 'கல்யாணம்' என்ற பதத்துடன் ஆரம்பிக்கும் இந்த ஸ்தோத்ரம் ஸகல மங்களங்களையும் கொடுக்கும் என்பதில் கொஞ்சமும் ஸந்தேஹமே இல்லை.

எல்லா மங்களங்களையும் கொடுக்கும் 'ஓம்' என்னும் பிரணவத்துடன் ஆரம்பிக்கும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வர்ண மாலா ஸ்தோத்ரத்திலுள்ள சுலோகங்கள் முதல் எழுத்தால் மந்திரத்தைக் காட்டுகிறது. இதில் உபநிஷத் கருத்துக்கள் அநேகம் உள்ளன.

அகாரம் முதல் க்ஷகாரம் வரையுள்ள வர்ணமாலையில் இருக்கும் வரிசைப்படியே அகாராதி வர்ணங்களில் ஆரம்பிக்கும் 50 சுலோகங்கள் கொண்டது ஸுவர்ணமாலா ஸ்துதி. ஙு, ஞ, ணு, ள இந்த எழுத்துக்களில் ஆரம்பிக்கும் பதங்கள் ஸாதாரணமாக வழக்கத்தில் இல்லாவிட்டாலும்

இங்கு இந்த எழுத்துக்களையும் முதலில் வைத்து சுலோகங்கள் இயற்றியுள்ளார்கள். கடைசியில் மங்களத்தைக் கூற வேண்டியது அவசியமானபடியால் 'ளகாரம் முதலில் உள்ள பதம் வழக்கில் இல்லாதபடியால் ளகாரத்தைக் கடைசியில் உள்ள மங்களம் உண்டாகட்டும்' என்று கூறி முடிக்கிறார்.

இம்மலரை அச்சிடும் செலவிற்காக திருநெல்வேலி ஜில்லா வீரவநல்லூரைச்சேர்ந்த சிருங்கேரி மடம் பக்தர் ஒருவர் ரூ 1000/- அளித்துள்ளார். அன்னாருக்கு நம் ஸமிதியின் சார்பில் கிருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிருங்ககிரி ஸ்ரீ ஸத்குரு சரணாரவிந்தங்களில் இந்த 15-வது மலர் பக்தியுடன் ஸமர்ப்பணம் செய்யப்படுகிறது.

காரியதர்சி,

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.


விஷயாநுக்ரமணிகை

21/5

|| श्रीः ||

# श्रीशिवपादादिकेशान्तवर्णनस्तोत्रम् ||

# ஸ்ரீ சிவபாதாதிகேசாந்த வர்ணன ஸ்தோத்ரம்

---

[இந்தப் பதினைந்தாவது மலரில் முதலாவதாக 41 சுலோகங்கள் கொண்ட ஸ்ரீ சிவபாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்ரம் வெளியிடப்படுகிறது. பாதாதி கேசாந்த வர்ணனம் (திருவடிமுதல் கேசம்வரையிலுள்ள அவயவங்களின் வர்ணனை) என்ற பெயர் இதற்கு வழக்கத்தில் இருந்தபோதிலும் இவைமட்டுமல்லாமல் மஹேச்வரனுடைய வாஸஸ்தானமான மஹா கைலாஸம் முதல் கொண்டே வர்ணனத்தை ஆரம்பித்து கைலாஸம், பிநாகம் என்ற வில், குடாரம், த்ரிசூலம், மான், விருஷபம், கணேசர், ஸ்கந்தர், சாஸ்தா, பார்வதி, ப்ரமதகணங்கள், கிருஹம், ஸபை, பீடம், பாதம், நூபுரம், முழங்கால், துடை, நிதம்பம், இடை, ரோமாவளி, மார்பு, கைகள், கழுத்து, அதரம், மூக்கு, கண்கள், நெற்றி, கேசம், கிரீடம், சந்திரகலை, சாமரம் வீசும் சேடிகள், அப்ஸரோநர்த்தனம், நாரதவீணாகானம், மிருதங்கநாதம் இவ்வளவையும் வர்ணித்துவிட்டுக் கடைசியில் எல்லா உலகங்களிலும் உள்ள சிவபக்தர்களான எல்லா ஜீவர்களையும் வணங்குகிறார். நிறைந்த செல்வம், ஸபையில் கௌரவம், பூர்ணாயுஸ், சிவபதம் இத்தனையும் இதைப் படித்தால் கிடைக்குமெனக் கூறுகிறார்.]

**கைலாஸ வர்ணனை :—**

कल्याणं नो विधत्तां कटकतटलसत्कल्पवाटीनिकुञ्ज-
क्रीडासंसक्तविद्याधरनिकरवधूगीतरुद्रापदानः ।
तारैर्हेरम्बनादैस्तरलितनिनदत्तारकारातिकेकी
कैलासः शर्वनिर्वृत्यभिजनकपदः सर्वदा पर्वतेन्द्रः ॥ १ ॥

கல்யாணம் நோ விதத்தாம் கடகதடலஸத்கல்பவாடீநிகுஞ்ஜ
க்ரீடாஸம்ஸக்தவித்யாதரநிகரவதூகீதருத்ராபதாந: ।
தாரைர் ஹேரம்பநாதைஸ்தரளிதநிநதத்தாரகாராதிகேகீ
கைலாஸ: ஶர்வநிர்வ்ருத்யபிஜநகபத: ஸர்வதா பர்வதேந்த்ர: ॥

**कटकतट**–தாழ்வரைகளில், **लसत्**–விளங்குகின்ற, **कल्पवाटी**–கல்பவிருக்ஷத்தோட்டத்திலுள்ள, **निकुञ्ज**-கொடிமண்டபத்தில், **क्रीडा**–விளையாடுவதில், **संसक्त**–நன்கு ஈடுபட்ட, **विद्याधरनिकर**–வித்யாதரகணங்களின், **वधू**–பெண்களால், **गीत**–பாடப்பட்ட, **रुद्रापदानः** – பரமேச்வரனுடைய வீரச் செயல்களையுடையதும், **तारैः**–உரத்ததான, **हेरम्ब**–விநாயகருடைய, **नादैः**–ஒலிகளால், **तरलित**-சஞ்சலமுள்ளதாக செய்யப்பட்டதும், **निनदत्** –சப்தத்தைச் செய்கின்றதுமான, **तारकाराति**–தாரகன் என்ற அசுரனுடைய பகைவனுன ஸுப்ரமண்யப்பெருமானின், **केकी**–மயிலை உடையதும் **शर्वे**–பரமேச்வரனுக்கு, **निर्वृति**–சந்தோஷத்தை, **अभिजनक**–உண்டு பண்ணுகின்ற, **पदः**–இடங்களையுடையதுமான, **पर्वतेन्द्रः** மலைகளுக்கெல்லாம் அதிபதியான, **कैलासः**–கைலயங்கிரி, **सर्वदा**–எப்பொழுதும், **नः**–நமக்கு, **कल्याणं**–மங்களத்தை, **विधत्ताम्** –செய்யட்டும்.

கைலாஸமென்ற மலை மிகவும் புகழ்பெற்றது. அதன் தாழ்வரைகளில் வேண்டுபவர்களின் மனோரதத்தை நிறைவேற்றும் கல்பவிருக்ஷங்களின் தோட்டம் உள்ளது. அவைகளிடையே பற்பல சிறு செடி கொடிகளால் சூழப்பட்ட பல இடங்கள் உள்ளன. அவைகளின் நடுவில் வித்யாதரப் பெண்கள் விளையாடும்பொழுது பரமசிவனுடைய வீரச்செயல்களைப் பாடுகின்றனர். அவைகளைக் கேட்டு இன்புற்ற கணபதி உரக்க ஆரவாரம் செய்கின்றுன். அவனுடைய குரல் மேகத்தின் இடிமுழக்கம்போல் ஒலிக்கின்றது. அதைக்கேட்ட முருகப்பெருமானின் மயில் மேகமே கர்ஜிக்கின்றதென்று எண்ணி உள்ளம் பூரித்துக் கே கா என்ற இன்னிசையை எழுப்புகின்றது. இவற்ருல் அங்கு வசித்துவரும் பரம்பொருளாகிய சிவபெருமானுக்கு மட்டிலா மகிழ்ச்சி ஏற்படுகின்றது. இவ்வாறு விளங்கும் கைலாஸபர்வதம் நமக்கு மங்களத்தை அருளட்டும். (1)

பிநாகம் என்ற வில்: —

**यस्य प्राहुः स्वरूपं सकलदिविषदां सारसर्वस्वयोगं**
**यस्येषुः शार्ङ्गधन्वा समजनि जगतां रक्षणे जागरूकः ।**

मौर्वी दर्वीकराणामपि च परिवृढः पूस्त्रयी सा च लक्ष्यं
सोऽव्यादव्याजमस्मानशिवभिदनिशं नाकिनां श्रीपिनाकः ॥

யஸ்ய ப்ராஹு: ஸ்வரூபம் ஸகல திவிஷதாம் ஸார ஸர்வஸ்வ யோகம்
யஸ்யேஷு: ஶார்ங்க தன்வா ஸமஜனி ஜகதாம் ரக்ஷணே ஜாகரூக: ।
மௌர்வீ தர்வீகராணமபி ச பரிவ்ருட: பூஸ்த்ரயீ ஸா ச லக்ஷ்யம்
ஸோऽவ்யாதவ்யாஜமஸ்மான ஶிவபிதனிஶம் நாகினாம் ஸ்ரீபினாக: ॥

**यस्य**–எதனுடைய, **स्वरूपं**–உருவத்தை, **सकल**–எல்லா, **दिविषदां**–விண்ணவர்களுடைய, **सारसर्वस्वयोगं**–சிறந்த பலமெல்லாம் சேர்ந்து அமைந்துள்ளதாக, **प्राहुः**–கூறுகின்றனர்களோ, **जगतां**-உலகங்களை, **रक्षणे**-காப்பதில், **जागरूकः**-விழிப்புடன் இருக்கும், **शाङ्गधन्वा**–சார்ங்கம் என்ற வில்லையுடைய லக்ஷ்மீபதி, **यस्य**–எதற்கு, **इषुः**-அம்பாக, **समजनि**–ஆனரோ, **अपि च**-மேலும், **दर्वीकराणां**-பாம்புகளுக்கு, **परिवृढः**–அரசனாகிய வாஸுகி, **मौर्वी**–(எதற்கு) நாண்கயிறாக ஆனரோ, **सा**–அப்பேர்ப்பட்ட (மிகுந்த பலமுள்ள), **पूस्त्रयी च**–முப்புரமும், **लक्ष्यं**-(எதற்கு) இலக்காக ஆயிற்றோ, **नाकिनां**–தேவர்களின், **अशिवभित्** – அமங்களத்தைப்போக்கும், **सः**–அந்த, **श्रीपिनाकः**–சிறந்த பிநாகம் என்ற வில், **अव्याजं**–கபடமின்றி, **अस्मान्** – நம்மை, **अनिशं** – எப்பொழுதும், **अव्यात्** – காப்பாற்றட்டும்.

ஒருகாலத்தில் திரிபுரர்கள் என்ற அஸுரர்கள் எல்லா உலகங்களையும் வென்று தேவர்களுடைய பதவிகளையும் கைப்பற்றிக்கொண்டார்கள். மேலும் அவர்கள் பட்டிண வடிவம் கொண்டு பல இடங்களில் உட்கார்ந்து அவைகளை அழித்து வந்தார்கள். அப்பொழுது தேவர்கள் அனைவரும் பரமேச்வரனை அண்டித் தங்களுடைய குறைகளைத் தெரியப்படுத்தினார்கள். பரமசிவனும் அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி அவர்களை அழிக்கப் புறப்பட்டார். அப்பொழுது தேவர்கள் எல்லோரும் தங்கள் தங்களுடைய வலிமையையெல்லாம் யுத்த ஸாதனத்தின் பொருட்டுச் சிவபெருமானுக்கு அளித்தார்கள்

அதுவே பினகம் என்ற புகழ்வாய்ந்த வில்லாக அமைந்தது. உலகங்களைக் காப்பதில் ஊக்கமுடைய மஹாவிஷ்ணுவே அதற்குப் பாணமாக விளங்கினர். பாம்புகளுக்குத் தலைவனை வாஸுகி ஞாண் கயிருக ஆனன். மிகுந்த வலிமையுள்ள த்ரிபுரர்கள் அந்த வில்லுக்கு இலக்காக ஆனர்கள், இது எப்பொழுதும் தேவர்களின் துன்பங்களைப் போக்கடிக்கிறது. அவ்வாறு இருக்கும் அவ்வில் பரமசிவனுடைய கையில் விளங்கிக் கொண்டிருக்கிறது. அது நம்மிடம் இரக்கம்கொண்டு நம்முடைய துன்பங்களையும் களைந்து நம்மைக் காப்பாற்றட்டும். (2)

சிவனின் கோடாலி என்ற ஆயுதம் :—

आतङ्कावेगहारी सकलदिविषदामङ्घ्रिपद्माश्रयाणां
मातङ्गाद्युग्रदैत्यप्रकरतनुगलद्रक्तधाराक्तधारः ।
क्रूरः सूरायुतानामपि च परिभवं स्वीयभासा वितन्वन्
घोराकारः कुठारो दृढतरदुरिताख्याटवीं पाटयेन्नः ॥ ३ ॥

ஆதங்காவேக ஹாரீ ஸகல திவிஷதாமங்க்ரி பத்மாச்ரயாணும்
மாதங்காத்யுக்ர தைத்ய ப்ரகர தனுகலத் ரக்த தாராக்த தார: ।
க்ரூர: ஸூராயுதாணுமபி ச பரிபவம் ஸ்வீயபாஸா விதன்வன்
கோராகார: குடாரோ த்ருடதர துரிதாக்யாடவீம் பாடயேந்ந: ॥

अंघ्रिपद्माश्रयाणां–தாமரைபோன்ற தன்னுடைய திருவடியை அண்டியவர்களான, सकल–எல்லா, दिविषदां–தேவர்களுடையவும், आतङ्क–துன்பங்களையும், आवेग–கவலைகளையும், हारी–போக்குகின்றதும், मातङ्गादि-மாதங்கன் முதலிய, उग्र-கொடிய, दैत्यप्रकर–அஸுரர்களுடைய கூட்டத்தின், तनु-உடலிலிருந்து, गलत्–பெருகுகின்ற, रक्तधारा–இரத்தப்பெருக்கால், अक्त–பூசப்பட்ட, धारः–நுனியை உடையதும், क्रूरः–கொடியதும், स्वीयभासा–தன்னுடைய ஒளியால், सूरायुतानां अपि च-பதினாயிரம் சூர்யன்களுக்கும், परिभवं–அவமானத்தை वितन्वन्–செய்துகொண்டு घोराकारः–பயங்கரமான தோற்றத்தையுடையதுமான, कुठारः–கோடாலி, नः–நம்முடைய, दृढतर–மிகவும் அடர்த்தியான, दुरिताख्य–பாபம் என்ற பெயரை உடைய, अटवीं–காட்டை, पाटयेत्–வெட்டட்டும்,

சிவபெருமானுடைய கையில் விளங்கும் கோடாலி அடிபணியும் விண்ணவர்களின் மனக் கவலைகளையும் துயரங்களையும் அகற்றி அவர்களைக் காத்தருள்கின்றது. அது மாதங்கன் முதலிய பல அரக்கர்களை வெட்டி அழித்திருக்கிறது, அதனுடைய கூர்மையான நுனி அவ்வரக்கர்களின் ரத்தப்பெருக்கால் பூசப்பட்டு சிவந்த ஒளியுடன் விளங்குகிறது அதனால் ஆயிரக்கணக்கான சூரியர்கள்கூட அதற்குச்சமமான காந்தியை அடைய முடியாது. அது தனது சிறந்த ஒளியால் அச்சூரியர்களையும் பழிக்கின்றது. பார்ப்பதற்குப் பயங்கரமாகத் தோன்றும் அக்கோடலி நம்முடைய பாபமாகிய அடர்ந்த காட்டை வெட்டி அழித்தருளட்டும். (3)

மூலம் :—

कालारातेः कराग्रे कृतवसतिरुरःशाणशातो रिपूणां
काले काले कुलाद्रिप्रवरतनयया कल्पितस्नेहलेपः ।
पायान्नः पावकार्चिःप्रसरसखमुखः पापहन्ता नितान्तं
शूलः श्रीपादसेवाभजनरसजुषां पालनैकान्तशीलः ॥ ४ ॥

காலாராதே: கராக்ரே க்ருத வஸதிருர:ஶாண ஶாதோ ரிபூணாம்
காலே காலே குலாத்ரி ப்ரவர தனயயா கல்பித ஸ்நேஹ லேப: ।
பாயாந்ந: பாவகார்ச்சி:ப்ரஸர ஸகமுக: பாபஹந்தா நிதாந்தம்
ஶூல: ஸ்ரீபாத ஸேவா பஜந ரஸ ஜுஷாம் பாலநைகாந்த ஶீல: ॥

**कालारातेः**-யமனின் பகைவனான சிவபெருமானுடைய, **कराग्रे**-கையின் நுனியில், **कृतवसतिः**-செய்யப்பட்ட இருப்பிடத்தையுடையதும், **रिपूणां**-பகைவர்களுடைய, **उरःशाणशातः**-மார்பாகிற சாணைக்கல்லில் தீட்டப்பட்டதும், **काले काले**-அந்தந்த வேளைகளில், **कुलाद्रिप्रवरतनयया**-குல பர்வதங்களில் சிறந்த ஹிமவானின் பெண்ணாகிய பார்வதீதேவியால் **कल्पितस्नेहलेपः**-செய்யப்பட்ட எண்ணெயின் பூச்சையுடையதும், **पावकार्चिःप्रसरसखमुखः**-அக்னியின் ஜ்வாலைபோன்ற நுனியையுடையதும், **नितान्तं**-மிகவும், **पापहन्ता**-தீவினையை யழிப்பதும், **श्रीपाद**-சிவபெருமானுடைய திருவடிகளின், **सेवाभजन**-ஸேவையாகிய பக்தியின், **रस**-ரஸத்தை, **जुषां**-அனுபவிப்பவர்களுக்கு, **पालनैकान्त शीलः**-தவறாமல் காவல்

புரியும் தன்மை வாய்ந்ததுமான, शूलः-சூலம் என்ற ஆயுதம் नः-நம்மை, पायात्-காத்தருளட்டும்.

உலகங்கள் அனைவற்றையும் காத்தருளும் தன்மைவாய்ந்த உத்தமனான பரமசிவன் தன்னுடைய கையின் நுனியில் திரிசூலம் என்ற ஆயுதத்தைத் தாங்கி நிற்கின்றான். அது பகைவர்களுடைய மார்பாகிய சாணைக்கல்லில் தீட்டப்பட்டு மிகுந்த பதத்தைப்பெற்று விளங்குகின்றது. அது துருப்பிடித்து மழுங்கிப் போகாமல் இருப்பதற்காக மலையரசனின் திருமகளாகிய பார்வதியம்மையார் அதற்கு அடிக்கடி எண்ணை பூசிவருகின்றாள். அதன் நுனி மிகவும் நீளமாயும் கூர்மையாயும் அமைந்துள்ளது. அதனால் அது கொழுந்துவிட்டு எரியும் அக்னியின் நீண்டு வளர்ந்து வீசும் ஜ்வாலைபோல் விளங்குகின்றது. அது தன்னை யண்டிய அன்பர்களின் தீவினைகளைக் களைந்து அவர்களைப் பரிசுத்தர்களாகச் செய்கின்றது. மேலும் அது சிவபெருமானின் திருவடிகளைச் சேவித்து பக்தியெனும் இனிய ரஸத்தைப் பருகி ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்திருக்கும் பக்தர்களைக் காத்தருளும் தன்மை வாய்ந்தது. அவ்வாறு விளங்கும் திரிசூலம் நம்மைக் காத்தருளவேண்டும். (4)

மான் :—

देवस्याङ्काश्रयायाः कुलगिरिदुहितुर्नेत्रकोणप्रचार-
प्रस्तारानत्युदारान्पिपठिषुरिव यो नित्यमत्यादरेण ।
आधत्ते भङ्गितुङ्गैरनिशमवयवैरन्तरङ्गं समोदं
सोमापीडस्य सोऽयं प्रदिशतु कुशलं पाणिरङ्गः कुरङ्गः ॥

தேவஸ்யாங்காச்ரயாயா: குலகிரி துஹிதுர்
நேத்ர கோண ப்ரசார-
ப்ரஸ்தாரானத்யுதாரான் பிபடிஷுரிவ யோ நித்யமத்யாதரேண ।
ஆதத்தே பங்கி துங்கைரநிசமவயவைரந்தரங்கம் ஸமோதம்
ஸோமாபீடஸ்ய ஸோऽயம் ப்ரதிசது குசலம்
பாணிரங்க: குரங்க: ॥

यः-எந்த மான், देवस्य-பரமசிவனுடைய, अङ्काश्रयायाः-மடியை அடைந்திருக்கின்ற, कुलगिरिदुहितुः-குலபர்வதமான ஹிமவானின் பெண்ணான பார்வதீதேவியினுடைய, अत्युदारान्-மிகச்சிறந்த, नेत्रकोण-கடைக்கண்ணின், प्रचार-प्रस्तारान्-ஸஞ்சார வரிசைகளை, अत्यादरेण-மிகுந்த ஆதர

வுடன், नित्यं-எப்பொழுதும், पिपठिषुः इव-கற்றுக்கொள்ள விரும்பிய துபோல, भङ्गितुङ्गैः-வளைவுகளால் உயர்ந்த, अवयवैः-உறுப்புக்களால், सोमापीडस्य-சந்திரனை அணிகலமாகப் பெற்ற பரமேச்வரனுடைய, अन्तरङ्गं-மனதை, अनिशं-எப்பொழுதும், समोदं-மகிழ்வுடன் கூடியதாக, आधत्ते-செய்கின்றதோ, सः अयं-அப்படிப்பட்ட இந்த, पाणिरङ्गः-சிவபெருமானின் கையையே நாட்டியமேடையாகக்கொண்ட, कुरङ्गः-மான், कुशलं-க்ஷேமத்தை, प्रदिशतु-கொடுக்கட்டும்.

பரமேச்வரன் தன்னுடைய கையில் ஒரு அழகிய மானை ஏந்தி வைத்துக்கொண்டிருக்கின்றார். அவருடைய சடைகளை அவருடைய தலையில் விளங்கும் மதி அலங்கரித்துக்கொண்டிருக்கின்றது. அவருடைய மடியில் அன்னை பார்வதீதேவி அமர்ந்துகொண்டு தன்னுடைய கடைக்கண் பார்வைகளின் விலாஸங்களால் உலகங்கள் எல்லாவற்றையும் உய்வித்துக்கொண்டிருக்கிறாள். அவ்வன்னையின் கடாக்ஷவீக்ஷணங்கள் பக்தர்களுக்கு அநுக்ரஹம்செய்து அவர்களை ஆனந்தஸாகரத்தில் மூழ்கச்செய்வதில் முனைந்துள்ளன. அவ்வழகிய கடைக்கண் பார்வையிலுள்ள ஸஞ்சார வரிசைகளைக் கண்ட சிவபெருமான் கையில் திகழும் மான் அவைகளைத் தானும் கற்றுக்கொள்ள வேண்டுமென்று ஆவல் கொண்டதுபோலத் தன்னுடைய அங்கங்களைப் பலவாறாக வளைத்துக்கொண்டு பரமசிவனுக்கு மிகுந்த ஆனந்தத்தையளித்துக்கொண்டு விளங்குகின்றது. பரமேச்வரன் கையிலுள்ள அம்மான் அவ்வாறு தனது அங்கங்களை வளைப்பதால் அது பரமேச்வரனுடைய உள்ளங்கையாகிய அரங்கில் நடனம்புரிவதுபோல் காட்சியளிக்கிறது. அவ்வாறு அது நடனமாடும் ஆனந்தக்கூத்தனுக்கே ஆனந்தமளித்துக் கொண்டிருப்பதால் மிகச் சிறப்புடன் தோற்றமளிக்கிறது. அப்படிப்பட்ட அம்மான் நமக்கு நலன்களையளித்து நம்மைக் காத்தருளட்டும். (5)

விருஷபம் :—

कण्ठप्रान्तावसज्जत्कनकमयमहाघण्टिकाघोरघोषैः
कण्ठारावैरकुण्ठैरपि भरितजगच्चक्रवालान्तरालः ।
चण्डः प्रोद्दण्डशृङ्गः ककुदकबलितोत्तुङ्गकैलासशृङ्गः
कण्ठेकालस्य वाहः शमयतु शमलं शाश्वतः शाक्वरेन्द्रः ॥

கண்ட ப்ராந்தாவஸஜ்ஜத் கனகமய மஹாகண்டிகா கோர
கோஷை:
கண்டாராவைரகுண்டைரபி பரித ஜகச்சக்ரவாளாந்தராள: ।
சண்ட: ப்ரோத்தண்ட ச்ருங்க: ககுத கபலிதோத்துங்க
கைலாஸ ச்ருங்க:
கண்டேகாலஸ்ய வாஹ: ஶமயது ஶமலம் ஶாச்வத:
ஶாக்வரேந்த்ர: ||

**कण्ठ**–கழுத்தின், **प्रान्त**–ஓரத்தில், **अवसज्जत्**–சேர்ந்திருக்கிற, **कनकमय**–தங்கத்தாலான, **महा**–பெரிய, **घण्टिका**-மணியினுடைய, **घोर**–பயங்கரமான, **घोषैः**–முழக்கங்களாலும், **अकुण्ठैः**–மழுங்காத (மிகுந்த ஒலியுடன்கூடிய), **कण्ठारावैः अपि**–ஹம்பா என்ற கோஷங்களாலும், **भरित**–நிரப்பப்பட்ட, **जगच्चक्रवाल** – உலகமாகிய சக்கிரத்தின், **अन्तरालः** – இடைவெளிகளையுடையதும், **चण्डः**–மிகவும் பயங்கரமானதும், **प्रोद्दण्ड**–மிகவும் உயரமான, **शृङ्गः**–கொம்புகளையுடையதும், **ककुद**–(தன்னுடைய) திமிழால், **कबलित**–விழுங்கப்பட்ட, **उत्तुङ्ग**–மிகவும் உயரமான, **कैलास**–கைலயங்கிரியினுடைய, **शृङ्गः**–உச்சியையுடையதுமான, **कण्ठेकालस्य**–நீல நிறமுள்ள கழுத்தையுடைய பரமேச்வரனுடைய, **वाहः**–வாஹனமான, **शाश्वतः**–அழிவற்ற, **शाक्वरेन्द्रः**–விருஷபராஜன், **शमलं**–பாபத்தை, **शमयतु**–போக்கட்டும்.

பரமேச்வரனுடைய வாஹனம் அமரத்வம் வாய்ந்த சிறந்த விருஷபம். அதனுடைய கழுத்தில் மிகப் பெரிய தங்கமணி ஒன்று கட்டித் தொங்கவிடப்பட்டுள்ளது. அந்தக்காளை தனது தலைவனை கைலயம்பதியைக் கண்டவுடன் உரத்த குரலில் ஹம்பா என்று கத்துகின்றது. அப்பொழுது அதன் கழுத்தில் தொங்கும் அம்மணியும் பயங்கரமான நாதத்தை எழுப்புகின்றது. அவ்வாறு கிளம்பும் பயங்கரநாதம் அண்டசராசரங்கள் அனைவற்றையும் நிரப்பிவிடுகின்றது. அவ்வாறு உரக்கக் கத்தும் பொழுது அது மிகவும் பயங்கரமாகக் காணப்படுகின்றது. அதன் இரு கொம்புகளும் நீண்டு உயர்ந்திருப்பதால் அவைகள் பார்ப்பவர்களுக்கு அச்சத்தை உண்டுபண்ணுகின்றன. மேலும் அக்காளை வெள்ளிமலைபோன்ற மேனியை உடையதாக விளங்குகின்றது. அதனுடைய திமிழ் கைலாஸத்தின் சிகரத்தையே

ஜயித்துவிட்டதுபோல் உயர்ந்து தோன்றுகின்றது. அவ்வாறு சிறப்புற்றிருப்பதாலேயே ஹாலாஹல விஷத்தைப் பருகியதால் நீலமயமான கழுத்தையுடைய பரமேச்வரன் அதையே தன்னுடைய வாஹனமாக ஏற்றுக்கொண்டுவிட்டான் என்று தோன்றுகின்றது. அவ்வாறு விளங்கும் விருஷபராஜன் நம் தீவினைகளைக் களைந்து நம்மைக் காத்தருளவேண்டும்.

குறிப்பு :—சிவபெருமான் வசிக்கும் இடம் கைலயங்கிரி. அது வெண்மையானது. வெள்ளியினால் ஆனது. சிவபெருமானுடைய வாஹனம் விருஷபம். அதுவும் வெளுப்பானது. கைலயங்கிரி தனது சிகரத்தால் உயர்ந்து விளங்குகிறது. விருஷபமோவெனில் தனது அழகிய திமிழால் அச்சிகரத்தையே ஜயித்துவிடுகின்றது. அதனால் அவ்விருஷபம் பலத்த கோஷத்தைச் செய்கின்றது. அதன் கழுத்திலுள்ள மணியும் அதையனுசரித்து உத்கோஷிக்கின்றது. இந்த வெற்றி நாதம் உலகம் முழுவதும் பரவி நிற்கின்றது. இவ்வாறு உத்கோஷம் செய்யும் விருஷபம் நம்முடைய தீவினை என்ற அரக்கனையும் கொன்று இருமடங்காக வெற்றி பெறவேண்டும். (6)

**விநாயகர் :—**

**निर्यद्दानाम्बुधारापरिमलतरलीभूतरोलम्बपाली-**
**झंकारैः शंकराद्रेः शिखरशतदरीः पूरयन्भूरिघोषैः ।**
**शार्वः सौवर्णशैलप्रतिमपृथुवपुः सर्वविघ्नापहर्ता**
**शर्वाण्याः पूर्वसूनुः स भवतु भवतां स्वस्तिदो हस्तिवक्त्रः ॥**

*நிர்யத் தானாம்புதாரா பரிமல தரளீபூத ரோலம்ப பாளீ*
*ஜங்காரை: ஶங்கராத்ரே: ஶிகர ஶததரீ: பூரயன் பூரி கோஷை: ।*
*ஶார்வ: ஸௌவர்ண ஶைல ப்ரதிம ப்ருது வபு:*
*ஸர்வ விக்னாபஹர்த்தா*
*ஶர்வாண்யா: பூர்வ ஸூனு: ஸ பவது பவதாம் ஸ்வஸ்திதோ*
*ஹஸ்தி வக்த்ர: ॥*

**निर्यत्**-வெளிக்கிளம்புகின்ற, **दानाम्बु**-மதஜலத்தினுடைய, **धारा**-பெருக்கின், **परिमल**-வாஸனையால், **तरली-भूत**-சஞ்சலமடைந்த, **रोलम्बपाली**-வண்டுகளின் வரிசையின்

झङ्कारैः-ஜம் என்ற ஒலிகளாலும், भूरि-மிகுந்த, घोषैः-வீரிடுதல் களாலும், शङ्कराद्रेः-பரமேச்வரனுடைய மலையாகிய கைலாஸத்தின், शिखर-உச்சியிலுள்ள, शत-நூற்றுக்கணக்கான, दरीः-குகைகளை, पूरयन्-நிரப்புகிறவராயும், शार्वः-பரமேச்வரனுடைய குமாரனும், सौवर्णशैल-தங்கமயமான மேருமலைக்கு प्रतिम-ஒப்பான, पृथु-பருமனான, वपुः-உடலையுடையவரும், सर्व-எல்லா, विघ्न-இடையூறுகளையும், अपहर्ता-போக்குகின்றவரும், शर्वाण्याः-பார்வதீ தேவியினுடைய, पूर्वसूनुः-முதற் பிள்ளையுமான, सः-அந்த, हस्तिवक्त्रः-யானைமுகத்தோன், भवतां-உங்களுக்கு, स्वस्तिदः-நலனையளிப்பவராக, भवतु-இருக்கட்டும்.

கைலயம்பதியின் அருகில் அவரது திருக்குமாரனை கணபதியும் வீற்றிருக்கின்றார். அவர் யானை முகத்தையுடையவர். அதனால் அவரது கன்னங்களிலிருந்து நறுமணம் வாய்ந்த மதஜலம் பெருகிக்கொண்டிருக்கிறது. அதனால் இழுக்கப்பட்ட வண்டினங்கள் ரீங்காரத்துடன் அவரது முகத்தை வட்டமிடத் தொடங்குகின்றன. அதனால் அவர் வீரிட்டெழுகின்றார். அந்த நாதம் கைலயங்கிரியின் நூற்றுக்கணக்கான குகைகளில் எதிரொலிக்கின்றது. மேலும் அவர் மாசற்ற பொன்போன்ற பெரிய மேனிபடைத்தவர். இன்னல்கள் அனைவற்றையும் அகற்றும் ஆற்றல் பெற்றவர். பார்வதீ தேவியின் மூத்த மகன். இவ்வாறு சிறப்புற்று விளங்கும் யானைமுகத்தோன் நம் துயரத்தைத் தணித்து நமக்குப்பல நன்மைகளையும் ஈந்து நம்மைக் காத்தருள்வாராக.

(7)

ஸுப்ரஹ்மண்யர் :—

यः पुण्यैर्देवतानां समजनि शिवयोः श्लाघ्यवीर्यैकमत्या-
यन्नाम्नि श्रूयमाणे दितिजभटघटाः भीतिभारं भजन्ते ।
भूयात्सोऽयं विभूत्यै निशितशरशिखापाटितक्रौञ्चशैलः
संसारागाधकूपोदरपतितसमुत्तारकस्तारकारिः ॥ ८ ॥

ய: புண்யைர் தேவதாநாம் ஸமஜநி ஶிவயோ:
ஶ்லாக்ய வீர்யைகமத்யாத்
யந்நாம்னி ஶ்ரூயமாணே திதிஜ படகடா பீதிபாரம் பஜந்தே |
பூயாத் ஸோऽயம் விபூத்யை நிஶித ஶர ஶிகா
பாடித க்ரௌஞ்ச ஶைல:
ஸம்ஸாராகாத கூபோதர பதித ஸமுத்தாரகஸ் தாரகாரி: ||

**य:**-எந்த ஸ்கந்தன், **देवतानां**-தேவதைகளுடைய, **पुण्यैः**-புண்யங்களால், **शिवयोः**-பார்வதீ பரமேச்வரர்களுடைய, **श्लाघ्य**-புகழத்தக்க, **वीर्य**-வீர்யங்களின், **ऐकमत्यात्**-ஒன்று சேர்ந்ததால், **समजनि**-பிறந்தானோ, **यन्नाम्नि श्रूयमाणे**-எவனுடைய பெயர் கேட்கப்படும்பொழுது, **दितिजभटघटाः**-திதியின் பிள்ளைகளான அசுர வீரர்களின் கூட்டங்கள், **भीति-भारं**-மிகுந்த பயத்தை, **भजन्ते**-அடைகின்றனவோ, **निशित**-கூர்மையான **शर**-அம்புகளின் **शिखा**-நுனியால் **पाटित**-பிளக்கப்பட்ட **क्रौञ्चशैलः**-க்ரௌஞ்சம் என்ற மலையையுடையவராயும் **संसार**-ஸம்ஸாரமாகிய **अगाध**-ஆழமான **कूप**-கிணற்றின் **उदर**-நடுவில் **पतित**-விழுந்தவர்களை **समुत्तारकः**-கரையேற்றுபவராயும் உள்ள **सः अयं**-அப்படிப்பட்ட இந்த **तारकारिः**-தாரகனுடைய பகைவனை ஸ்கந்தன் **विभूत्यै**-சிறந்த செல்வத்திற்காக **भूयात्**- இருக்கட்டும்.

முன்பு தாரகன் என்ற ஒரு அரக்கன் தேவர்களைப் போரில் வென்று அவர்களுக்கு அளவுகடந்த இன்னல்களை விளைவித்துக் கொண்டிருந்தான். அத்தேவர்களின் புண்ய பலத்தால் லோக மாதாவான பார்வதீ தேவிக்கும் தந்தையான பரமேச்வரனுக்கும் ஸ்கந்தன் என்ற பிரஸித்தி வாய்ந்த திருக்குமாரன் பிறந்தான். அவன் தன்னுடைய கூர்மையான பாணங்களைக்கொண்டு க்ரௌஞ்சம் என்ற மலையைப் பிளந்து பரசுராமனுக்குத் தன்னுடைய திறமையைக்காண்பித்தான். அவனுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே அசுரர்கள் அனைவரும் அஞ்சி நடுங்கினர். ஞானக்கடவுளாக இருப்பதால் அவன் ஸம்ஸாரமென்ற ஆழமான கிணற்றில் வீழ்ந்து தவிக்கின்றவர்களைக் கரையேற்றுகின்றான். தாரகனைக்கொன்று தேவர்களின் இன்னல்களைக் களைந்த அந்த முருகப்பெருமான் நமக்குச் சிறந்த செல்வத்தைத் தந்து நம்மைக் காத்தருள்வாராக. (8)

**சாஸ்தா :—**

आरूढः प्रौढवेगप्रविजितपवनं तुङ्गतुङ्गं तुरङ्गं
चेलं नीलं वसानः करतलविलसत्काण्डकोदण्डदण्डः ।
रागद्वेषादिनानाविधमृगपटलीभीतिकृद्भूतभर्ता
कुर्वन्नाखेटलीलां परिलसतु मनःकानने मामकीने ॥ १ ॥

ஆரூட: ப்ரௌட வேக ப்ரவிஜித பவனம் துங்க துங்கம் துரங்கம்
சேலம் நீலம் வஸாந: கரதல விலஸத் காண்ட கோதண்ட தண்ட: ।
ராக த்வேஷாதி நாநாவித ம்ருக படலீ-பீதிக்ருத் பூத பர்த்தா
குர்வந்நாகேட லீலாம் பரிலஸது மன: கானனே மாமகீனே ॥

**प्रौढवेग**—அதிகமானவேகத்தினுல் **प्रविजितपवनं**- தோற்கடிக்கப்பட்ட வாயுவை உடையதும் **तुङ्गतुङ्गं**—மிகவும் உயரமானதுமான **तुरङ्गं**-குதிரையின்மேல் **आरूढः**-ஏறிக்கொண்டிருப்பவனுகவும் **नीलं**- நீல நிறமுள்ள **चेलं**—ஆடையை **वसानः**—அணிந்துகொண்டிருப்பவனுகவும் **करतल**—கையில் **विलसत्**—விளங்குகின்ற **काण्ड**—அம்பையும் **कोदण्ड**—வில்லின் **दण्डः**—தண்டத்தையுமுடையவனுகவும் **भूतभर्ता**—பூதகணங்களுக்குத் தலைவனுகவும் உள்ள ஹரிஹரபுத்ரன் **मामकीने**—என்னுடையதான **मनःकानने**—மனமாகிய காட்டில் **राग**-ஆசை **द्वेष**—வெறுப்பு **आदि**—முதலிய **नानाविध**—பலவிதமான **मृग**—விலங்குகளுடைய **पटली**-கூட்டத்திற்கு **भीतिकृत्**- பயத்தைச் செய்கின்றவனுக **आखेटलीलां**- வேட்டையாகிய விளையாட்டை **कुर्वन्**-செய்துகொண்டு **परिलसतु**—விளங்கட்டும்.

ஹரிஹரபுத்திரன் கறுப்பான ஆடைகளை அணிந்து காற்றைக் காட்டிலும் வேகமாகச் செல்லக்கூடிய உயர்ந்த குதிரையில் ஏறிக்கொண்டு வேட்டைக்காகப் புறப்படுகிருன். அப்பொழுது பூதகணங்கள் அவனைப் புடைசூழ்ந்து செல்கின்றன. அவனுடைய கையில் நீண்ட தண்டம்போன்ற கோதண்டமும் அம்பும் விளங்கிக்கொண்டிருக்கின்றன. அவ்வாறு காக்ஷியளிக்கும் அக்குமாரன் என்னுடைய மனமாகிய காட்டில் புகுந்து அங்கு சஞ்சரிக்கும் ஆசை, வெறுப்பு முதலிய கொடிய விலங்கினங்களை எப்பொழுதும் வேட்டையாடிக்கொண்டிருக்கட்டும்.

இங்கு விஷ்ணு சிவன் என்ற இரு தேவர்களுக்கும் பிறந்து சாஸ்தா என்று பிரஸித்திபெற்று விளங்கும் திருக்குமாரனை ஒரு வேடனாக உருவகப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. வேடராஜன் கருப்பாடையணிந்து உயர்ந்த குதிரையின்மேல் ஏறிக்கொண்டு கரத்தில் வில்லும் அம்பும் ஏந்தி கானகத்திற்குள் புகுந்து கொடிய விலங்குகளைக் கொல்கிறான். அவனை அவனது வீரர்கள் பின்பற்றிச் செல்கின்றனர். அதுபோலவே இக்கடவுளும் விளங்குகிறார். (9)

(அ) இரு சுலோகங்களால் பார்வதியை வர்ணிக்கிறார்:—

**अम्भोजाभ्यां च रम्भारथचरणलताद्वन्द्वकुम्भीन्द्रकुम्भै-**
**र्बिंबेनेन्दोश्च कम्बोरुपरि विलसता विद्रुमेणोत्पलाभ्याम् ।**
**अंभोदेनापि संभावितमुपजनिताडम्बरं शंबरारेः**
**शंभोः संभोगयोग्यं किमपि धनमिदं संभवेत्संपदे नः ॥**

அம்போஜாப்யாம் ச ரம்பா ரதசரண லதா த்வந்த்வ
கும்பீந்த்ர கும்பை:
பிம்பேநேந்தோச்ச கம்போருபரி விலஸதா
வித்ருமேணோத்பலாப்யாம் ।
அம்போதேனாபி ஸம்பாவிதமுப ஜனிதாடம்பரம் ஶம்பராரே:
ஶம்போ: ஸம்போக யோக்யம் கிமபி தனமிதம் ஸம்பவேத்
ஸம்பதே ந: ॥ 10

**अम्भोजाभ्यां**–இரண்டு தாமரைகளாலும், **रम्भा**–வாழை, **रथचरण**–தேரின் சக்கரம், **लता**–கொடி, **द्वन्द्वकुम्भीन्द्र**–சிறந்த யானையின், **कुम्भैश्च**–இரு மஸ்தகங்கள் இவைகளாலும், **इन्दोः** – சந்திரனுடைய, **बिम्बेन च**–பிம்பத்தாலும், **कम्बोः**– சங்கினுடைய, **उपरि**–மேலே, **विलसता**–விளங்குகின்ற, **विद्रुमेण**–பவழத்தாலும், **उत्पलाभ्यां**–இரண்டு அல்லிப் புஷ்பங்களாலும், **अम्भोदेन अपि**–மேகத்தாலும், **संभावितं**–மிகச் சிறந்ததாகக் கருதப்பட்டதும், **शंबरारेः** – மன்மதனுக்கு, **उपजनिताडम्बरं**–கர்வத்தை உண்டுபண்ணக்கூடியதும், **शंभोः** – பரமசிவனுக்கு, **संभोगयोग्यं** – அனுபவிக்கத்தக்கதுமான, **किमपि**–வர்ணிக்கமுடியாத, **इदं धनं**-இந்தச் செல்வம்,

नः-நமக்கு, संपदे-ஐசுவர்யத்தின் பொருட்டு, संभवेत्-இருக்கட்டும்.

இந்த சுலோகத்தில் பார்வதீ தேவியின் ஸௌந்தர்யத்தை மிக்க அழகான ரீதியில் வர்ணிக்கிறார். கவிகள் நாரீமணிகளை வர்ணிக்கும்பொழுது ஒவ்வொரு அவயவத்திற்கும் ஒவ்வொன்றை உபமானமாகக் கூறுவார்கள். அதாவது: தாமரை போன்ற பாதங்கள், வாழை போன்ற துடைகள், தேர்ச்சக்கரம் போன்ற இடுப்பு, கொடி போன்ற ரோமாவளி, யானையின் மஸ்தகம் போன்ற ஸ்தனங்கள், சந்திரபிம்பம் போன்ற வதனம், சங்கம் போன்ற கண்டம், சங்கத்தின் மேல் பவழம் தொங்குவதுபோல் சிவந்த அதரம். நீலோத்பலம் போன்ற கூந்தல் இவ்விதமாகத் தான் வர்ணிப்பது வழக்கம், இதன்மூலம் அப்பெண்மணி மிகச் சிறந்த அழகுள்ளவள் என்பதைக் காட்டுவார்கள். இவ்வாறு பார்வதியின் அங்கங்களை வர்ணிப்பதில் ஆசார்யாளுக்கு இஷ்டமில்லை. ஏனெனில் உபமேயத்தைவிட உபமானம் சிறந்தது என்பதுதான் யாவரும் ஒப்புக்கொண்ட உண்மை. ஆகையால் பார்வதியின் அங்கங்கள் அழகுள்ளவை என்று காட்டப்பட்ட போதிலும் உபமானமாகக் கூறப்பட்ட தாமரை முதலியவைகள் பார்வதியின் அங்கங்களைவிடச் சிறந்தவை என்பதும் தானாகவே கிடைத்துவிடும் இதற்காக தாமரை முதலியவைகளை இங்கு உபமானமாகக் கூறாமல் கவிகள் உபமானமாகக் கூறும் தாமரை முதலியவைகள் பார்வதியின் அங்க லாவண்யத்தைப் பார்த்து "நாங்கள் உபமானமாயிருக்கத் தகுதியற்றவர்கள். எங்கள் அழகைவிட பார்வதியின் அங்கம் கோடி மடங்கு அழகு பொருந்தியது" என்று கூறி பார்வதியைப் போற்றுகின்றனவாம். இதிலிருந்து பார்வதியின் அங்க லாவண்யம் வாக்குக்கு எட்டாதது என்று கிடைக்கிறது. இந்த அழகைப் பார்த்து 'பரமசிவனையும் ஜயிப்பேன்' என்று மன்மதன் கர்வம்கொள்ளுகிறான். இந்த அழகுச்செல்வம் பரமசிவன் ஒருவனுக்கே உரியது. பரமசிவனுக்கு எல்லாச் செல்வமும் இவள்தான். இவளால்தான் பரமசிவன் ஈச்வரனாக ஆகிறார். பரமசிவனுடைய செல்வமான பார்வதி நமக்கு ஐசுவர்யத்தையளிக்கட்டும். (10)

वेणीसौभाग्यविस्मापिततपनसुताचारुवेणीविलासा-
न्वाणीनिर्धूतवाणीकरतलविधृतोदारवीणाविरावान् ।

एणीनेत्रान्तभङ्गीनिरसननिपुणापाङ्गकोणानुपासे
शोणान्प्राणानुदूढप्रतिनवसुषमाकन्दलानिन्दुमौलेः ॥

வேணீ ஸௌபாக்ய விஸ்மாபித தபனஸுதா சாருவேணீ
விலாஸான்
வாணீ நிர்தூத வாணீ கரதல வித்ருதோதார வீணா விராவான் ।
ஏணீ நேத்ராந்த பங்கீ நிரஸன நிபுணாபாங்க கோணானுபாஸே
ஶோணான் ப்ராணானுதூட ப்ரதிநவ ஸுஷமா
கந்தலானிந்துமௌளே: ॥

**वेणी** - கூந்தலின், **सौभाग्य** - அழகால், **विस्मापित** - வியக்கும்படி செய்யப்பட்ட, **तपनसुता** - ஸூர்யனுடைய பெண்ணான யமுனையின், **चारु** - மனோஹரமான, **वेणी-विलासान्** - பிரவாஹங்களின் விலாஸங்களையுடையவைகளும் **वाणी** - பேச்சினால், **निर्धूत** - உதறித்தள்ளப்பட்ட, **वाणी** - ஸரஸ்வதி தேவியின் **करतल** - கையில், **विधृत** - தாங்கப்பட்ட, **उदार** - சிறந்த, **वीणा** - வீணையின், **विरावान्** - நாதங்களையுடையவைகளும், **एणी** - பெண்மானின், **नेत्रान्त** - கண் ஓரங்களின், **भङ्गी** - கோணல்களை, **निरसन** - விரட்டுவதில், **निपुण** - தேர்ச்சிபெற்ற, **अपाङ्गकोणान्** - கடைக்கண் பார்வைகளை உடையவைகளும், **शोणान्** - சிவந்தவைகளும், **उदूढ-प्रतिनवसुषमाकन्दलान्** - புதிது புதிதாக முளைவிடும் அழகைத் தாங்கிக்கொண்டுள்ளதுமான, **इन्दुमौलेः** - பரமசிவனுடைய, **प्राणान्** - ப்ராணன்களை (ப்ராணனாக விளங்கும் பார்வதீ தேவியை) **उपासे** - உபாஸிக்கிறேன்.

பார்வதீதேவியின் கூந்தல்கள் கருத்து நீண்டவைகள். அவைகள் யமுனா நதியின் பிரவாஹத்தைக் காட்டிலும் மிகுந்த அழகுவாய்ந்தவைகள். ஆதலால் அவைகளைக்கண்டு யமுனையின் இருண்ட பிரவாஹங்களே வியப்படைகின்றன. மேலும் அவளுடைய பேச்சில் உள்ள இயற்கையான இனிமை எல்லோரையும் மகிழ்விக்கின்றது. அது வாக்தேவியின் வீணையில் எழும் இனிய நாதத்தையும் புறக்கணிக்கும் தன்மைவாய்ந்தது. அவளுடைய மனோஹரமான கடைக்கண் பார்வைகள் பெண் மானின் மிரண்ட பார்வைகளையும் தோற்கச் செய்கின்றன. அவளுடைய அழகு

ஒவ்வொரு விநாடியும் புதிது புதிதாக மிளிர்கின்றது. அவள் செந்நிறம் பொருந்திய மேனியுடையவளாகக் காணப்படுகிருள். அவளே பரமசிவனுடைய பிராணன். அத்தகைய பார்வதீ தேவியை நான் உபாஸிக்கிறேன். (11)

**ப்ரமதகணங்கள்:—**

नृत्तारंभेषु हस्ताहतमुरजधिमिद्धिंकृतैरत्युदारै-
श्चित्तानन्दं विधत्ते सदसि भगवतः सन्ततं यः स नन्दी ।
चण्डीशाद्यास्तथान्ये चतुरगुणगणप्रीणितस्वामिसत्का-
रोत्कर्षोद्यत्प्रसादाः प्रमथपरिवृढाः पान्तु संतोषिणो नः ॥

ந்ருத்தாரம்பேஷு ஹஸ்தாஹத முரஜ திமித்திம் க்ருதை
ரத்யுதாரை:
சித்தாநந்தம் விதத்தே ஸதஸி பகவத: ஸந்ததம் ய: ஸ நந்தீ 1
சண்டீசாத்யாஸ்ததாऽன்யே சதுர குண கண ப்ரீணித
ஸ்வாமி ஸத்கா
ரோத்கர்ஷோத்யத் ப்ரஸாதா: ப்ரமத பரிவ்ருடா: பாந்து
ஸந்தோஷிணோ ந: 12

यः—எவர், सदसि—ஸபையில், नृत्तारंभेषु-நர்த்தனம் செய்யும் சமயங்களில், अत्युदारैः—மிகவும் புகழத்தகுந்த, हस्त—கைகளால், आहत-அடிக்கப்பட்ட, मुरज—மிருதங்க வாத்தியத்தினுடைய, धिमिद्धिंकृतैः—திமிதிம் என்ற ஒலிகளால், सन्ततं—எப்பொழுதும், भगवतः-பகவானுக்கு, चित्तानन्दं—மனதிற்கு மகிழ்ச்சியை, विधत्ते-செய்கின்ருரோ, सः—அந்த, नन्दी-நந்திகேச்வரரும், तथा-அப்படியே, चतुर-சாமர்த்யமான, गुणगण-குணங்களின் கூட்டங்களால், प्रीणित—சந்தோஷப்படுத்தப்பட்ட, स्वामि—யஜமானுடைய, सत्कारोत्कर्ष-சிறந்த மரியாதையால், उद्यत्प्रसादाः—கிளம்பிய அனுக்ரஹங்களையுடையவர்களாயும், सन्तोषिणः—மட்டிலா ஆனந்தமுடையவர்களாகத் திகழ்கின்ற अन्ये—மற்ற, चण्डीशाद्याः-சண்டீசன் முதலிய, प्रमथपरिवृढाः—பிரமதகணங்களின் தலைவர்களும், नः—நம்மை, पान्तु-காப்பாற்றட்டும்.

சிவபெருமான் நடனமாடுவதில் பிரியமுடையவர். அவர் நடனமாடும் ஸமயங்களிலெல்லாம் அவரது மெய்க்காப்பாளனை நந்திகேச்வரர் மத்தள வாத்யத்தையெடுத்து தனது இரு கரங்களாலும் அதைத் தட்டுகிறார். அப்பொழுது திம் திம் என்ற ஒலிகள் கிளம்புகின்றன. அச்சப்தங்களைக்கேட்டுப் பரமசிவன் மிகுந்த சந்தோஷத்தையடைகிறார். சண்டேசன் முதலிய சிவகணங்களுடைய தலைவர்களும் தங்கள் தங்களுடைய சிறந்த குணங்களால் சிவபெருமானைப் போற்றி வழிபடுகின்றனர். அதனால் திருப்தியடையும் பரமேச்வரன் அவர்களுக்கு அனுக்ரஹம் செய்கிறார். அதனால் அச்சிவகணத்தலைவர்கள் அழிவற்ற ஆனந்தத்தை அடைகின்றனர். இவ்வாறு பேரின்பம் பெற்ற நந்திகேச்வரரும், மற்றும் சண்டேசன் முதலிய சிவகணத்தலைவர்களும் நம்மைக் காப்பாற்றியருளவேண்டும். (12)

(அ) பரமசிவன் வசிக்கும் மாளிகையை வர்ணிக்கிறார்:—

मुक्तामाणिक्यजालैः परिकलितमहासालमालोकनीयं
प्रत्युप्तानर्घरत्नैर्दिशि दिशि भवनैः कल्पितैर्दिक्पतीनाम् ।
उद्यानैरद्रिकन्यापरिजनवनितामाननीयैः परीतं
हृद्यं हृद्यस्तु नित्यं मम भुवनपतेर्धाम सोमार्धमौलेः ॥

முக்தா மாணிக்ய ஜாலை: பரிகலித மஹாஸாலமாலோகநீயம்
ப்ரத்யுப்தானர்க்க ரத்னைர் திசி திசி பவனை: கல்பிதைர்
திக்பதீனாம் ।
உத்யானை ரத்ரிகன்யா பரிஜன வனிதா மானனீயை: பரீதம்
ஹ்ருத்யம் ஹ்ருத்யஸ்து நித்யம் மம புவனபதேர் தாம
ஸோமார்த்தமௌளே: ‖ 13

**मुक्तामाणिक्यजालैः**-முத்துக்கள், மாணிக்கங்கள் இவைகளின் கூட்டங்களால், **परिकलितमहासालं**-கட்டப்பட்ட பெரிய கோட்டைச் சுவர்களையுடையதாயும், **आलोकनीयं**-பார்க்கத்தக்கதாயும், **दिशि दिशि**-ஒவ்வொரு திசையிலும், **कल्पितैः**-கட்டப்பட்ட, **प्रत्युप्त**-பதிக்கப்பட்ட, **अनर्घ**-விலை மதிக்கமுடியாத, **रत्नैः**-ரத்னங்களையுடைய, **दिक्पतीनां**-திக்பாலர்களுடைய, **भवनैः**-வீடுகளாலும், **अद्रिकन्या**-மலை

யரசனின் மகளாகிய பார்வதீ தேவியின், **परिजनवनिता**-பணிப்பெண்களால், **माननीयैः**-சேவிக்கத்தக்கதான, **उद्यानैः**-தோட்டங்களாலும், **परीतं** - சூழப்பட்டதும், **हृद्यं** - மனதைக் கவரக்கூடியதுமான, **भुवनपतेः**-உலகனைத்திற்கும் தலைவனை, **सोमार्धमौलेः**-பிறைச்சந்திரனைத் தலையில் கொண்ட பரமேச்வரனுடைய, **धाम**-இருப்பிடம், **नित्यं**-எப்பொழுதும் **मम**-என்னுடைய, **हृदि**-மனதில், **अस्तु**-விளங்கட்டும்.

உலகங்களைக் காத்தருளும் பரமேச்வரன் வசிக்கும் மாளிகை முத்துக்களும் மாணிக்கங்களும் இழைத்த கோட்டைச்சுவர்களால் சூழப்பட்டுள்ளது. அதைச் சுற்றிலும் திக்பாலகர்கள் வசிக்கும் வீடுகள் அமைந்துள்ளன. அவைகளில் ரத்னங்கள் பதிக்கப் பெற்றுள்ளன. மேலும் அழகிய தோட்டங்கள் சிவபெருமானுடைய வீட்டைச் சுற்றிலும் அமைந்துள்ளன. அவற்றில் பார்வதீ தேவியின் தாதிகள் உலாவுகின்றனர். அப்பெருமானுடைய பவனம் பார்ப்பதற்கு மிகவும் அழகு வாய்ந்ததாய் விளங்குகின்றது. இவ்வாறு விளங்கும் பரமசிவனுடைய இருப்பிடம் என்னுடைய மனதில் எப்பொழுதும் விளங்கட்டும். (13)

(அ) ஸபையை வர்ணிக்கிறார் :—

स्तम्भैर्जम्भारिरत्नप्रवरविरचितैः संभृतोपान्तभागं
शुम्भत्सोपानमार्गं शुचिमणिनिचयैर्गुम्भितानल्पशिल्पम् ।
कुम्भैः संपूर्णशोभं शिरसि सुघटितैः शातकुम्भैरपङ्कैः
शंभोः संभावनीयं सकलमुनिजनैः स्वस्तिदं स्यात्सदो नः ॥ १४ ॥

ஸ்தம்பைர் ஜம்பாரி ரத்ன ப்ரவர விரசிதை:
ஸம்ப்ருதோபாந்த பாகம்
ஶும்பத் ஸோபான மார்கம் ஶுசி மணி நிசயை:
கும்பிதாநல்ப ஶில்பம் ।
கும்பை: ஸம்பூர்ண ஶோபம் ஶிரஸி ஸுகடிதை:
ஶாதகும்பைரபங்கை:
ஶம்போ: ஸம்பாவனீயம் ஸகல முனிஜனை: ஸ்வஸ்திதம்
ஸ்யாத் ஸதோ ந: ॥

**जम्भारिरत्नप्रवरविरचितैः**-சிறந்த இந்திர நீலக்கற்களால் செய்யபபட்ட, **स्तम्भैः**-தூண்களால், **सम्भृतोपान्तभागं**-சூழப் பட்ட சுற்றுப்பக்கங்களையுடையதாயும், **शुचिमणिनिचयैः**-மாசற்ற இரத்னங்களின் கூட்டங்களால், **शुम्भत्सोपानमार्गं**-விளங்குகின்ற படிக்கட்டின் வழியையுடையதாயும், **गुम्भितानल्पशिल्पं**-சேர்க்கப்பட்ட மிகுந்த சித்திரக்கலைகளையுடைய தாயும், **शिरसि** மேல்பாகத்தில், **सुघटितैः**-நன்கு பொருத்தப் பட்ட, **अपङ्कैः** அழுக்கில்லாத, **शातकुम्भैः**-தங்கமயமான, **कुम्भैः**-கலசங்களால், **संपूर्णशोभं**-நிறைந்த காந்தியையுடைய தாயும், **सकलमुनिजनैः**-எல்லா முனிவர்களாலும், **सम्भावनीयं**-போற்றத்தக்கதாயும் உள்ள, **शम्भोः**-பரமசிவனுடைய, **सदः**-ஸபை, **नः**-நமக்கு, **स्वस्तिदं**-க்ஷேமத்தைக் கொடுப்பதாக **स्यात्**-இருக்கட்டும்.

*பரமசிவனின் சித்ஸபை மிகுந்த அழகுவாய்ந்தது. அது இந்திர நீலக்கற்களால் ஆன தூண்களால் ஓரங்களில் தாங்கப் பட்டு விளங்குகின்றது மேலும் அது மாசற்ற வெண்மையான இரத்தினங்களால் செய்யப்பட்டுப் பல சித்திர வேலைப்பாடு களுடன் கூடிய சிறந்த படிக்கட்டையுடையது. அதன் உச்சியில் தங்கக்கலசங்கள் அமைந்துள்ளன. மாமுனிவர்கள் அனைவரும் அங்கு வந்து வீற்றிருக்கின்றனர். அவ்வாறு சிறந்து விளங்கும் அச்சித்சபை நம்மனைவருக்கும் க்ஷேமத்தையளிக்கவேண்டும்,* (14)

**பரமசிவன் அமரும் ஆஸனம் :—**

**न्यस्तो मध्ये सभायाः परिसरविलसत्पादपीठाभिरामो**
**हृद्यः पादैश्चतुर्भिः कनकमणिमयैरुच्चकैरुज्ज्वलात्मा ।**
**वासोरत्नेन केनाप्यधिकमृदुतरेणास्तृतो विस्तृतश्रीः**
**पीठः पीडाभरं नः शमयतु शिवयोः स्वैरसंवासयोग्यः ॥ १५ ॥**

*ந்யஸ்தோ மத்யே ஸபாயா: பரிஸர விலஸத் பாத பீடாபிராமோ*
*ஹ்ருத்ய: பாதைச்சதுர்பி: கனக மணிமயை-*
*ருச்சகைருஜ்வலாத்மா ]*

வாஸோ ரத்னேன கேனப்யதிக ம்ருதுதரேணாஸ்த்ருதோ
விஸ்த்ருதஸ்ரீ:
பீட: பீடா பரம் ந: ஶமயது ஶிவயோ: ஸ்வைர ஸம்வாஸ
யோக்ய: ॥ 51

**सभायाः**-ஸபையின், **मध्ये**-நடுவில், **न्यस्तः**-வைக்கப்பட்டதும், **परिसर**-பக்கத்தில், **विलसत्**-விளங்குகின்ற, **पादपीठ**-பாதம் வைக்கும் பீடத்தால், **अभिरामः**-அழகுவாய்ந்ததும், **उच्चैः**-உயரமான, **कनकमणिमयैः** – பொன், ரத்னம் இவைகளால் செய்யப்பட்ட, **चतुर्भिः**-நான்கு, **पादैः**-கால்களால், **हृद्यः** – மனத்தைக் கவருகின்றதும், **उज्ज्वलात्मा** - பிரகாசிக்கின்ற ஸ்வரூபத்தையுடையதும், **अधिकमृदुतरेण** - மிகுந்த மென்மைவாய்ந்த, **केनापि**-வர்ணிக்கமுடியாத, **वासोरत्नेन**-சிறந்த வஸ்திரத்தினால், **आस्तृतः**-மூடப்பட்டதும், **विस्तृतश्रीः**-பரந்த காந்தியையுடையதாயும், **शिवयोः**-பார்வதீபரமேச்வரர்களுக்கு, **स्वैरसंवाससयोग्यः**-தனிமையில் இஷ்டப்படி இருக்கத்தக்கதுமான, **पीठः**-ஆஸனமானது, **नः**-நம்முடைய, **पीडाभरं**-துன்பச்சுமையை, **शमयतु**-ஒடுக்கட்டும்.

சிவபெருமானுடைய ஆஸனம் ஸபையின் நடுவில் வைக்கப்பட்டுள்ளது. அது இரத்தினங்கள் பதித்த நான்கு உயரமான தங்கக் கால்களால் தாங்கப்பட்டுள்ளது. அப்பீடத்தின் மேல் மென்மையான சிறந்த வஸ்திரம் விரிக்கப்பட்டுள்ளது. அது பார்வதீ பரமேச்வரர்கள் தங்களிஷ்டப்பட்டபடி வீற்றிருக்கத் தகுதிவாய்ந்தது. இதன் அருகில் கால்களை வைத்துக் கொள்ளத் தனியாக ஒரு பீடம் உள்ளது. அவ்வாறு சிறந்து விளங்கும் அப்பீடம் நம்முடைய துன்பங்கள் எல்லாவற்றையும் களையட்டும்.

(15)

திருவடிகள் :—

आसीनस्याधिपीठं त्रिजगदधिपतेरंघ्रिपीठानुषक्तौ
पाथोजाभोगभाजौ परिमृदुलतलोल्लासिपद्मादिरेखौ ।
पातां पादावुभौ तौ नमदमरकिरीटोल्लसच्चारुहीर-
श्रेणीशोणायमानोन्नतनखदशकोद्भासमानौ समानौ ॥ १६ ॥

ஆஸீனஸ்யாதிபீடம் த்ரிஜகததிபதேரங்க்ரிபீடானுஷக்தௌ
பாதோஜாபோக பாஜௌ பரிம்ருதுல தலோல்லாஸி
பத்மாதி ரேகௌ ।
பாதாம் பாதாவுபௌ தௌ நமதமர கிரீடோல்லஸச்சாரு ஹீர
ச்ரேணீ சோணாய மானோன்னத நக
தசகோத்பாஸமானௌ ஸமானௌ ॥ 16

अधिपीठं-பீடத்தில், आसीनस्य-அமர்ந்துள்ள, त्रिजगदधिपतेः-மூன்று உலகங்களுக்கும் தலைவரான பரமேச்வரரின் अंघ्रिपीठानुषक्तौ - பாதபீடத்தில் அமைந்துள்ளவைகளாயும், पाथोजाभोगभाजौ-தாமரைகளின் வடிவத்தை அடைந்தவைகளாயும், परिमृदुल-மிகுந்த மென்மை வாய்ந்த, तलोल्लासि-உள்ளங்காலில் பிரகாசிக்கும், पद्मादि-தாமரை முதலிய, रेखौ ரேகைகளுடையவைகளாயும், नमदमर-(தன்னை) வணங்கும் விண்ணவர்களுடைய, किरीटोल्लसत्-முகுடங்களில் விளங்கும், चारु-அழகிய, हीर-இரத்தினங்களுடைய, श्रेणी-வரிசைகளால், शोणायमान-சிவந்ததாக இருக்கும், उन्नत-உயர்ந்த नखदशक - பத்து நகங்களால், उद्भासमानौ-உயர்ந்தகாந்தியுடையவைகளாயும், समानौ-ஒரே மாதிரியாகவும் உள்ள, तौ -அந்த, उभौ-இரண்டு, पादौ-பாதங்களும், पाताम्-(நம்மை) காத்தருளட்டும்.

பரமேச்வரனுடைய இரண்டு பாதங்களும் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. அவைகள் செந்தாமரைகள்போல் மிகவும் அழகாக விளங்குகின்றன. அவைகளின் உட்பகுதியில் பத்மம் சங்கம் முதலிய ரேகைகள் காணப்படுகின்றன. அப்பாத பத்மங்களில் விண்ணுலகத்தவரனைவரும் வந்து தண்டனிட்டு வணங்குகின்றனர். அதனால் அவர்களுடைய கிரீடங்களில் பதித்த இரத்தினங்களின் ஒளி அவற்றின்மேல் பரவுகின்றது. அப்பொழுது கால்களிலுள்ள பத்து நகங்களும் சிவந்து விளங்குகின்றன. அவ்வாறு அரியாஸனத்தில் அமர்ந்திருக்கும் அரனுடைய திருப்பாத கமலங்கள் நம்மைக் காத்தருளட்டும். (16)

(அ) நூபுரம்-திருப்பாதங்களில் அணிந்துள்ள சலங்கைகள்:

यन्नादो वेदवाचां निगदति निखिलं लक्षणं पक्षिकेतो-
लक्ष्मीसंभोगसौख्यं विरचयति ययोश्चापरो रूपभेदः ।
शंभोः संभावनीये पदकमलसमासङ्गतस्तुङ्गशोभे
माङ्गल्यं नः समग्रं सकलसुखकरे नूपुरे पूरयेताम् ॥ १७ ॥

யந்நாதோ வேத வாசாம் நிகததி நிகிலம் லக்ஷணம் பக்ஷி கேதோ:
லக்ஷ்மீ ஸம்போக ஸௌக்யம் விரசயதி யயோஸ்சாபரோ
ரூபபேத: 1
ஶம்போஸ்ஸம்பாவனீயே பதகமல ஸமாஸங்கதஸ் துங்க ஶோபே
மாங்கல்யம் ந: ஸமக்ரம் ஸகல ஸுககரே நூபுரே பூரயேதாம் ॥

**यन्नादः**–எவைகளின் ஒலி, **वेदवाचां**–மறைகளின் வாக்குகளுடைய, **निखिलं** - எல்லா, **लक्षणं** - இலக்கணத்தையும், **निगदति**-நன்கு உரைக்கின்றதோ, **ययोः** – எவைகளுடைய, **अपरः**–மற்றொரு, **रूपभेदः**–வடிவமாற்றம், **पक्षिकेतोः**-கருடனை கொடியாகக்கொண்ட மஹாவிஷ்ணுவிற்கு, **लक्ष्मी**-இலக்குமியுடன், **संभोग**-கூடுவதால் உண்டாகும், **सौख्यं**-இன்பத்தை, **विरचयति**–செய்கின்றதோ, **संभावनीये** – எல்லோராலும் மதிக்கத்தகுந்த, **शम्भोः**–பரமேச்வரனுடைய, **पदकमल** – செந்தாமரைகள் போன்ற பாதங்களுடைய, **समासङ्गतः**–சேர்க்கையால், **तुङ्गशोभे**-சிறந்த காந்திவாய்ந்தவைகளும், **सकल**- அனைவருக்கும், **सुखकरे**-இன்பத்தை விளைவிக்கின்றவைகளுமான, **नूपुरे**–சலங்கைகள், **नः**–நமக்கு, **समग्रं**–எல்லா, **माङ्गल्यं**–மங்களத்தையும், **पूरयेताम्**–நிரப்பச்செய்யட்டும்.

ஆதிசேஷனே பரமேச்வரனுடைய கால் சலங்கைகளாகக் காட்சியளிக்கின்றார். அவரே பதஞ்ஜலி மகரிஷியாக அவதரித்து பாணினியின் வியாகரண ஸூத்திரங்களுக்குச் சிறந்த விரிவுரை வகுத்துக்கூறியுள்ளார். அதற்கு மஹா பாஷ்யம் என்று சிறப்புப் பெயர் அமைந்துள்ளது. அந்த மஹா பாஷ்யமே வேதங்களிலுள்ள சொற்களுக்கு இலக்கணம் கூறுகின்றது. ஆதலால் இங்கு பரமேச்வரனுடைய கால் சதங்கைகளின் நாதமே வேதவாக்குகளுக்கு இலக்கணம் செப்புகின்றது என்று இயம்புகின்றார் நமது பரமாசார்யராக விளங்கும் ஆதிசங்கர பகவத்பாதர். மேலும்

சலங்கைகளாக உருவெடுத்த ஆதிசேஷனே தனது சுயரூபத்தில் கருடக்கொடியோனுகிய மஹாவிஷ்ணுவிற்குப் படுக்கையாகக் காக்ஷியளிக்கின்ருர். அவ்வாறு விளங்கும் அச்சேஷசயனத்தில் மகாவிஷ்ணு தனது இல்லாளான இலக்குமிதேவியுடன் சேர்ந்து உரங்கிக்கொண்டு நிரதிசயமான ஆனந்தத்தை அடைகின்ருர். இவ்வாருகப் பரமசிவனுடைய கால் சதங்கைகளின் மற்ருெரு தோற்றமான ஆதிசேஷ சயனம் அம்மஹாவிஷ்ணுவிற்குச் சிறந்த இன்பத்தையூட்டுகின்றது. பரமேச்வரனுடைய பாதகமலங்களின் சேர்க்கையால் அந்தத் தண்டைகள் சிறந்த பொலிவைப்பெற்று விளங்குகின்றன, அதனுலேயே அவைகள் அனைவராலும் போற்றப்படுகின்றன. அவைகள் எல்லாவிதமான இன்பங் களையும் தருகின்றன. அவ்வாறு விளங்கும் சலங்கைகள் நமக்குப் பரிபூர்ணமான ஆனந்தத்தையளிக்கட்டும். (17)

**ஜங்கைகள் :—**

**अङ्गे शृङ्गारयोनेः सपदि शलभतां नेत्रवह्नौ प्रयाते**
**शत्रोरुद्धृत्य तस्मादिषुधियुगमधो न्यस्तमग्रे किमेतत् ।**
**शङ्कामित्थं नतानाममरपरिषदामन्तरङ्कूरयत्त-**
**त्संघातं चारु जङ्घायुगमखिलपतेरंहसां संहरेन्नः ॥ १८ ॥**

*அங்கே ஶ்ருங்கார யோனே: ஸபதி ஶலபதாம் நேத்ர வஹ்னெள ப்ரயாதே*
*ஶத்ரோருத்த்ருத்ய தஸ்மாதிஷுதியுகமதோ ந்யஸ்தமக்ரே கிமேதத் ।*
*ஶங்காமித்தம் நதானமமர பரிஷதாமந்தரங்கூரயத்தத்*
*ஸங்காதம் சாரு ஜங்கா யுக மகிலபதேரம்ஹஸாம் ஸம்ஹரேந்ந: ॥*

**शृङ्गारयोनेः**-மன்மதனுடைய, **अङ्गे**-அவயவம், **नेत्रवह्नौ**-(சிவபெருமானுடைய) நெற்றிக்கண்ணில் உண்டான தீயில், **शलभतां**-விட்டில்பூச்சியின் தன்மையை, **सपदि**-உடனேயே, **प्रयाते**-அடைந்தவுடன், **तस्मात् शत्रोः**-அந்தப்பகைவனிடமிருந்து, **इषुधियुगं**-இரண்டு அம்புராத்தூணிகளையும், **उद्धृत्य**-தனியாக எடுத்து, **अग्रे**-முன்னுல், **अधः**-கீழே, **न्यस्तं किम् एतत्**-வைக்கப்பட்டதுதானு இது? **इत्थं**-இம்மாதிரி

**नतानां**-(தன்னை) வணங்கிய, **अमरपरिषदां**-தேவர் கூட்டங்களின், **अन्तः**-மனதில், **शङ्कां**-ஐயத்தை, **अंकुरयत्**-முளைக்கச் செய்கின்ற, **चारु**-அழகிய, **अखिलपतेः**-அனைவற்றிற்கும் தலைவனை பரமேச்வரனுடைய, **तत्**-அந்த, **जङ्घायुगं**-இரண்டு முழங்கால்களும், **नः**-நம்முடைய, **अंहसां**-பாபங்களின், **संघातं**-கூட்டத்தை, **संहरेत्**-நாசம் செய்யட்டும்.

பரமேச்வரனுடைய இரண்டு முழங்கால்களும் அம்புறுத் தூணிகள் போல் விளங்குகின்றன. அவைகளைக் கண்ணுற்ற அமரர்களின் கூட்டங்கள், சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணிலிருந்து கிளம்பிய தீயால் மன்மதன் எரிக்கப்பட்டவுடன் சிவபெருமான் அவனுடைய இரண்டு அம்புறுத்தூணிகளையுமே எடுத்துத் தன்முன்னல் கீழே வைத்துக்கொண்டிருக்கிருரோ என்று சந்தேகப்படலாயினர். அவ்வாறு தோன்றும் அவ்வழகிய முழங்கால்கள் நமது பாபங்களின் குவியல்கள் எல்லாவற்றையும் எரித்துச் சாம்பலாக்கட்டும். (18)

இருதுடைகள்:—

जानुद्वन्द्वेन मीनध्वजनृवरसमुद्गोपमानेन साकं
राजन्तौ राजरम्भाकरिकरकनकस्तम्भसम्भावनीयौ ।
ऊरु गौरीकराम्भोरुहसरससमामर्दनानन्दभाजौ
चारू दूरीक्रियास्तां दुरितमुपचितं जन्मजन्मान्तरे नः ॥ १९ ॥

ஜானுத்வந்த்வேன மீனத்வஜ ந்ருவர ஸமுத்கோபமானேன ஸாகம்
ராஜந்தௌ ராஜரம்பா கரிகர கநக ஸ்தம்ப ஸம்பாவநீயௌ ।
ஊரு கௌரீ கராம்போருஹ ஸரஸ ஸமாமர்த்தனானந்தபாஜௌ
சாரு தூரீக்ரியாஸ்தாம் துரிதமுபசிதம் ஜன்மஜன்மாந்தரே நः ॥

**मीनध्वज**-மீனைக் கொடியாகக்கொண்ட மன்மதராஜனுடைய **समुद्गोपमानेन**-தாம்பூலப்பெட்டிக்கு ஒப்பான **जानुद्वन्द्वेन**-இரு முழங்கால்களுடன் **साकं**-கூட **राजन्तौ**-விளங்குகின்றவைகளாயும் **राजरम्भा**-இராஜவாழை **करि**-யானையினுடைய **कर**-துதிக்கை **कनकस्तम्भ**-தங்கத்தூண் இவைகளால் **सम्भावनीयौ**-மதிக்கத்தகுந்தவைகளாயும் **गौरी**-

பார்வதியினுடைய कराम्भोरुह-தாமரைபோன்ற கைகளால் सरस-மிகுந்த ஆனந்தத்துடன் समामर्दन- நன்கு பிடித்துவிடுவதால் आनन्दभाजौ-ஆனந்தத்தையடைந்தவைகளாயும் உள்ள चारू-அழகிய ऊरू-இரண்டு தொடைகளும் नः-நம்முடைய जन्म-இப்பிறவியிலும் जन्मान्तरे-மற்றப் பிறவிகளிலும் उपचितं-சேமித்துவைக்கப்பட்ட दुरितं-பாபத்தை दूरीक्रियास्ताम्-அகற்றட்டும்.

சிவபெருமானுடைய தொடைகள் அழகு மிகுந்தவைகள். அவைகள் காமதேவனின் தாம்பூலப்பெட்டியைப் போன்ற இரண்டு முழங்கால்களுடன் சேர்ந்து விளங்குகின்றன அவைகள் இராஜவாழை, யானையின் துதிக்கை, தங்கத்தூண் முதலியவைகளைப்போல் பிரகாசிக்கின்றன. அவைகளைப் பார்வதீதேவி தன்னுடைய மலர்போன்ற மெல்லிய கரங்களால் பிடித்து விடுகிறாள். அதனால் அவைகள் மட்டற்ற மகிழ்ச்சியையடைகின்றன. அவ்வாறு விளங்கும் அத்தொடைகள் நம்முடைய முற்பிறவிகளில் சேர்ந்துள்ள எல்லாப் பாபங்களையும் அகற்றட்டும். (19)



நிதம்ப ப்ரதேசம்: —

आमुक्तानर्घरत्नप्रकरकरपरिष्वक्तकल्याणकाञ्ची-
दाम्ना बद्धेन दुग्धद्युतिनिचयमुषा चीनपट्टाम्बरेण ।
संवीते शैलकन्यासुचरितपरिपाकायमाणे नितम्बे
नित्यं नर्नर्तु चित्तं मम निखिलजगत्स्वामिनः सोममौलेः ॥

ஆமுக்தாநர்க ரத்ன ப்ரகர கர பரிஷ்வக்த கல்யாண காஞ்சீ
தாம்நா பத்தேன துக்த த்யுதி நிசயமுஷா சீன பட்டாம்பரேண ।
ஸம்வீதே சைலகன்யா ஸுசரித பரிபாகாயமாணே நிதம்பே
நித்யம் நர்நர்து சித்தம் மம நிகில ஜகத்ஸ்வாமின:
ஸோமமௌளே: ॥ 20

आमुक्त-பதிக்கப்பட்ட अनर्घ-விலையுயர்ந்த रत्न- ரத்னங்களுடைய प्रकर-கூட்டத்தின் कर-கிரணங்களால் परिष्वक्त-சூழப்பட்ட कल्याण-மங்களகரமான काञ्चीदाम्ना-தங்க ஒட்டியாணத்தினால் बद्धेन-கட்டப்பட்டதும் दुग्ध- பாலி

னுடைய, **द्युतिनिचय**-ஒளிக்கூட்டத்தை **मुषा**-அபஹரிக்கின்ற **चीनपट्टाम्बरेण**-சீனதேசத்துப் பட்டினால்-**संवीते**-மறைக்கப்பட்டதும் **शैलकन्या**-மலையரசனின் பெண்ணுன பார்வதீதேவியின் **सुचरित**-புண்ணியங்களின் **परिपाकायमाणे**-பரிபாகம்போல் தோன்றுகின்றதுமான **निखिलजगत्स्वामिनः**-உலகங்கள் எல்லாவற்றிற்கும் அதிபதியான, **सोममौलेः**-சந்திரசேகரருடைய, **नितम्बे**-இடுப்பில், **मम**-என்னுடைய, **चित्तं**-மனம், **नित्यं**-எப்பொழுதும், **नर्नर्तु**-கூத்தாடிக்கொண்டே இருக்கட்டும்.

*பரமேச்வரனுடைய இடுப்பு மிகுந்த அழகுவாய்ந்தது. அது மெல்லிய சீனப் பட்டால் மறைக்கப்பட்டுள்ளது. அப்பட்டின் வெண்மை பாலின் வெண்ணிறத்தையும் தோல்வியுறச் செய்கிறது. அதைச் சுற்றித் தங்க ஒட்டியாணம் போடப்பட்டுள்ளது. அதில் விலை மதிக்கமுடியாத சிறந்த இரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ளன. அவைகளின் கிரணங்கள் எங்கும் பரவி மங்களத்தை உண்டுபண்ணுகின்றன. அவ்வாறு சிறந்து விளங்கும் சந்திர சேகரருடைய அவ்விடுப்பு பார்வதீ தேவி செய்த மாதவத்தின் பயனே உருவெடுத்து வந்ததுபோலக் காக்ஷியளிக்கின்றது. அப்பேற்பட்ட பரமேச்வரனுடைய அவ்விடுப்பின்கண் என் மனம் எப்பொழுதும் ஆனந்ததாண்டவம் ஆடட்டும்.* (20)

மத்ய ப்ரதேசம்:—

**संध्याकालानुरज्यद्दिनकरसरुचा कालधौतेन गाढं**
**व्यानद्धः स्निग्धमुग्धः सरसमुदरबन्धेन वीतोपमेन ।**
**उद्दीप्रैः स्वप्रकाशैरुपचितमहिमा मन्मथारेरुदारो**
**मध्यो मिथ्यार्थसध्र्यङ्मम दिशतु सदा संगतिं मङ्गलानाम् ॥**

*ஸந்த்யா காலானுரஜ்யத் தினகர ஸருசா காலதௌதேன காடம்*
*வ்யாநத்த: ஸ்நிக்த முக்த: ஸரஸமுதர பந்தேன வீதோபமேன ।*
*உத்தீப்ரை: ஸ்வப்ரகாசைருபசித மஹிமா மன்மதாரேருதாரோ*
*மத்யோ மித்யார்த்த ஸத்ர்யங் மம திசது ஸதா ஸங்கதிம்*
*மங்களானாம் ॥* (21)

**सन्ध्याकाल**-ஸந்தியாகாலத்தில், **अनुरज्यत्**-சிவந்திருக்கும், **दिनकरसरुचा**-ஸூர்யனுக்கு ஒப்பான காந்தியை உடையதும், **कालधौतेन**-தங்கத்தால் செய்யப்பட்டதும், **वीतोपमेन**-உபமானம் அற்றதுமான, **उदरबन्धेन**-வயிற்றில் கட்டிக்கொள்ளும் பட்டையால், **सरसं**-அழகாகவும், **गाढं**-இறுக்கமாயும், **व्यानद्धः**-கட்டப்பட்டதும், **स्निग्धमुग्धः**-காந்தி, அழகு இவைகளையுடையதும், **उद्दीप्रैः**-சிறந்து விளங்குகின்ற **स्वप्रकाशैः**-தன்னுடைய ஒளிகளால், **उपचितमहिमा**-அதிகமான மேன்மையை உடையதுமான, **मन्मथारेः**-காமனின் எதிரியான பரமேச்வரனுடைய, **मिथ्यार्थसध्र्यङ्**-பொய் யென்று நினைக்கக்கூடியதும், **उदारः**-சிறந்ததுமான, **मध्यः**-இடை, **मम**-எனக்கு, **सदा**-எப்பொழுதும், **मङ्गलानां**-மங்களங்களுடைய, **संगतिं**-சேர்க்கையை, **दिशतु**-கொடுக்கட்டும்.

*சிவபெருமானுடைய இடை மிகவும் மெல்லியது. அதனுல் அது பொய்யெனக் கருதக்கூடியதாகக் காணப்படுகிறது. அது ஸந்தியாகாலத்தில் காணும் சூரியனின் ஒளிபோன்ற ஒளியை உடைய நிகரற்ற தங்கப்பட்டையால் இறுகக் கட்டப்பட்டுள்ளது. அதன் ஒளி எங்கும் பரவுவதால் அது அவ்வொளியாலேயே மேலும் மேலும் பொலிவு பெற்றுத் துலங்குகிறது அவ்வாறு விளங்கும் அப்பரமனுடைய அவ்விடை நமக்குச் சிறந்த மங்களங்களை வழங்கவேண்டும்.* (21)

ரோமாவளி:—

**नाभीचक्रालवालान्नवनवसुषमादोहदश्रीपरीता-**
**दुद्गच्छन्ती पुरस्तादुदरपथमतिक्रम्य वक्षः प्रयान्ती ।**
**श्यामा कामागमार्थप्रकथनलिपिवद्भासते या निकामं**
**सा मा सोमार्धमौलेः सुखयतु सततं रोमवल्लीमतल्ली ॥ २२ ॥**

*நாபீசக்ராலவாலாத் நவநவஸுஷமா தோஹத ஸ்ரீபரீதாத்*
*உத்கச்சந்தீ புரஸ்தாதுதர பதமதிக்ரம்ய வக்ஷ: ப்ரயாந்தீ ।*
*ஶ்யாமா காமாகமார்த்த ப்ரகதன லிபிவத் பாஸதே யா நிகாமம்*
*ஸா மா ஸோமார்த்தமௌளே: ஸுகயது ஸததம்*
*ரோமவல்லீ மதல்லீ ॥* (22

नवनव-புதிது புதிதான, सुषमा-அழகென்னும், दोहृद-श्रीपरीतात्-உரத்தின் செல்வம் நிறைந்த, नाभीचक्रालवालात्-தொப்புளாகிய பாத்தியிலிருந்து, पुरस्तात्-முன்பக்கத்தில், उद्गच्छन्ती-மேல் கிளம்புகின்றதும், उदरपथं-வயிற்றின் வழியை, अतिक्रम्य-கடந்து, वक्षः-மார்பை, प्रयान्ती-அடைகின்றதும், श्यामा-கருப்பானதுமான, या-எது, कामागम-காமசாஸ்திரத்தின், अर्थ-பொருளை, प्रकथन-விளக்கிச்சொல்கின்ற लिपिवत्-எழுத்துப்போல, भासते-விளங்குகிறதோ, सा-அந்த सोमार्धमौलेः-பிறைச்சந்திரனை சிரஸில்கொண்ட பரமேச்வரனுடைய, रोमवल्लीमतल्ली-சிறந்த கொடிபோன்ற ரோமவரிசை मा-என்னை, सततं-எப்பொழுதும், निकामं-மிகவும், सुखयतु-மகிழ்ச்சியடையச்செய்யட்டும்.

*பரமசிவனுடைய ரோமாவளி ஓர் கொடிபோல் விளங்குகிறது. அது நாபியாகிய பாத்தியிலிருந்து உற்பத்தியாகிறது. அங்கு அது அழகு என்ற உரத்தால் நன்கு வளர்க்கப்பட்டு வயிற்றின் வழியாகக் கிளம்பிச்சென்று பரமசிவனுடைய மார்பை அடைகிறது. அங்கு அது காமசாஸ்திரத்தின் தத்துவத்தை விளக்கும் அக்ஷர வரிசைபோல் காணப்படுகின்றது. அப்படிப்பட்ட ரோமாவளி எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியை எப்பொழுதும் அளிக்கட்டும்* (22)

**மார்பு :—**

**आश्लेषेष्वद्रिजायाः कठिनकुचतटीलिप्तकाश्मीरपङ्क-**
**व्यासङ्गादुद्यदर्कद्युतिभिरुपचितस्पर्धमुद्दामहृद्यम् ।**
**दक्षारातेरुदूढप्रतिनवमणिमालावलीभासमानं**
**वक्षो विक्षोभिताघं सततनतिजुषां रक्षतादक्षतं नः ॥ २३ ॥**

*ஆச்லேஷேஷ்வத்ரிஜாயா: கடின குசதட லிப்த காச்மீர பங்க-*
*வ்யாஸங்காதுத்யதர்க்க த்யுதிபிருபசித ஸ்பர்த்தமுத்தாம ஹ்ருத்யம் ।*
*தக்ஷாராதேருதூட ப்ரதிநவ மணிமாலாவலீ பாஸமானம்*
*வக்ஷோ விக்ஷோபிதாகம் ஸததநதிஜுஷாம் ரக்ஷதாதக்ஷதம் ந: ॥*

**अद्रिजायाः**-மலையரசனுடைய மகளாகிய பார்வதீ தேவியின், **आश्लेषेषु**- ஆலிங்கனங்களில், **कठिन**-கடினமான, **कुचतटी**-ஸ்தன பிரதேசத்தில், **लिप्त**-பூசப்பட்ட, **काश्मीरपङ्क**-குங்குமப்பூவாலான பூச்சின், **व्यासङ्गात्** - சேர்க்கையால் **उद्यदर्कद्युतिभिः**-உதயமாகும் கதிரவனுடைய காந்திகளுடன், **उपचितस्पर्धं**-போட்டியிடுகின்றதும், **उद्दामहृद्यं**-அழகு மிகுந்ததும், **उदूढ**-அணிந்துகொள்ளப்பட்ட, **प्रतिनव**-மிகப்புதிய **मणिमालावली**-இரத்தின மாலைகளின் வரிசைகளால், **भासमानं**-விளங்குகின்றதும், **सतत**-எப்பொழுதும், **नतिजुषां**-வணங்குகின்றவர்களுடைய, **विक्षोभिताघं**-பாபங்களை நாசம் செய்கின்றதுமான, **दक्षारातेः**-தக்ஷனை நாசம் செய்த பரமேச்வரனுடைய, **वक्षः**-மார்பு, **नः**-நம்மை, **अक्षतं**-குறைவில்லாமல், **रक्षतात्** -காப்பாற்றட்டும்.

பரமேச்வரனுடைய வக்ஷஸ்தலம், பார்வதீ தேவியை ஆலிங்கனம் செய்துகொள்ளும்பொழுது அத்தேவி தனது கொங்கைகளில் பூசிக்கொண்டிருக்கும் குங்குமப் பூச்சின் சேர்க்கையால் புதிதாக உதிக்கின்ற கதிரவனுடைய காந்திகளுடன் கூட போட்டி போடுவதுபோல சிவப்பாகக் காணப்படுகிறது. பரமேச்வரன் சிறந்த இரத்தின மாலைகளைத் தனது மார்பில் தரித்துக்கொண்டிருக்கிறான். அம்மாலைகளின் வரிசைகளால் அவரது மார்பு மிகுந்த காந்தியுடன் பிரகாசிக்கிறது. அது பரமசிவனுடைய அடியார்களின் பாபங்களைப் போக்குகிறது. அவ்வாறு சிறந்து விளங்கும் அப்பரமனின் மார்பு நம்மைக் குறைவின்றிக் காத்தருள வேண்டும். (23)

புஜங்கள் :—

वामाङ्के विस्फुरन्त्याः करतलविलसच्चारुरक्तोत्पलायाः
कान्ताया वामवक्षोरुहभरशिखरोन्मर्दनव्यग्रमेकम् ।
अन्यांस्त्रीनप्युदारान्वरपरशुमृगालंकृतानिन्दुमौले-
र्बाहूनाबद्धहेमाङ्गदमणिकटकानन्तरालोकयामः ॥ २४ ॥

வாமாங்கே விஸ்புரந்த்யா: கரதல விலஸச் சாரு ரக்தோத்பலாயா:
காந்தாயா: வாம வக்ஷோருஹ பர சிகரோன்மர்தனவ்யக்ரமேகம்।

அன்யாம்ஸ்த்ரீனப்யுதாரான் வரபரஶு ம்ருகா
லங்க்ருதானிந்துமௌளே:
பாஹூனுபத்தஹேமாங்கதமணி கடகானந்தராலோகயாம: ॥

**वामाङ्क**-இடது மடியில், **विस्फुरन्त्याः**-விளங்குகின்றவளும் **करतल**-கையில், **विलसत्**-விளங்குகின்ற, **चारु**-அழகிய, **रक्त**-சிவந்த, **उत्पलायाः**-அல்லி மலரையுடையவளுமான, **कान्तायाः**-மனைவியான பார்வதீதேவியின், **वाम**-இடது (அழகிய) **वक्षोरुहभर**-கொங்கையின் பாரத்தின், **शिखर**-உச்சியை, **उन्मर्दन**-அமுக்குவதில், **व्यग्र**-ஈடுபட்ட, **एकं**-ஒரு கையையும் **वर-परशु-मृगालङ्कृतान्**-வரம், கோடாலி, மான் இவைகளால் அலங்கரிக்கப்பட்டவைகளாயும், **उदारान्**-வள்ளல்களாயும், **आबद्ध**-அணிந்துகொள்ளப்பட்ட, **हेमाङ्गद**-தங்கத்தோள்வளை களையும், **मणिकटकान्**-இரத்தினக்காப்புக்களையும் உடையவைகளாயும் இருக்கின்ற, **इन्दुमौलेः**-பிறையைத் தலையிலுடைய பரமேச்வரனுடைய, **अन्यान्**-மற்ற, **त्रीन्**-மூன்று, **बाहून् अपि**-கைகளையும், **अन्तः**-மனதிற்குள் **आलोकयामः**-காண்கிறோம்.

பரமேச்வரனுடைய கைகளில் ஒன்று அவரது இடது மடியில் விளங்குபவளாயும், தனது கையில் அழகிய அல்லிமலரை உடையவளுமான பார்வதீ தேவியின் ஸ்தனபாரத்தின் உச்சியை அமுக்குவதில் ஈடுபட்டுள்ளது. மற்ற மூன்று கைகளும் முறையே வரம், கோடாலி, மான் இவைகளை ஏந்திக்கொண்டுள்ளன. அவைகள் அழகிய தங்கத் தோள்வளைகளாலும் இரத்தினக் காப்புகளாலும் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்றன, அவைகள் மிகுந்த உதாரமான குணம் படைத்தவைகள். அவைகளை நாம் நமது மனதிற்குள் என்றும் காண்போமாக. (24)

கழுத்து :—

संभ्रान्तायाः शिवायाः पतिविलयभिया सर्वलोकोपतापा-
त्संविग्नस्यापि विष्णोः सरभसमुभयोर्वारणप्रेरणाभ्याम् ।
मध्ये त्रैशङ्कवीयामनुभवति दशां यत्र हालाहलोष्मा
सोऽयं सर्वापदां नः शमयतु निचयं नीलकण्ठस्य कण्ठः ॥

ஸம்ப்ராந்தாயா: ஶிவாயா: பதி விலய பியா
ஸர்வ லோகோபதாபாத்
ஸம்விக்நஸ்யாபி விஷ்ணோ: ஸரபஸமுபயோர்
வாரண ப்ரேரணாப்யாம் ।
மத்யே த்ரைஶங்கவீயாமனுபவதி தஶாம் யத்ர
ஹாலாஹலோஷ்மா
ஸோऽயம் ஸர்வாபதாம் ந: ஶமயது நிசயம்
நீலகண்டஸ்ய கண்ட: ॥ (25)

**पतिविलय**–கணவனுக்கு நாசம் ஏற்படுமோ என்ற **भिया**–அச்சத்தால், **संभ्रान्तायाः**–பரபரப்படைந்த, **शिवायाः**–பார்வதீ தேவியினுடையவும், **सर्वलोकोपतापात्**–உலகங்கள் எல்லாம் துன்புறுவதால், **संविग्नस्य**–கவலையுற்ற, **विष्णोश्च अपि**–விஷ்ணுவினுடையவும், **उभयोः**–இவ்விருவர்களுடையவும், **सरभसं**–ஆத்திரத்துடன்கூடிய, **वारणप्रेरणाभ्यां**–தடுப்பதாலும், தூண்டுவதாலும், **मध्ये**–நடுவில், **त्रैशङ्कवीयां**–திரிசங்குவினுடைய, **दशां**–நிலையை, **यत्र**–எங்கு, **हालाहलोष्मा**–ஹாலாஹலமென்ற விஷத்தீ, **अनुभवति**–அனுபவிக்கிறதோ, **सोऽयं**–அப்படிப்பட்ட இந்த, **नीलकण्ठस्य**–நீலமான கழுத்தை உடைய பரமசிவனுடைய, **कण्ठः**–கழுத்து, **नः**–நம்முடைய **सर्वापदां**–எல்லா ஆபத்துக்களுடைய, **निचयं**–கூட்டத்தை, **शमयतु**–அழிக்கட்டும்.

தேவர்களும் அஸுரர்களும் வாஸுகி என்ற அரவத்தைக் கயிருகக்கொண்டு பாற்கடலைக் கடையும்பொழுது ஹாலாஹலம் என்ற மிகக் கொடிய விஷம் முதலில் கிளம்பியது அவ்விஷம் உலகங்கள் எல்லாவற்றையும் எரிக்கத் தொடங்கிற்று அவ்வாறு கிளம்பிய அவ்விஷத்தைச் சிவபெருமான் அள்ளிப்பருகினர். அதனல் தன் கணவனுக்கு ஆபத்து வருமோ என்று அஞ்சிய மலையரசனின் மகள் அது தனது கணவனுடைய வயிற்றுக்குள் போகாமல் இருப்பதற்காகப் பரபரப்புடன் சாப்பிடவேண்டா மென்று பரமசிவனைத் தடுத்தாள். அவ்விஷம் வெளியே வந்தால் உலகமெல்லாம் அழிந்துவிடுமே என்று பயந்த மஹாவிஷ்ணு அதை வெளியே விடவேண்டாம் சாப்பிட்டுவிடுங்கள் என்று பரமசிவனைத் தூண்டினர் இவ்வாறு பார்வதியின் வார்த்தைக்காக விஷத்தை உள்ளே செலுத்தாமலும் விஷ்ணுவிற்காக வெளியில் விடாமலும் இருக்கும்பொழுது அவ்விஷம் உள்ளும்

போகமுடியாமல் வெளியிலும் போகமுடியாமல் நடுவிலேயே கழுத்தில் தங்கிவிட்டது. விச்வாமித்ரரின் வார்த்தையால் கீழே வராமலும் இந்திரனின் வார்த்தையால் மேலே போகாமலும் நடுவிலேயே ஆகாசத்தில் நிற்கும் த்ரிசங்குவின்நிலையே விஷத்திற்கும் ஏற்பட்டது. அவ்வாறு தங்கிய அவ்விஷத்தால் சிவபெருமானுடைய கழுத்து நீலநிறமுள்ளதாக ஆகிவிட்டது. அவ்வாறு விளங்கும் அக்கழுத்து நமது ஆபத்துக்களையெல்லாம் களைந்தொழிக்கட்டும், (25)

அதரம் :—

हृद्यैरद्रीन्द्रकन्यामृदुदशनपदैर्मुद्रितो विद्रुमश्री-
रुद्द्योतन्त्या नितान्तं धवलधवलया मिश्रितो दन्तकान्त्या ।
मुक्तामाणिक्यजालव्यतिकरसदृशा तेजसा भासमानः
सद्योजातस्य दद्यादधरमणिरसौ संपदां संचयं नः ॥ २६ ॥

ஹ்ருத்யைரத்ரீந்த்ர கன்யா ம்ருது தஶன பதைர் முத்ரிதோ வித்ருமஸ்ரீ
ருத்யோதந்த்யா நிதாந்தம் தவள தவளயா மிஸ்ரிதோ தந்த காந்த்யா ।
முக்தா மாணிக்ய ஜால வ்யதிகர ஸத்ருஶா தேஜஸா பாஸமான:
ஸத்யோஜாதஸ்ய தத்யாததரமணிரஸௌ ஸம்பதாம் ஸஞ்சயம் ந: ॥ (26)

**हृद्यैः**—மனோஹரமான, **अद्रीन्द्रकन्या**—மலையரசனின் பெண்ணாகிய பார்வதீதேவியின், **मृदु**—மெல்லிய, **दशनपदैः**-பற்களின் அடையாளங்களால், **मुद्रितः**—அடையாளமிடப்பட்டதும், **विद्रुमश्रीः**-பவழத்தின் அழகையுடையதும் **नितान्तं**—மிகவும், **उद्योतन्त्या**—பிரகாசிக்கின்றதும், **धवलधवलया**-மிகவும் வெளுப்பானதுமான, **दन्तकान्त्या**-பற்களின் காந்தியுடன், **मिश्रितः**—கலந்ததும், **मुक्ता**—முத்துக்களும், **माणिक्यजाल**-மாணிக்கக் கூட்டங்களும், **व्यतिकरसदृशा**-சேர்ந்ததுபோன்ற **तेजसा**-ஒளியால், **भासमानः**-பிரகாசிக்கின்றதுமான, **सद्योजातस्य**-ஸத்யோஜாதன் என்று கூறப்படும் சிவபெருமானுடைய, **असौ**-அந்த, **अधरमणिः**—கீழ் உதடாகிய சிறந்த

இரத்தினம், नः-நமக்கு, सम्पदां-செல்வங்களுடைய, सञ्चयं-கூட்டத்தை, दद्यात्-கொடுக்கட்டும்.

பரமேச்வரனுடைய கீழ் உதடு சிவந்த ரத்னம் போன்றது. அது பார்வதீ தேவியின் பற்களின் அடையாளத்துடன் கூடியது. அது வெண்மையான பற்களின் காந்தியுடன் சேருவதால் முத்தும் மாணிக்கமும் சேர்ந்ததுபோல் பிரகாசிக்கின்றது, அவ்வாறு விளங்கும் அப்பரமேச்வரனுடைய அதரம் நமக்கு நிறைந்த செல்வத்தையளிக்கட்டும். (26)

பகவானின் நாஸிகை (மூக்கு) :—

कर्णालंकारनानामणिनिकररुचां संचयैरञ्चितायां
वर्ण्यायां स्वर्णपद्मोदरपरिविलसत्कर्णिकासंनिभायाम् ।
पद्धत्यां प्राणवायोः प्रणतजनहृदम्भोजवासस्य शंभो-
र्नित्यं नश्चित्तमेतद्विरचयतु सुखेनासिकां नासिकायाम् ॥२७॥

கர்ணாலங்கார நாநாமணி நிகரருசாம் ஸஞ்சயைரஞ்சிதாயாம்
வர்ண்யாயாம் ஸ்வர்ண பத்மோதர பரிவிலஸத் கர்ணிகா
ஸந்நிபாயாம் ।
பத்தத்யாம் ப்ராண வாயோ: ப்ரணத ஜன ஹ்ருதம்போஜ
வாஸஸ்ய ஶம்போ:
நித்யம் ந்ஶ்சித்தமேதத் விரசயது ஸுகேநாஸிகாம் நாஸிகாயாம் ॥

कर्णालङ्कार-காதின் அணிகளிலுள்ள, नानामणि-பலவித மான இரத்தினங்களின், निकर-கூட்டத்தினுடைய, रुचां-காந்திகளின், सञ्चयैः-ஸமூஹங்களுடன், अञ्चितायां-விளங்குவதும், वर्ण्यायां-புகழத்தக்கதும், स्वर्णपद्म - பொற்றாமரையின், उदर-வயிற்றில் (உள்ளே), परिविलसत्-விளங்கும் कर्णिकासन्निभायां-கர்ணிகைக்கு ஒப்பானதும், प्राणवायोः-பிராணவாயுவின், पद्धत्यां-வழியானதுமான, प्रणत-தன்னை வணங்கிய, जन-மக்களுடைய, हृदम्भोज-ஹிருதயமாகிய தாமரையில், वासस्य-வாஸத்தையுடைய, शम्भोः-பரமேச்வரனுடைய, नासिकायां-மூக்கில், नित्यं-எப்பொழுதும், नः-

நம்முடைய, **एतत् चित्तं**-இந்த மனது, **सुखेन**-ஸுகமாக, **आसिकां**-இருத்தலை, **विरचयतु**-செய்யட்டும்.

*பரமேச்வரனுடைய காதுகளில் ரத்தின குண்டலங்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. அவைகளின் ஒளி அவரது மூக்கின்மேல் படுவதால் அது மிகுந்த அழகுடன் விளங்கிக் கொண்டிருக்கிறது அதனால் வியப்படைந்த கவிமணிகள் அதைப் போற்றிப் பாடுகின்றனர். அது பொற்றாமரைக்குள் விளங்கும் கர்ணிகைபோல் காட்சியளிக்கின்றது. அது பிராணவாயு சஞ்சரிக்கும் மார்க்கமாகத் திகழ்கின்றது. பக்தர்களின் மனதில் வாஸம் செய்யும் பரமேச்வரனுடைய அந்த மூக்கில் நம்முடைய மனம் எப்பொழுதும் பற்றுதல் கொண்டதாக இருக்கட்டும் (27)*

**குண்டலங்கள் :—**

**अत्यन्तं भासमाने रुचिरतररुचां संगमात्सन्मणीना-**
**मुद्यच्चण्डांशुधामप्रसरनिरसनस्पष्टदृष्टापदाने ।**
**भूयास्तां भूतये नः करिवरजयिनः कर्णपाशावलंबे**
**भक्तालीभालसज्जज्जनिमरणलिपेः कुण्डले कुण्डले ते ॥**

*அத்யந்தம் பாஸமானே ருசிரதர ருசாம் ஸங்கமாத் ஸன்மணீநாம்*
*உத்யச்சண்டாம்சு தாம ப்ரஸர நிரஸன ஸ்பஷ்ட*
*த்ருஷ்டாபதானே ।*
*பூயாஸ்தாம் பூதயே ந: கரிவர ஜயின: கர்ண பாசாவலம்பே*
*பக்தாலீ பால ஸஜ்ஜஜ்ஜனி மரண லிபே: குண்டலே*
*குண்டலே தே ॥ (28)*

**रुचिरतर**-மிகவும் அழகிய, **रुचां**-காந்திகளையுடைய, **सन्मणीनां**-நல்ல இரத்தினங்களுடைய, **सङ्गमात्**-சேர்க்கையால், **अत्यन्तं**-மிகவும், **भासमाने**-பிரகாசிக்கின்றவைகளாயும், **उद्यत्**-கிளம்புகின்ற, **चण्डांशु**-கதிரவனுடைய, **धाम**-ஒளிகளின், **प्रसर**-பரவுதலை, **निरसन**-பழிப்பதில், **स्पष्ट**-தெளிவாக, **दृष्ट**-காணப்பட்ட, **अपदाने**-புகழையுடையவைகளாயும் **भक्ताली**-பக்தர்களின் வரிசைகளின், **भाल**-நெற்றிகளில், **सज्जत्**-ஒட்டியிருக்கும், **जनि**-பிறப்பு, **मरण**-சாவு இவைகளின்

**लिपेः**—எழுத்திற்கு, **कुण्डले**—சுழிபோன்றதும், **करिवरजयिनः**—பெரிய யானையின் உருவையுடைய அந்தகன் என்ற அரக்கனை வென்ற பரமேச்வரனுடைய, **कर्णपाशावलम्बे**—அழகிய காதுகளில் தொங்குகின்றவைகளாயும் உள்ள, **ते**—அந்த, **कुण्डले**—இரண்டு குண்டலங்களும், **नः**—நமக்கு, **भूतये**—செல்வத்தையளிப்பதற்காக, **भूयास्ताम्**—இருக்கட்டும்

பெரிய யானையின் வடிவம் கொண்ட அந்தகன் என்ற அரக்கனையழித்த சிவபெருமானுடைய காதுகளில் அழகு வாய்ந்த இரத்தினங்கள் பதிக்கப்பட்ட குண்டலங்கள் தொங்கிக்கொண்டிருக்கின்றன. அவைகள் எங்கும் பரவிக்கொண்டிருக்கும் கதிரவனின் செங்கதிர்களையும் மங்கச் செய்கின்றன. அவைகள் தன்னையண்டும் அடியார்களைக் காத்தருளும் தன்மை வாய்ந்தவை. ஆதலால் அவைகள் பிரம்மதேவரால் அவர்களின் லலாடத்தில் எழுதப்பட்ட ஜனன மரணங்களின் எழுத்துக்களைக் குண்டலம் போட்டு உபயோகமற்றவைகளாகச் செய்கின்றன. அவ்வாறு விளங்கும் அக்குண்டலங்கள் நம்மைக் காத்தருளட்டும்.

குறிப்பு:—நாம் எழுதும்பொழுது ஏதாவது பிழைகள் ஏற்பட்டால் அப்பிழையான எழுத்துக்களைச் சுற்றி வட்டம் போட்டு அவைகள் உபயோகமற்றவை என்று ஒதுக்கித் தள்ளிவிடுகிறோம். பிரம்மதேவன் ஒவ்வொருவருடைய நெற்றியிலும் அவரவர்களுடைய பிறப்பு வளர்ப்பு மரணம் முதலியவற்றைக் கணக்கிட்டுப் புள்ளி விபரம் போட்டிருக்கிறார். சிவபெருமானோவெனில் தன்னடியார்களின் நெற்றியில் எழுதப்பட்ட அவ்வெழுத்துக்களைச் சுற்றித் தன்னுடைய குண்டலங்களால் சுழிகளைப் போட்டு அவைகள் தப்பானவைகள் என்று காட்டி நீக்கி விடுகிறார். ப்ரஹ்ம லிபியைக்கூட மாற்றிவிடுகிறார் அதாவது பரமசிவனுடைய அடியார்களுக்கு ஸம்ஸார பயம் கிடையாது அவர்கள் பிறவாத் தன்மையைப் பெற்றுப் பரமசிவனுடன் ஒன்றி விடுகின்றனர் என்பது இதன் பொருள். (28)

(அ) இரு சுலோகங்களால் மூன்று கண்களை வர்ணிக்கிறார் :—

याभ्यां कालव्यवस्था भवति तनुमतां यो मुखं देवतानां
येषामाहुः स्वरूपं जगति मुनिवरा देवतानां त्रयीं ताम् ।

रुद्राणीवक्त्रपङ्केरुहमततविहारोत्सुकेन्दिन्दिरेभ्य-
स्तेभ्यस्त्रिभ्यः प्रणामाञ्जलिमुपरचये त्रीक्षणस्येक्षणेभ्यः ॥

யாப்யாம் கால வ்யவஸ்தா பவதி தனுமதாம் யோ முகம்
தேவதானும்
யேஷாமாஹு: ஸ்வரூபம் ஜகதி முனிவரா தேவதானும்
த்ரயீம் தாம் ।
ருத்ராணீ வக்த்ர பங்கேருஹ ஸதத விஹாரோத்
ஸுகேந்திந்திரேப்ய:
தேப்யஸ்த்ரிப்ய: ப்ரணமாஞ்ஜலிமுபரசயே
த்ரீக்ஷணஸ்யேக்ஷணேப்ய: ॥ (29)

**याभ्यां**-எவர்களால், **तनुमतां**-சரீரத்தையுடையவர்களுக்கு **कालव्यवस्था**-பகல் இரவு என்ற நேரங்களின் கட்டுப்பாடு, **भवति**-ஏற்படுகிறதோ, **यः**-எது, **देवतानां**-தேவதைகளுக்கு, **मुखं**-முகமாக இருக்கிறதோ, **तां**-அந்த, **देवतानां त्रयीं**-(ஸூரியன், சந்திரன், அக்னி என்ற) மூன்று தேவதைகளையும், **येषां**-எந்தக் கண்களுடைய, **स्वरूपं**-ஸ்வருபமாக, **जगति**-உலகில், **मुनिवराः**-மாமுனிவர்கள், **आहुः**-கூறுகிறார்களோ, **रुद्राणी**-பார்வதீ தேவியின், **वक्त्र**-முகமாகிய, **पङ्केरुह**-தாமரையில், **सतत**-எப்பொழுதும், **विहार**-விளையாடுவதில், **उत्सुक**-ஆவல் கொண்ட, **इन्दिन्दिरेभ्यः** - சிறந்த வண்டினங்களாகிய, **तेभ्यः**-அந்த, **त्रीक्षणस्य**-மூன்று கண்களையுடைய பரமசிவனுடைய, **त्रिभ्यः**-மூன்று, **ईक्षणेभ्यः**-கண்களுக்கும், **प्रणामाञ्जलिं**-கை கூப்பிய வணக்கத்தை, **उपरचये**-செய்கிறேன்.

உலகில் சூரியன் காலையில் உதித்து மாலையில் அஸ்தமனத்தையடைகிறான். அதனால் பகல் நேரம் உண்டாகிறது. பிறகு சந்திரன் தன்னுடைய சீதகிரணங்களால் உலகத்தைப் பிரகாசப்படுத்தி இரவை விளங்கவைக்கிறான். இவ்வாறாக சூரியனும் சந்திரனும் பகல் இரவு என்ற காலங்களை வரையறுக்கின்றனர். அக்னிதேவன் அமரர்களின் முகமாக இருந்துகொண்டு யக்ஞங்களில் கொடுக்கும் ஹவிஸ்ஸை அவர்களிடம் சேர்க்கிறான். இந்த ஸூர்யன், சந்திரன், அக்னி என்ற மூவருமே தேவர்களில் மிகச் சிறந்தவர்கள். இவ்வுலகிலுள்ளவருக்கும்

மேலுலகிலுள்ளவருக்கும் இவர்கள் பேருதவி செய்கின்றனர். நாம் பிரத்யக்ஷமாகக் காணும் தெய்வங்கள் இம்மூவர்தான். இத்தகைச் சிறப்புப் பெற்றுள்ள இம்மூன்று தேவதைகளும் பரமசிவனுடைய மூன்று கண்களாக அமைந்திருக்கின்றனர். அக்னியே பரமசிவனின் நெற்றிக்கண்ணாகவும், ஸூர்ய-சந்திரர்கள் மற்ற இரு கண்களாகவும் விளங்குவதாக முனிபுங்கவர்கள் கூறுகின்றனர். தாமரைப்பூவில் வண்டுகள் மொய்ப்பதுபோல் பார்வதியின் வதனாரவிந்தத்திலேயே இம்மூன்று கண்களும் அன்புடன் எப்பொழுதும் ஈடுபட்டு அதிலுள்ள லாவண்யாமிருதத்தை ஆசையுடன் பருகுகின்றன. அதாவது அவளுடைய முகத்தின் அழகையே எப்பொழுதும் பார்த்துப் பார்த்து இன்பமுறுகின்றன. இவ்வாறு விளங்கும் முக்கண்ணனின் மூன்று கண்களையும் கைகூப்பிக் கும்பிடுகிறேன். (29)

மூன்று கண்கள் :—

वामं वामाङ्कगाया वदनसरसिजे व्यावलद्वल्लभाया
व्यानम्रेष्वन्यदन्यत्पुनरलिकभवं वीतनिःशेषरौक्ष्यम् ।
भूयो भूयोऽपि मोदान्निपतदतिदयाशीतलं चूतबाणे
दक्षारेरीक्षणानां त्रयमपहरतादाशु तापत्रयं नः ॥ ३० ॥

வாமம் வாமாங்ககாயா: வதன ஸரஸிஜே வ்யாவலத் வல்லபாயா:
வ்யாநம்ரேஷ்வன்யதன்யத் புனரலிகபவம் வீத நிஃஶேஷ
ரௌக்ஷ்யம் ।
பூயோ பூயோபி மோதாந்நிபதததிதயா ஶீதலம் சூதபாணே
தக்ஷாரேரீக்ஷணானாம் த்ரயமபஹரதாதாஶு தாபத்ரயம் ந: ॥ (30)

**वामाङ्कगायाः**-இடது மடியில் அமர்ந்திருக்கின்ற, **वल्लभायाः**-பிரிய மனைவியான பார்வதியின், **वदनसरसिजे**-தாமரைபோன்ற முகத்தில், **व्यावलत्**-சுற்றிக்கொண்டு இருக்கும் **वामं**-இடது கண்ணும், **व्यानम्रेषु**-வணங்கும் பக்தர்களிடம், **व्यावलत्**-செல்லுகின்ற **अन्यत्**-மற்றதான வலது கண்ணும் **पुनः**-மேலும், **वीतनिश्शेषरौक्ष्यं**-பாக்கியன்னியில் கொடுமை முழுவதும் நீங்கியதும், **भूयो भूयोपि**-திரும்பத் திரும்ப, **मोदात्**-ஸந்தோஷத்தால், **चूतबाणे**-மாம் பூவை

அம்பாகக்கொண்ட காமனிடம், अतिदयाशीतलं-மிகுந்த கருணைரஸத்தால் குளிர்ந்ததாக, निपतत्-விழுகின்றதும், अलिकभवं-நெற்றியில் உண்டானதுமான, अन्यत्-மற்றொரு கண்ணும் दक्षारेः-தக்ஷனின் சத்துருவான பரமசிவனின், ईक्षणानां त्रयं-இந்த மூன்று கண்களும், आशु-விரைவில், नः-நம்முடைய, तापत्रयं-மூன்று தாபங்களையும், अपहरतात्-போக்கட்டும்.

பகவானின் மூன்று கண்களில் ஒன்று தனது இடது மடியில் அமர்ந்திருக்கும் அன்பிற்குரிய பார்வதியின் திருமுகத்தையே பார்த்துக்கொண்டிருக்கிறது. தனது திருவடிகளை வணங்கும் பக்தர்களை வலது கண் நோக்குகிறது. முன்னால் காமனை எரித்த நெற்றிக்கண் இப்பொழுது பார்வதியுடன் சேர்ந்திருப்பதால் அதிலுள்ள கொடுமைகளெல்லாம் நீங்கி ஸந்தோஷத்துடன் காமனிடம் அடிக்கடி குளிர்ந்த ரஸம் பெருகும் வண்ணம் செல்கிறது. இவ்விதமான முக்கண்களும் ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்ற மூன்றுவித தாபங்களையும் விலக்கட்டும். (30)

லலாடம் (நெற்றி) :—

यस्मिन्नर्धेन्दुमुग्धद्युतिनिचयतिरस्कारनिस्तन्द्रकान्तौ
काश्मीरक्षोदसंकल्पितमिव रुचिरं चित्रकं भाति नेत्रम् ।
तस्मिन्नुल्लोलचिल्लीनटवरतरुणीलास्यरङ्गायमाणे
कालारेः फालदेशे विहरतु हृदयं वीतचिन्तान्तरं नः ॥

யஸ்மின்னர்த்தேந்து முக்த த்யுதிநிசய திரஸ்கார நிஸ்தந்த்ர காந்தௌ
காச்மீர க்ஷோத ஸங்கல்பிதமிவ ருசிரம் சித்ரகம் பாதி நேத்ரம் ।
தஸ்மின்னுல்லோல சில்லீ நடவர தருணீ லாஸ்ய ரங்காயமாணே
காலாரே: பாலதேசே விஹரது ஹ்ருதயம் வீத சிந்தாந்தரம் ந: ॥

अर्धेन्दु-பாதிசந்திரனின் मुग्ध-அழகிய, द्युतिनिचय-ஒளிக் கூட்டத்தை, तिरस्कार-அவமதிப்பதில், निस्तन्द्र-சோம்பலில்லாத, कान्तौ-ஒளியை உடைய, यस्मिन्-எதில், काश्मीर-क्षोद-குங்குமப்பூவின் பொடியால், संकल्पितं-இடப்பட்ட

रुचिरं-அழகிய, चित्रकमिव-திலகம்போல், नेत्रं-கண், भाति-விளங்குகிறதோ, तस्मिन्-அந்த, उल्लोलचिल्ली-அசையும் புருவங்களாகிற, नटवरतरुणी-சிறந்த நடன மாதின், लास्य-நாட்யத்திற்கு, रङ्गायमाणे-நாட்ய மேடைபோல் இருக்கின்ற, कालारेः-யமனுக்கு சத்ருவான சிவனின், फालदेशे-நெற்றி பிரதேசத்தில், नः-நம்முடைய, हृदयं-மனது, वीतचिन्तान्तरं-வேறு கவலைகள் நீங்கியதாக, विहरतु-விளையாடட்டும்.

பகவானின் நெற்றி பாதி வட்டவடிவமுள்ள சந்திரனின் ஒளியைவிடப் பன்மடங்கு அதிக ஒளியுடன் விளங்குகிறது. நெற்றியில் உள்ள கண் குங்குமப்பூவைக் குழைத்து இடப்பட்ட அழகிய திலகமோ என்று எண்ணச்செய்கிறது அசையும் புருவமாகிற நடனமாது நாட்யமாடுவதற்கு ஏற்ற நாட்ய மேடையாக நெற்றி காக்ஷியளிக்கிறது. இவ்விதமான பகவானின் நெற்றியில் எல்லாக் கவலைகளையும் துறந்து என் மனம் ஈடுபடட்டும். (31)

கேசபாரம்:—

स्वामिन्गङ्गामिवाङ्गीकुरु तव शिरसा मामपीत्यर्थयन्तीं
धन्यां कन्यां खरांशोः शिरसि वहति किं न्वेष कारुण्यशाली ।
इत्थं शङ्कां जनानां जनयदतिघनं कैशिकं कालमेघ-
च्छायं भूयादुदारं त्रिपुरविजयिनः श्रेयसे भूयसे नः ॥

ஸ்வாமின் கங்காமிவாங்கீகுரு தவ ஶிரஸா மாமபீத்யர்த்தயந்தீம்
தன்யாம் கன்யாம் கராம்ஶோ: ஶிரஸி வஹதி கிம் ந்வேஷ
காருண்ய ஶாலீ ।
இத்தம் ஶங்காம் ஜநாநாம் ஜநயததிகனம் கைஶிகம் காலமேகச்
சாயம் பூயாதுதாரம் த்ரிபுர விஜயிந: ச்ரேயஸே பூயஸே ந: ॥

स्वामिन्-ஸ்வாமியே! तव-உம்முடைய, शिरसा-சிரஸ்ஸால், गङ्गामिव-கங்கையைப்போல், मामपि-என்னையும், अङ्गीकुरु-ஏற்றுக்கொள்ளும், इति-என்று, अर्थयन्तीं-பிரார்த்திக்கிறவளும், धन्यां-பாக்யசாலியுமான, खरांशोः-ஸூரியனுடைய, कन्यां-பெண்ணான யமுனையை, कारुण्यशाली-கருணையுடன் விளங்கும், एषः-இந்தப் பரமசிவன், शिरसि-

சிரஸ்ஸில், किं नु वहति-தாங்குகிருரா? इत्थं-இவ்விதமான, शङ्कां-ஸந்தேஹத்தை, जनानां-ஜனங்களுக்கு, जनयत्-உண்டு பண்ணுகின்றதும், अतिघनं-மிகவும் நெருக்கமானதும், कालमेघच्छायं-கரும்முகில்போன்ற நிறமுள்ளதும், उदारं-சிறந்ததுமான, त्रिपुरविजयिनः-த்ரிபுரர்களை ஜயித்த பரமசிவனின் कैशिकं-கேச ஸமூஹம், नः-நமக்கு, भूयसे श्रेयसे-அதிகமான நன்மையின் பொருட்டு, भूयात्-ஆகட்டும்.

இந்த சுலோகத்தில் பகவானின் கேசபாரத்தை வர்ணிக்கிருர். அது கருமேகம் போல மிகக் கருமையாகவும் அடர்த்தியாகவும் சிறந்ததாகவும் விளங்குகிறது. ஈசவரன் சிரஸ்ஸில் கங்கையை தரித்துக்கொண்டிருக்கிருர். அதனுல் அவருக்கு கங்காதரர் என்று பெயர். இதைப்பார்த்து யமுனை தானும் சக்களத்தியான கங்கையின் நிலையை அடையவேண்டுமென்ற எண்ணங்கொண்டு தவம் செய்து பகவானிடம் வேண்டிக் கொண்டதின் பேரில் கருணமூர்த்தியான அவரும் அங்கீகரித்து அவளுடைய எண்ணத்தை நிறைவேற்ற யமுனையை தம் சிரஸ்ஸில் வைத்துக்கொண்டிருக்கிருரோ என்ற ஸந்தேஹம் பார்ப்பவர்களுக்கு ஏற்படுகிறது. யமுனை கருப்பு நிறத்துடன் காணப்படுகிறது. மேலும் நீண்ட கேசத்தை விரித்தால் பிரவாஹம் போலவும் தோன்றுகிறது. கேசம் பிரவாஹம்போல் காக்ஷி அளிப்பதால்தான் கேசத்தைக்குறிக்கும் वेणी (வேணீ) என்ற பதம் பிரவாஹத்தையும் குறிக்கிறது. ஸூரியனும் சந்திரனும் பகவானுடைய கண்களாக இருப்பவர்கள். அதில் அமிருத கிரணனுயிருப்பதால் சந்திரனுக்கு பகவானின் சிரஸ்ஸில் ஸ்தானம் கிடைத்தது. க்ரூரமான கிரணமுள்ள ஸூரியனுக்கு அந்த ஸ்தானம் கிடைக்கவில்லை. ஆனுலும் அவன் பெண்ணுன யமுனை மஹா பாக்யத்தால் தன் பிதாவுக்குக் கிடைக்காத அந்த ஸ்தானத்தை அடைந்துவிட்டாள். खरांशोः (கராம்சோ:) என்ற பதத்திலிருந்து இது த்வனிக்கிறது. யமுனையின் பிரவாஹமோ என்று தோன்றும் கேசபாரம் நமக்கு அதிகமான நன்மையைக் கொடுக்கட்டும். (32)

கிரீடம்:—

भृङ्गाराकल्पयोग्यैः शिखरिवरसुतासत्सखीहस्तलूनैः
सूनैराबद्धमालावलिपरिविलसत्सौरभाकृष्टभृङ्गम् ।

**तुङ्गं माणिक्यकान्त्या परिहसितसुरावासशैलेन्द्रश्रृङ्गं**
**संघं नः संकटानां विघटयतु सदा काङ्कटीकं किरीटम् ॥**

*ச்ருங்காராகல்ப யோக்யை: ஶிகரிவர ஸுதா ஸத்ஸகீ ஹஸ்த லூனை:*
*ஸூனைராபத்த மாலாவளி பரிவிலஸத் ஸௌரபாக்ருஷ்ட ப்ருங்கம்।*
*துங்கம் மாணிக்ய காந்த்யா பரிஹஸித ஸுராவாஸ ஶைலேந்த்ர ச்ருங்கம்*
*ஸங்கம் ந: ஸங்கடானாம் விகடயது ஸதா காங்கடீகம் கிரீடம் ॥*

**शृङ्गाराकल्पयोग्यैः**-சிருங்கார வேஷத்திற்குத் தகுந்தவைகளும், **शिखरिवर**-மலைகளில் சிறந்த ஹிமவானின், **सुता**-பெண்ணான பார்வதியின், **सत्सखीहस्तलूनैः**-நற்தோழிகளின் கைகளால் பறிக்கப்பட்டவைகளுமான, **सूनैः**-மலர்களால், **आबद्ध**-கட்டப்பட்ட, **मालावलि**-மாலைகளின் வரிசையில், **परिविलसत्**-விளங்கும், **सौरभाकृष्टभृङ्गं**-நறுமணத்தால் இழுக்கப்பட்ட வண்டுகளை உடையதும், **तुङ्गं**-உயரமானதும், **माणिक्यकान्त्या**-மாணிக்கத்தின் ஒளியால், **परिहसित**-பழிக்கப்பட்ட, **सुरावास**-தேவர்களின் இருப்பிடமான, **शैलेन्द्र**-மேருமலையின், **शृङ्गं**-உச்சியை உடையதும், **काङ्कटीकं**-ஸுவர்ண லோஹத்தால் ஆனதுமான, **किरीटं**-கிரீடமானது, **नः**-நம்முடைய, **संकटानां संघं**-துன்பங்களுடைய கூட்டத்தை, **सदा**-எப்பொழுதும், **विघटयतु**-விலக்கட்டும்.

பகவானின் சிரஸ்ஸில் விளங்கும் கிரீடம் உயரமாகவும் மாணிக்க ரத்னம் பதிக்கப்பட்டும் விளங்குகிறது. தன் ஒளியால் தேவர்கள் வாழும் தங்கமலையையும் தோற்கச் செய்கிறது. பார்வதீ தேவியின் அருமைத் தோழிகள் தங்கள் கையாலேயே சிருங்கார வேஷத்திற்குத் தகுந்ததான நறுமணமும் அழகிய நிறமுமுள்ள மலர்களைப் பறித்து மாலைகள் கட்டி கிரீடத்தில் அணிவித்திருக்கிறார்கள். அதிலுள்ள சிறந்த வாசனையால் கவரப்பட்டு வண்டுகள் வந்து மொய்க்கின்றன. இந்தக் கிரீடம் எல்லாத் துன்பங்களையும் போக்கட்டும். (33)

சந்திரகலை :—

वक्राकारः कलङ्की जडतनुरहमप्यङ्घ्रिसेवानुभावा-
दुत्तंसत्वं प्रयातः सुलभतरघृणास्यन्दिनश्चन्द्रमौलेः ।
तत्सेवन्तां जनौघाः शिवमिति निजयावस्थयैव ब्रुवाणं
वन्दे देवस्य शंभोर्मुकुटसुघटितं मुग्धपीयूषभानुम् ॥ ३४ ॥

*வக்ராகார: களங்கீ ஜட தனுரஹமப்யங்க்ரி ஸேவானுபாவாத்.*
*உத்தம்ஸத்வம் ப்ரயாத: ஸுலபதர க்ருணா ஸ்யந்தினச் சந்த்ரமௌளே: ।*
*தத் ஸேவந்தாம் ஜனௌகா: ஶிவமிதி நிஜயாவஸ்த்தயைவ ப்ருவாணம்*
*வந்தே தேவஸ்ய ஶம்போர் முகுட ஸுகடிதம் முக்தபீயூஷ பானும் ॥*

**वक्राकारः**–கோணலான உருவமுள்ளவனும், **कलङ्की**–குற்றமுள்ளவனும், **जडतनुः**- அறிவற்ற சரீரமுள்ளவனுமான **अहमपि**–நானும், **अंघ्रिसेवानुभावात्**–பாதஸேவா மஹிமையால், **सुलभतर**–மிகவும் எளிதில் அடையத்தக்க, **घृणास्यन्दिनः**–கருணை ப்ரவாஹத்துடன்கூடிய, **चन्द्रमौलेः**–பரமசிவனின், **उत्तंसत्वं**–சிரோபூஷணமாக இருக்கும் தன்மையை, **प्रयातः**–அடைந்திருக்கிறேன். **तत्**–ஆகையால், **जनौघाः**–ஜன ஸமூஹங்களே! **शिवं**–சிவனை, **सेवन्तां**–ஸேவியுங்கள், **इति**–என்று **निजया अवस्थयैव**–தன் நிலைமையினாலேயே, **ब्रुवाणं**–சொல்கிறவனும், **देवस्य**–தேவனான, **शंभोः**–பரமசிவனின் **मुकुटसुघटितं**–கிரீடத்தில் சேர்க்கப்பட்டுள்ளவனுமான, **मुग्धपीयूषभानुं**–அழகிய அம்ருதகிரணனான சந்திரனை, **वन्दे**–வணங்குகிறேன்.

*சிவனின் சிரஸ்ஸில் விளங்கும் சந்திரனை வணங்குகிறார். பரமசிவனின் சிரஸ்ஸில் கிரீடத்தில் உள்ள சந்திரன் அவருடைய சிரஸ்ஸிற்கே அணிகலனாக விளங்குகிறான், எல்லோரும் வணங்கும் ஸர்வேசுவரனுடைய அங்கங்களில் மிகவும் மேலாக உள்ள சிரஸ்ஸில் அதாவது மிகவும் உயர்ந்ததும் சிறந்ததுமான ஸ்தானத்தில் சந்திரனுக்கு இடம் கிடைத்திருக்கிறது. சந்திரனோ*

எல்லா தோஷங்களும் நிரம்பியவன். பரமசிவனின் சிரஸில் விளங்கும் பாதிப்பிறை வடிவம் கோணலானது (வளைந்துள்ளது) குற்றமுள்ளவன் (களங்கமுள்ளவன்) அறிவில்லாதவன் (குளிர்ச்சியான சரீரமுள்ளவன்) 'डलयोरभेदः' (டலயோரபேத:) என்ற நியாயத்தால் ஜலமயமான சரீரமுள்ளவன் என்றும் சொல்லலாம். புண்யத்தின் பயனாக சந்திரமண்டலத்திற்குச் சென்ற ஜீவர்களின் சரீரமும் ஜலமயமாக குளிர்ச்சியாக இருக்கும் என்று உபநிஷத் கூறுகிறது. இவ்வாறு பல தோஷங்கள் உள்ள சந்திரன் ஈசுவரனுடைய சிரஸில் இருப்பதற்குக் கொஞ்சமும் தகுதியற்றவன். ஆனாலும் பகவத்பாதாரவிந்தத்தை ஸேவித்ததாலும், பகவானின் கருணைபிரவாஹம் யாவரும் மிகவும் எளிதாகப் பெறத்தக்கதாக இருக்கிறபடியாலும்தான் இந்த உயர்ந்த ஸ்தானம் சந்திரனுக்கும் கிடைத்துவிட்டது ஜனக் கூட்டத்தில் உயரமான மேடையில் ஏறி பேச்சாளர்கள் பேசுவது போல் சந்திரனும் உயரமான இடத்தில் இருந்துகொண்டு "ஹே ஜனங்களே என்னைப்போல இந்த உயர்ந்த ஸ்தானத்தை அடைய விரும்பினால் நீங்களும் சிவ சரணங்களை ஸேவியுங்கள். அவர் கருணையால் இந்த ஸ்தானத்தை அடையலாம். அந்தக்கருணையை யாவரும் எளிதில் பெறலாம்" என்று தன் நிலையைக்காட்டி எடுத்துக்கூறுகிறானோ என்று தோன்றும்படியாக இருக்கிறது. சிவனுடைய சிரஸ்ஸில் விளங்குவதால் அந்த சந்திரனையும் வணங்குகிறேன். (34)

வெண்குடை: —

कान्त्या संफुल्लमल्लीकुसुमधवलया व्याप्य विश्वं विराज-
न्वृत्ताकारो वितन्वन्मुहुरपि च परां निर्वृतिं पादभाजाम् ।
सानन्दं नन्दिदोष्णा मणिकटकवता वाह्यमानः पुरारेः
श्वेतच्छत्राख्यशीतद्युतिरपहरतादापदस्तापदा नः ॥ ३५ ॥

காந்த்யா ஸம்புல்ல மல்லீ குஸும தவளயா வ்யாப்ய விச்வம்
விராஜன்
வ்ருத்தாகாரோ விதன்வன் முஹுரபிச பராம் நிர்வ்ருதிம்
பாதபாஜாம் ।
ஸாநந்தம் நந்தி தோஷ்ணா மணிகடகவதா வாஹ்யமான: புராரே:
ச்வேதச்சத்ராக்ய ஶீதத்யுதிரபஹரதாதாபதஸ் தாபதா ந: ॥

संफुल्ल-நன்கு மலர்ந்த், मल्लीकुसुम-மல்லிகை மலர்போல், धवलया-வெளுப்பான, कान्त्या-ஒளியிஞல், विश्वं-பிரபஞ்சத்தை, व्याप्य-வியாபித்துக்கொண்டு, विराजन्-விளங்குகின்றதும், वृत्ताकारः-வட்டமான வடிவமுள்ளதும், पादभाजां-திருவடிகளை ஸேவிக்கிறவர்களுக்கு, परां-உயர்ந்த, निर्वृतिं-ஆனந்தத்தை, मुहुरपि च-அடிக்கடி, वितन्वन्-உண்டு பண்ணுகிறதும், मणिकटकवता-ரத்தினக் காப்புகளுடன் கூடிய, नन्दिदोष्णा-நந்தியின் கையால், सानन्दं-ஸந்தோஷத்துடன்கூட, वाह्यमानः-தாங்கப்படுகிறதுமான, पुरारेः-பரம சிவனின், श्वेतच्छत्राख्यशीतद्युतिः-வெண்குடை என்ற பெயருள்ள சந்திரன், नः-நமக்கு, तापदाः-தாபத்தைத்தரும் आपदः-ஆபத்துக்களை, अपहरतात्-போக்கட்டும்.

நந்திகேசுவரர் ரத்ன கடகம் பூண்ட தம் திருக்கைகளால் பகவானுக்கு வெண்குடை பிடிக்கிருர். அவர் சிறந்த பக்தரானதால் இந்தக் கைங்கர்யம் தனக்குக் கிடைத்ததே என்ற ஸந்தோஷத்துடன் குடை பிடிக்கிருர். மல்லிகை மலர் போன்ற வெண்மை நிறம் கொண்டது குடை. வட்ட வடிவமுள்ள இதன் ஒளி உலகம் முழுவதும் பரவியுள்ளது. பாதஸேவை செய்யும் பக்தர்கள் இதைப்பார்த்துப் பார்த்து ஆனந்தமடைகின்றனர். அவர் பாதத்தை அடைந்தவர்களுக்கும் வெண்குடையின் நிழல் கிடைக்கும். இது வெண்மதி போல் விளங்குகின்றது. இந்த வெண்குடை மனதிற்கும் உடலுக்கும் தாபங்களைத்தரும் துன்பங்களையெல்லாம் விலக்கட்டும். (35)

(அ) சாமரம் போடும் சேடிகளுடைய கைவளையல்களின் ஒலியைத் துதிக்கிருர்:—

दिव्याकल्पोज्ज्वलानां शिवगिरिसुतयोः पार्श्वयोराश्रितानां
रुद्राणीसत्सखीनां मदतरलकटाक्षाञ्चलैरञ्चितानाम् ।
उद्वेल्लद्बाहुवल्लीविलसनसमये चामरान्दोलनीना-
मुद्भूतः कङ्कणालीवलयकलकलो वारयेदापदो नः ॥

திவ்யாகல்போஜ்வலானும் ஶிவ கிரிஸுதயோ:
பார்ச்வயோராச்ரிதானும்
ருத்ராணீ ஸத்ஸகீனும் மத தரள கடாக்ஷாஞ்சலைரஞ்சிதானும் ।
உத்வேல்லத் பாஹுவல்லீ விலஸன ஸமயே
சாமராந்தோலனீனும்
உத்பூத: கங்கணலீ வலய கலகலோ வாரயேதாபதோ ந: ।

**दिव्याकल्पोज्वलानां**-சிறந்த வேஷங்களுடன் விளங்குபவர்களும், **शिवगिरिसुतयोः**-சிவன், பார்வதீ இவர்களுடைய, **पार्श्वयोः**- இருபக்கங்களை, **आश्रितानां**-அடைந்திருக்கின்றவர்களும், **मदतरल**-லாகிரியால் சஞ்சலமான, **कटाक्षाञ्चलैः**-கடைக்கண் பார்வைகளுடன், **अंचितानां**-விளங்குகின்றவர்களும், **रुद्राणीसत्सखीनां**-பார்வதியின் நற்தோழிகளுமான, **चामरान्दोलनीनां**-சாமரம் வீசும் பெண்களின், **उद्वेल्लद्बाहुवल्ली-विलसनसमये**-அசைகின்ற கொடிபோன்ற கைகளை அழகாக ஆட்டும் சமயத்தில், **उद्भूतः**-உண்டான, **कङ्कणालीवलय-कलकलः**-காப்புவரிசை, வளைகள் இவற்றின் 'கல கல' என்னும் ஒலி, **नः**-நம்முடைய, **आपदः**-ஆபத்துக்களை, **वारयेत्**-தடுக்கட்டும்.

*பார்வதீ பரமேசுவரர்கள் சேர்ந்து ஸபையில் வீற்றிருக்கின்றனர். பார்வதியின் அருகில் சில பெண்களும் சிவனின் அருகில் சில பெண்களும் நின்று சாமரம் வீசுகின்றனர். இவர்கள் எல்லோரும் பார்வதீ தேவியின் சிறந்த தோழிகள். இவர்கள் சிறந்த வேஷம் தரித்திருக்கின்றனர். தாம்பூலம் முதலியவற்றின் லாகிரியால் கண் பார்வை சுழலுகிறது இவர்கள் சாமரம்போடும் பொழுது கைகள் அசைந்து அவற்றிலுள்ள கங்கணங்கள், வளையல்கள் இவைகள் 'கல கல' என்று ஒலிக்கின்றன. இந்த ஒலி நம் ஆபத்தைத் தடுக்கட்டும்.* (36)

**நர்த்தனம் :—**

स्वर्गौकस्सुन्दरीणां सुललितवपुषां स्वामिसेवापराणां
वल्गद्भूषाणि वक्त्राम्बुजपरिविगलन्मुग्धगीतामृतानि ।
नित्यं नृत्तान्युपासे भुजविधुतिपदन्यासभावावलोक-
प्रत्युद्यत्प्रीतिमाद्यत्प्रमथनटनटीदत्तसंभावनानि ॥ ३७ ॥

ஸ்வர்க்கௌகஃ ஸுந்தரீணும் ஸுலலித வபுஷாம்
ஸ்வாமி ஸேவா பராணும்
வல்கத் பூஷாணி வக்த்ராம்புஜ பரிவிகலன் முக்த கீதாம்ருதானி ||
நித்யம் ந்ருத்தான்யுபாஸே புஜ விதுதி பதந்யாஸ பாவாவலோக
ப்ரத்யுத்யத் ப்ரீதி மாத்யத் ப்ரமத நட நடீ தத்த ஸம்பாவனுனி ||

**सुललितवपुषां**–மிக அழகிய சரீரமுள்ளவர்களும், **स्वामिसेवापराणां**–யஜமானனுன பரமசிவனுக்கு ஸேவை செய்வதில் ஈடுபட்டவர்களுமான, **स्वर्गौकस्सुन्दरीणां**–ஸ்வர்க்க லோகத்தில் வாழும் அழகிய பெண்களின், **वल्गद्भूषाणि**–அசையும் ஆபரணங்களை உடையவைகளும், **वक्त्राम्बुजपरिविगलन्मुग्धगीतामृतानि**–தாமரைபோன்ற முகத்திலிருந்து வெளிவரும் அழகிய அமிருதம்போன்ற கானங்களை உடையவைகளும் **भुजविधुति**–ஹஸ்தங்களை அசைத்தல் (அபிநயம்), **पदन्यास**–பாதங்களை எடுத்து வைத்தல், **भावावलोक**–சிருங்காரம் முதலான பாவங்களுடன் பார்வை இவைகளால், **प्रत्युद्यत्**–உண்டாகும், **प्रीति**–ஸந்தோஷத்தால், **माद्यत्**-மதம் கொண்ட **प्रमथनटनटी**–ப்ரமத கணங்களிலுள்ள நடர்களாலும் நர்த்தகிகளாலும், **दत्त**–கொடுக்கப்பட்ட, **संभावनानि**–நன் மதிப்பை உடையவைகளாயுமுள்ள, **नृत्यानि**–நர்த்தனங்களை, **नित्यं**–எப்பொழுதும், **उपासे**–தியானம் செய்கிறேன்.

ஸ்ரீ பரமேசுவரனும் பார்வதியும் அமர்ந்திருக்கும் ஸபையில் ஸ்வர்க்கலோகத்தில் வஸிக்கும் அழகிய அப்ஸர ஸ்திரீகள் ஈசுவர ஸேவையாகவே எண்ணி நாட்யமாடுகின்றனர். அழகிய சரீரமுள்ள அவர்கள் அணிந்துள்ள அலங்காரங்கள் நாட்டியம் ஆடும்பொழுது அசைகின்றன. இது பார்ப்பதற்கு மனேக்ஞமாக இருக்கிறது. அவர்களின் முகாரவிந்தத்திலிருந்து வெளி வரும் கானம் கர்ணுமிருதமாக இருக்கிறது. ஹஸ்தாபிநயம், பாதந்யாஸம், நன்கு பாவங்களைக் காட்டுகின்ற பார்வைகள் இவைகளைப் பார்த்து ஆனந்த பரவசர்களாக ப்ரமதகணங்களிலுள்ள நடனக்கலையில் தேர்ந்த ஆண்களும் பெண்களும் மெச்சுகின்றனர். இவ்விதமான நர்த்தனங்களை தியானிக்கிறேன். (37)

நாரதகானம் :—

स्थानप्राप्त्या स्वराणां किमपि विशदतां व्यञ्जयन्मञ्जुवीणा-
स्वानावच्छिन्नतालक्रममममृतमिवास्वाद्यमानं शिवाभ्याम् ।
नानारागातिहृद्यं नवरसमधुरस्तोत्रजातानुविद्धं
गानं वीणामहर्षेः कलमतिललितं कर्णपूरायतां नः ॥ ३८ ॥

ஸ்தான ப்ராப்த்யா ஸ்வராணாம் கிமபி விஶததாம் வ்யஞ்ஜயன் மஞ்ஜுவீணா
ஸ்வானாவச்சின்ன தாள க்ரமமம்ருதமிவாஸ்வாத்யமானம் ஶிவாப்யாம் ।
நானா ராகாதிஹ்ருத்யம் நவரஸ மதுர ஸ்தோத்ர ஜாதானுவித்தம்
கானம் வீணாமஹர்ஷே: கலமதிலலிதம் கர்ணபூராயதாம் ந: ॥

**स्थानप्राप्त्या**–அதனதன் ஸ்தானங்களை அடைவதால், **स्वराणां**–ஸ்வரங்களின், **विशदतां**–தெளிவாக இருக்கும் தன்மையை, **किमपि**–வர்ணிக்க முடியாதபடி, **व्यञ्जयत्**–எடுத்துக்காட்டுகின்றதும், **मञ्जुवीणा**–அழகிய வீணையின், **स्वानावच्छिन्न**–நாதத்துடன் சேர்ந்த, **तालक्रमं**–தாள வரிசையை உடையதும், **नानारागातिहृद्यं**–பலவிதமான ராகங்களால் மனதிற்கு மிகவும் இன்பத்தைத் தருவதும், **नवरसमधुर**–ஒன்பது ரஸங்களுடன் கூடிய இனிமையான, **स्तोत्रजातानुविद्धं**–பல ஸ்தோத்ரங்களுடன் கூடியதும், **शिवाभ्यां**–பார்வதீ பரமேசுவரர்களால், **अमृतमिव**–அமிருதத்தைப்போல, **आस्वाद्यमानं**–அனுபவிக்கப்படுகிறதும், **कलं**–அவ்யக்தமானதும், **अतिललितं**–மிகவும் லலிதமானதுமான, **वीणामहर्षेः**–வீணையுடன் ஸஞ்சரிக்கும் நாரதரின், **गानं**–கானமானது, **नः**–நமக்கு, **कर्णपूरायतां**–காதுக்கு ஆபரணமாயிருக்கட்டும்.

பரமசிவனுடைய ஸபையில் நடைபெறும் நாரத மஹரிஷியின் வீணாகானம் நம் காதுகளுக்கு ஆபரணமாக இருக்கட்டும். இந்த சுலோகத்தில் 'நாரதர்' என்ற பெயர் குறிப்பிடப்படாவிட்டாலும், மஹரிஷிகளுள் நாரதர் ஒருவரே வீணாகானம் செய்கிறவரானபடியால் 'வீணா மஹரிஷி' என்ற பதம் நாரதரைக்

குறிக்கிறது. அழகிய வீணையின் நாதத்திற்குத் தகுந்தபடி தாள வரிசைகளுடனும், அதனதன் ஸ்தானங்களை அடைவதால் ஸ்வரங்கள் தெளிவாகவும் இனிமையாகவும் இருக்கும்படியும் வீணாகானம் நடைபெறுகிறது. பலவித ராகங்களாலும் நவரஸ பரிதமான ஸ்தோத்ரங்களாலும் லலிதமும் இனிமையும் கலந்த அந்த வீணாகானத்தை அமிருதத்தைப் பருகுவது போல் பார்வதீ பரமேசுவரர்கள் கேட்டு இன்புறுகின்றனர். இந்த நாரதரின் வீணாகானத்தைக் கேட்பதுதான் காதுகளுக்குச் சிறப்பையளிக்கக் கூடியது. (38)

முரஜ நாதம்:—

चेतो जातप्रमोदं सपदि विदधती प्राणिनां वाणिनीनां
पाणिद्वन्द्वाग्रजाग्रत्सुललितरणितस्वर्णतालानुकूला ।
स्वीयारावेण पाथोधररवपटुना नादयन्ती मयूरीं
मायूरी मन्दभावं मणिमुरजभवा मार्जना मार्जयेन्नः ॥

சேதோ ஜாத ப்ரமோதம் ஸபதி விதததீ ப்ராணினும் வாணினீனும்
பாணித்வந்த்வாக்ர ஜாக்ரத் ஸுலலித ரணித ஸ்வர்ண
தாளானுகூலா ।
ஸ்வீயாராவேண பாதோதரரவபடுனா நாதயந்தீ மயூரீம்
மாயூரீ மந்தபாவம் மணிமுரஜபவா மார்ஜனா மார்ஜயேந்ந: ॥

प्राणिनां-பிராணிகளின், चेतः-மனதை, सपदि-உடனேயே जातप्रमोदं-ஸந்தோஷமடைந்ததாக, विदधती-செய்கின்றதும், वाणिनीनां-நர்த்தகிகளின், पाणिद्वन्द्वाग्र-இருகைகளின் நுனியில் जाग्रत्-விளங்கும், सुललित-மிக அழகிய, रणित-நாதத்தை உடைய, स्वर्णतालानुकूला-ஸுவர்ண மயமான தாளவாத்தியத்திற்கு ஒத்ததாயும், पाथोधररव-மேகநாதம் போல், पटुना-நன்கு ஒலிக்கும், स्वीयारावेण-தன் ஒலியால், मयूरीं-பெண்மயிலை, नादयन्ती-சப்தமிடச்செய்கின்றதும், मायूरी-மயிலுக்குப்பிரியமுமான, मणिमुरजभवा-ரத்னக்கற்கள் பதித்த முரஜவாத்யத்திலிருந்து உண்டான, मार्जना-ஒலி, नः-நம்முடைய, मन्दभावं-அறியாமையை, मार्जयेत्-போக்கட்டும்.

பரமேசுவரனது திருச்சபையில் வாசிக்கும் முரஜ வாத்யத்தின் நாதம் நம் அறியாமையைப் போக்கட்டும். நர்த்தகிகள் தங்கள் இரு கைகளில் விளங்கும் ஸ்வர்ண தாள வாத்தியத்திலிருந்து கைகளின் நுனியால் எழுப்பும் தாளத்திற்கு ஒற்றுமையாக முரஜ வாத்யம் ஒலிக்கிறது. மேகத்தின் ஒலிபோன்ற இதன் நாதத்தால் பெண் மயில் ஆனந்தத்துடன் 'கேகா' என்று அகவுகிறது. இந்த நாதத்தைக்கேட்டவுடனேயே எல்லா பிராணிகளுடைய மனதிலும் ஸந்தோஷம் ஏற்படுகிறது. (39)

(அ) கடைசியில் பகவத் பக்தர்கள் யாவரையும் வணங்குகிறார்:—

देवेभ्यो दानवेभ्यः पितृमुनिपरिषत्सिद्धविद्याधरेभ्यः
साध्येभ्यश्चारणेभ्यो मनुजपशुपतज्जातिकीटादिकेभ्यः ।
श्रीकैलासप्ररूढास्तृणविटपिमुखाश्चापि ये सन्ति तेभ्यः
सर्वेभ्यो निर्विचारं नतिमुपरचये शर्वपादाश्रयेभ्यः ॥ ४० ॥

தேவேப்யோ தானவேப்ய: பித்ரு முனி பரிஷத் ஸித்த
வித்யாத்ரேப்ய:
ஸாத்யேப்யச்சாரணேப்யோ மனுஜ பசு பதஜ்ஜாதி
கீடாதிகேப்ய: I
ஸ்ரீகைலாஸ ப்ரருடாஸ்த்ருண விடபிமுகாச்சாபி யே ஸந்தி தேப்ய:
ஸர்வேப்யோ நிர்விசாரம் நதிமுபரசயே சர்வ பாதாச்ரயேப்ய: ॥

देवेभ्यः-தேவர்களுக்கும், दानवेभ्यः-அஸுரர்களுக்கும், पितृ-பித்ருக்கள், मुनि-முனிவர் இவர்களின், परिषत्-கூட்டம், सिद्ध-ஸித்தர், विद्याधरेभ्यः-வித்யாதரர் இவர்களுக்கும், साध्येभ्यः-ஸாத்யர்களுக்கும், चारणेभ्यः-சாரணர்களுக்கும், मनुज-மனிதர், पशु-மிருகம், पतज्जाति-பறவை இனம், कीटादिकेभ्यः-புழு முதலியவைகளுக்கும், ये-எந்த, तृणविटपि-मुखाः-புல், மரம் முதலியவைகள், श्रीकैलासप्ररूढाः-ஸ்ரீ கைலாஸத்தில் முளைத்து, सन्ति-இருக்கின்றனவோ, तेभ्यश्चापि-அவைகளுக்கும், शर्वपादाश्रयेभ्यः-பரமசிவனின் திருவடிகளை அண்டிய, सर्वेभ्यः-எல்லாவற்றிற்கும், निर्विचारं-ஆலோசனையில்லாமல், नति-நமஸ்காரத்தை, उपरचये-செய்கிறேன்.

பரமசிவனுடைய திருவடிகளை அண்டியவர்கள் எப்பிறவியில் இருந்தபோதிலும் அவர்களுடைய ஜாதி, குலம், கௌரவம், ஐசுவர்யம் முதலான ஒன்றையும் கவனியாமல், அவர்கள் மேலான நிலையிலிருந்தாலும் தாழ்ந்த நிலையிலிருந்தாலும் அவர்கள் பகவத் பக்தர்களாயிருந்தால் அவர்களை வணங்குகிறேன். அதாவது தேவர்கள், அஸுரர்கள், பித்ருக்கள், முனிவர்கள், ஸித்தர்கள், வித்யாதரர்கள், ஸாத்யர்கள், சாரணர்கள் முதலான உயர் பிறவியிலுள்ளவர்களுக்கும், மத்யமஜாதியான மனிதர்களுக்கும் மிருகம், பறவை, புழு முதலான கீழ்ப்பிறவியிலுள்ளவர்களுக்கும் நமஸ்காரம். இதுமட்டுமா! பகவான் வாஸம்செய்யும் கைலாஸத்தில் முளைத்த புல், பூண்டுகளுக்கும் விருக்ஷங்களுக்கும் நமஸ்காரம் செய்கிறேன். (40)

(அ) இந்த ஸ்தோத்ர பாடத்தின் பலன் கூறப்படுகிறது:—

ध्यायन्नित्थं प्रभाते प्रतिदिवसमिदं स्तोत्ररत्नं पठेद्यः
किं वा ब्रूमस्तदीयं सुचरितमथवा कीर्तयामः समासात् ।
संपज्जातं समग्रं सदसि बहुमतिं सर्वलोकप्रियत्वं
संप्राप्यायुःशतान्ते पदमयति परब्रह्मणो मन्मथारेः ॥ ४१ ॥

த்யாயன்னித்தம் ப்ரபாதே ப்ரதிதிவஸமிதம் ஸ்தோத்ரரத்னம் படேத் ய:
கிம் வா ப்ரூமஸ்ததீயம் ஸுசரிதமதவா கீர்த்தயாம: ஸமாஸாத் ।
ஸம்பஜ்ஜாதம் ஸமக்ரம் ஸதஸி பஹுமதிம் ஸர்வலோக ப்ரியத்வம்
ஸம்ப்ராப்யாயு:ஶதாந்தே பதமயதி பரப்ரஹ்மணோ மன்மதாரே: ॥

प्रतिदिवसं-ஒவ்வொருநாளும், प्रभाते-காலையில், इत्थं-இவ்வாறு, ध्यायन्-தியானம் செய்துகொண்டு, इदं-இந்த, स्तोत्ररत्नं-சிறந்த ஸ்தோத்திரத்தை, यः-எவன், पठेत्-படிப்பானோ, तदीयं-அவனுடையதான, सुचरितं-புண்யத்தை, किं वा ब्रूमः-என்னவென்று சொல்வோம்? अथवा-அல்லது, समासात्-சுருக்கமாக, कीर्तयामः-சொல்கிறோம். समग्रं-நிறைந்த, संपज्जातं-எல்லாச் செல்வங்களையும், सदसि-ஸபையில், बहुमतिं-நன்மதிப்பையும், सर्वलोकप्रियत्वं-எல்லா ஜனங்

களுக்கும் பிரியனுக இருக்கும் தன்மையையும், **संप्राप्य**-அடைந்து, **आयुश्शतान्ते**-நூறு வயது ஆயுளைப்பெற்று அதன் முடிவில், **परब्रह्मण:**-பரப்ரஹ்மமான, **सत्पथारे:**-பரம சிவனின், **पदं**-ஸ்தானத்தை, **अयति**-அடைகிறுன்.

*பிரதி தினமும் காலையில் இதில் கூறியுள்ளபடி பகவானை தியானம் செய்துகொண்டு இந்தச் சிறந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்பவனின் புண்யத்தை அளவிட்டுக் கூறவே முடியாது. ஆனுலும் சுருக்கிக்கூறலாம். அதாவது நிறைந்த எல்லாச் செல்வங்களையும் ஸபையில் மிகுந்த கௌரவத்தையும் எல்லா ஜனங்களுக்கும் ப்ரியனுக இருக்கும் தன்மையையும் பெற்று 100 வயது முடிய இவ்வுலகில் ஸுகமாக வாழ்ந்து பின்னல் பரப்ரஹ்மபதத்தை அடைவான் இந்த ஸ்தோத்திரத்தை படிப்பவன்.* (41)

ஸ்ரீ சிவபாதாதி கேசாந்த ஸ்தோத்ரம் முற்றும்.



॥ श्रीः ॥

# श्री दक्षिणामूर्तिवर्णमालास्तोत्रम् ॥

# ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி வர்ணமாலா ஸ்தோத்ரம்

[ஸ்ரீ பகவத்பாதர் இயற்றி அருளியுள்ள மூன்று தக்ஷிண மூர்த்தி ஸ்தோத்ரங்களில் ஒரு தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரம் 8வது மலரிலும், தக்ஷிணமூர்த்யஷ்டகம் 9வது மலரிலும் வெளியாகி யுள்ளது மூன்றாவதான இது 25 சுலோகங்கள் கொண்டது. 24 அக்ஷரங்கள் கொண்ட ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி மஹாமந்திரத்தில் உள்ள ஒவ்வொரு அக்ஷரமும் வரிசையாக இதிலுள்ள சுலோகங் களின் முதல் வர்ணமாக அமைந்துள்ளது. இது மத்தமயூர விருத்தத்தில் அமைந்துள்ளது. கடைசி சுலோகத்தில் இந்த விபரத்தைக் கூறி பரமாத்மாவிடம் இந்த ஸ்துதியை அர்ப்பணம் செய்கிறார். உபநிஷத்திலுள்ள அநேகம் கருத்துக்களை இதில் விளக்குவதுடன் ஈசுவரனை ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி நமது ஆத்மஸ்வருபம்தான் என்று கூறி அத்வைத தத்வத்தையும் உபதேசிக்கிறார்.]

ॐमित्येतद्यस्य बुधैर्नाम गृहीतं
यद्भासेदं भाति समस्तं वियदादि ।
यस्याज्ञातः स्वस्वपदस्था विधिमुख्या-
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १ ॥

ஓமித்யேதத் யஸ்ய புதைர் நாம க்ருஹீதம்
யத்பாஸேதம் பாதி ஸமஸ்தம் வியதாதி ।
யஸ்யாக்ஞாதஃ ஸ்வஸ்வபதஸ்தா விதிமுக்யா:
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**ओमिति**-'ஓம்' என்ற, **एतत्**-இந்த, **यस्य**-எவருடைய, **नाम**-பெயர், **बुधैः**-ஞானிகளால், **गृहीतं**-ஸ்வீகரிக்கப்பட்டதோ **यद्भासा**-எவருடைய காந்தியால், **वियदादि**-ஆகாசம் முதலான **इदं समस्तं**-காணப்படும் இந்த பிரபஞ்சம் முழுவதும், **भाति**-விளங்குகிறதோ, **यस्य**-எவருடைய, **आज्ञातः**-உத்தரவினால், **विधिमुख्याः**-பிரஹ்மா முதலானவர்கள், **स्वस्वपदस्थाः**-தம் தம்

ஸ்தானத்தில் இருக்கிறார்களோ, **तं**–அந்த, **प्रत्यञ्चं**–பிரத்ய காத்மஸ்வரூபியான, **दक्षिणवक्त्रं**–தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**–தியானம் செய்கிறேன்.

அறிவிற்சிறந்த பெரியோர்கள் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை 'ஓம்' என்ற பெயரால் வர்ணிக்கிறார்கள். **तस्य वाचकः प्रणवः** என்ற யோகஸூத்ரமும் 'ஓம்' என்ற பிரணவத்தை ஈசுவரனுடைய நாமாவாகக் கூறுகிறது '**ओमित्युमेति युवयोरभिधानमेकं**' என்று காளிதாஸ மஹாகவியும் இதையே கூறுகிறார். ஈசுவரனுக்கு எத்தனையோ நாமாக்கள் இருந்தாலும் இதுதான் உபநிஷத்தில் கூறப்பட்ட நாமா. இதை ஜபித்து தியானித்தால் வெகுசீக்கிரத்தில் அவர் ப்ரஸன்னராகி அபீஷ்டங்களைப் பூர்த்திசெய்கிறார். ஞானவடிவான அவருடைய சைதன்ய ப்ரகாசத்தால்தான் ஆகாசம் முதலான காரிய பிரபஞ்சம் முழுவதும் விளங்குகிறது. '**तस्य भासा सर्वमिदं विभाति**'. அவருடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டுத்தான் ப்ரஹ்மா முதலான யாவரும் தம்தம் அதிகாரத்தில் இருந்துகொண்டு உலகை நடத்துகின்றனர். தெற்கு முகமாக இருப்பதால் 'தக்ஷிணவக்த்ரர்' என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. அவருடைய ஸ்வரூபத்தையும் நமது ஜீவஸ்வரூபத்தையும் நன்கு சோதித்து உபாதிகளை விலக்கிப்பார்த்தால் சைதன்ய ஸ்வரூபம் ஒன்றேதான் மிஞ்சுகிறது. ஆகையால் அவரேதான் நமது ப்ரத்யகாத்ம ஸ்வரூபமாக விளங்குகிறார். (1)

**नम्राङ्गाणां भक्तिमतां यः पुरुषार्था-**
**न्दत्वा क्षिप्रं हन्ति च तत्सर्वविपत्तीः ।**
**पादाम्भोजाधस्तनितापस्मृतिमीशं**
**तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ २ ॥**

நம்ராங்காணாம் பக்திமதாம் ய: புருஷார்த்தான்
தத்வா க்ஷிப்ரம் ஹந்தி ச தத்ஸர்வ விபத்தீ: ।
பாதாம்போஜாதஸ்தனிதாபஸ்ம்ருதிமீசம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**यः**–எவர், **नम्राङ्गाणां**–வணங்கிய சரீரமுள்ள, **भक्तिमतां**–பக்தியுடன் கூடியவர்களுக்கு, **पुरुषार्थान्**–எல்லாப் புருஷார்த்

தங்களையும், **दत्वा**-கொடுத்து, **तत्सर्वैविपत्तीश्च**- அவர்களின் எல்லா ஆபத்துக்களையும், **क्षिप्रं**-விரைவில், **हन्ति**-போக்கடிக்கிறரோ, **पादाम्भोजाधस्तनित**-தாமரைபோன்ற திருவடிகளுக்குக்கீழே இருக்கும்படி செய்யப்பட்ட, **अपस्मृति**-அபஸ்மாரத்தை உடையவரும், **ईशं**-ஈசுவரனுமான, **तं**-அந்த, **प्रत्यञ्चं**-ஆத்மஸ்வரூபியான, **दक्षिणवक्त्रं**-தக்ஷிணாமூர்த்தியை **कलयामि**-தியானிக்கிறேன்.

மிகுந்த பக்தியுடன் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை வணங்குபவர்களுக்கு அவரது அருளால் எல்லா ஆபத்துக்களும் விலகும். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களையும் அவர்கள் பெறுவார்கள் படுத்துக்கொண்டிருக்கும் நிலையிலுள்ள ஒரு புருஷனை எழுந்திருக்கவொட்டாமல் தமது காலால் மிதித்துக்கொண்டிருப்பதை தக்ஷிணாமூர்த்தி வடிவத்தில் காணலாம். அவனே அபஸ்மாரரோக புருஷன். தக்ஷிணாமூர்த்தியை பக்தியுடன் வணங்குபவர்களுக்கு அபஸ்மார ரோகம் வராது. மற்ற எவ்விதமான ரோகமும் அண்டாது என்பதை இது காட்டுகிறது. நமது ஆத்மஸ்வரூபியான அந்த தக்ஷிணாமூர்த்தியை தியானம் செய்கிறேன். (2)

**मोहध्वस्त्यै वैणिकवैयासिकिमुख्याः**
**संविन्मुद्रापुस्तकवीणाक्षगुणान्यम् ।**
**हस्ताम्भोजैर्बिभ्रतमाराधितवन्त-**
**स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ ३ ॥**

மோஹத்வஸ்த்யை வைணிக வையாஸிகிமுக்யா:
ஸம்வின்முத்ரா புஸ்தக வீணாக்ஷகுணான் யம் ।
ஹஸ்தாம்போஜைர் பிப்ரதமாராதிதவந்த:
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**वैणिकवैयासिकिमुख्याः**-வீணாகானம் செய்யும் நாரதர், வியாஸர் குமாரரான சுகர் முதலானவர்கள், **मोहध्वस्त्यै**-அஞ்ஞானம் நாசமடைவதற்காக, **संविन्मुद्रा**-சின்முத்ரை, **पुस्तक**- புஸ்தகம், **वीणा**-வீணை, **अक्षगुणान्**-ஜபமாலை இவை

கஜா, **हस्ताम्भोजैः**–தாமரைபோன்ற கைகளால், **बिभ्रतं**–தரித்துக்கொண்டிருக்கும், **यं**–எவரை, **आराधितवन्तः**–ஆராதித்தார்களோ, **तं**–அந்த, **प्रत्यञ्चं**–பிரத்யகாத்மஸ்வரூபியான **दक्षिणवक्त्रं**–தக்ஷிணமூர்த்தியை, **कलयामि**–தியானம் செய்கிறேன்.

தக்ஷிணமூர்த்தி தமது நான்கு கைகளிலும் சின்முத்ரை புஸ்தகம், வீணை, ஜபமாலை இவைகளை தரித்திருக்கிறார். கட்டை விரலையும் ஆள்காட்டி விரலையும் ஒன்றுசேர்த்து ஜீவனும் ஈசவரனும் ஒன்றே என்ற தத்வத்தை விளக்கும் முத்ரை சிஷ்யர்களுக்கு ஞானத்தை உண்டுபண்ணுவதால் இதற்கு ஸம்வின்முத்ரை என்றும் சின்முத்ரை என்றும் பெயர். பக்தர்களில் சிறந்த நாரதரும், ஞானிகளில் சிறந்த சுகரும் இந்த தக்ஷிணமூர்த்தியை ஆராதித்துத்தான் அக்ஞானம் விலகப்பெற்று ஞானமடைந்தனர். எப்பொழுதும் கையில் வீணையை ஏந்திக்கொண்டு கானம் செய்யும் நாரதர் வீணாபாணியான ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியை உபாஸிப்பதும், பாலரான சுகர் தம்மைப்போலவே சிறு வயதினரான தக்ஷிணமூர்த்தியை உபாஸிப்பதும் மிக்கப் பொருத்தமுள்ளது. நாரதரும் சுகரும் உபாஸித்த தக்ஷிணமூர்த்தியை எனது ஆத்மஸ்வரூபமாக தியானிக்கிறேன். (3)

भद्रारूढं भद्रदमाराधयितॄणां
भक्तिश्रद्धापूर्वकमीशं प्रणमन्ति ।
आदित्या यं वाञ्छितसिद्ध्यै करुणाब्धिं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ ४ ॥

பத்ராரூடம் பத்ரதமாராதயித்ருணாம்
பக்தி ச்ரத்தா பூர்வகமீசம் ப்ரணமந்தி ।
ஆதித்யா யம் வாஞ்ச்சித ஸித்த்யை கருணாப்திம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**भद्रारूढं**–விருஷபவாஹனத்தில் ஏறி அமர்ந்திருப்பவரும் **आराधयितॄणां**–பூஜிப்பவர்களுக்கு, **भद्रदं**–மங்களங்களைத் தருபவரும், **करुणाब्धिं**–கருணைக்கடலுமான, **यं**–எந்த, **ईशं**–ஈசுவரனை, **आदित्याः**–தேவர்கள், **वाञ्छितसिद्ध्यै**–அபீஷ்டம்

நிறைவேறுவதற்காக, भक्तिश्रद्धापूर्वकं-பக்தி, சிரத்தை இவைகளுடன்கூட, प्रणमन्ति-வணங்குகிறார்களோ, तं-அந்த, प्रत्यञ्चं-ஆத்மஸ்வரூபியான, दक्षिणवक्त्रं-தக்ஷிணாமூர்த்தியை कलयामि-தியானிக்கிறேன்.

விருஷபவாஹனரான பரமேசுவரன் தன்னைப் பூஜிக்கிறவர்களுக்கு எல்லா மங்களங்களையும் கொடுக்கிறார். கருணைக் கடலான அந்த ஈசனைத் தங்கள் அபீஷ்டங்கள் நிறைவேறுவதற்காக தேவர்கள் பக்திசிரத்தையுடன் வணங்குகிறார்கள். பிரத்யகாத்மஸ்வரூபியான அந்த தக்ஷிணாமூர்த்தியை தியானம் செய்கிறேன். மனிதர்களுடைய இஷ்டங்களைப் பூர்த்திசெய்யும் தேவதைகளும் தங்கள் அபீஷ்டம் நிறைவேற இவரையே போற்றுகிறார்கள். இவருடைய பெயரான 'சிவம்' என்பது மங்களத்தைக் குறிக்கும். வாஹனமான விருஷபத்தைக்குறிக்கும் 'பத்ர' என்ற பதமும் மங்களத்தைக் குறிக்கும். அவருடைய தேவியான பார்வதிக்கும் 'ஸர்வமங்களா' என்று பெயர். ஆகையால் அவர், பஜிப்பவருக்கு மங்களத்தையே தருவார். (4)

गर्भान्तःस्थाः प्राणिन एते भवपाश-
च्छेदे दक्षं निश्चितवन्तः शरणं यम् ।
आराध्यांघ्रिप्रस्फुरदम्भोरुहयुग्मं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ ५ ॥

கர்ப்பாந்தஸ்த்தா: ப்ராணின ஏதே பவபாஶச்
சேதே தக்ஷம் நிச்சிதவந்த: ஶரணம் யம் ।
ஆராத்யாங்க்ரி ப்ரஸ்புரதம்போருஹ யுக்மம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

गर्भान्तःस्थाः-கர்ப்பத்திற்குள் இருக்கும், एते-இந்த, प्राणिनः-பிராணிகள், यं-எவரை, भवपाशच्छेदे-ஸம்ஸார பந்தத்தை அறுப்பதில், दक्षं-ஸமர்த்தராகவும், शरणं-ரக்ஷகராகவும், निश्चितवन्तः-தீர்மானித்திருக்கிறார்களோ, आराध्यांघ्रिप्रस्फुरदम्भोरुहयुग्मं-பூஜிக்கத்தக்க தாமரைபோல் விளங்கும் இரு திருவடிகளை உடைய, तं-அந்த, प्रत्यञ्चं-ஆத்மஸ்வரூபி

யான, दक्षिणवक्त्रं—தக்ஷிணாமூர்த்தியை, कलयामि—தியானம் செய்கிறேன்.

கர்ப்பத்திற்குள் வாஸம்செய்யும் ஸமயம் பிராணிகள் பிறவித் துன்பத்தை அடியோடு ஒழிக்கும் சக்தியுள்ளவர் பரமசிவன் தான் என்று தீர்மானித்து இவரையே வழிபடுகின்றனர். எல்லோராலும் போற்றத் தகுந்த திருவடித் தாமரைகளையுடைய ஆத்ம ஸ்வரூபியான தக்ஷிணாமூர்த்தியை தியானிக்கிறேன்.

[கர்ப்பத்தில் வஸிக்கும் ஜீவனுக்கு 9வது மாஸத்தில் சரீரத்தில் எல்லா அவயவங்களும் பூர்ணமாக ஏற்பட்டு தன்னைப்பற்றிய அறிவும் ஏற்படுகிறது. முன்னால் பல பிறவிகளில் தான் பட்ட கஷ்டங்களையும், தான் செய்த தீவினைகளையும் எண்ணி எண்ணி வருந்துகிறான். கர்ப்பத்தில் சிறிய இடத்தில் அசையத் திரும்ப முடியாமல் கட்டப்பட்டு பித்தாக்னியாலும் மற்றும் பலவிதமாயும் துன்பப்படுகிறான். தாய் காரமான உணவை உட்கொண்டால் இவனுக்குத் துன்பம் ஏற்படுகிறது. இதைப் போக்கத் தன்னால் ஒன்றும் செய்யமுடியாத நிலையிலிருக்கிறான். கர்ப்பத்திலிருந்து வெளியே வரும் வகையை எண்ணினாலோ அப்பப்ப! மிகவும் பயங்கரமாயிருக்கிறது. இவ்விதம் எண்ணி எண்ணி மனம் நொந்து "இதுவரை எத்தனையோ பிறவிகளை வீணாகக் கழித்து விட்டேன். இந்தத்தடவை கர்ப்பத்திலிருந்து வெளியேவந்ததும் மறுபடியும் பிறவி வராமலிருப்பதற்கு வேண்டிய ஸாதனங்களை அனுஷ்டிப்பேன்" என்று உறுதிகொள்கிறான். எந்த உபாயத்தை அனுஷ்டிக்கலாம் என்று அவன் ஆலோசிக்கும்பொழுது பசுபதியான பரமேச்வரனை சரணமடைந்தால்தான் ஸம்ஸார பந்தம் விலகும் என்ற தீர்மானம் ஏற்படுகிறது. அப்பொழுது 'यदि योन्याः प्रमुच्येहं तत्प्रपद्ये महेश्वरम्। अशुभक्षयकर्तारं फलमुक्तिप्रदायकम्॥' "இந்த கர்பத்திலிருந்து விடுபட்டு வெளியே வருவேனேயாகில் அப்பொழுது கட்டாயம் எல்லாத் துன்பங்களையும் போக்கி சிறந்த பலனான முக்தியை அளிக்கும் மஹேச்வரனை சரணமடைவேன்" என்று ஸங்கல்பம் செய்கிறான்.] (5)

वक्त्रं धन्याः संसृतिवार्धेरतिमात्रा-
द्भीताः सन्तः पूर्णशशाङ्कद्युति यस्य ।
सेवन्तेऽध्यासीनमनन्तं वटमूलं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ ६ ॥

வக்த்ரம் தன்யா: ஸம்ஸ்ருதிவார்த்தேரதிமாத்ராத்
பீதா: ஸந்த: பூர்ண சசாங்கத்யுதி யஸ்ய 1
ஸேவந்தேऽத்யாஸீநமநந்தம் வடமூலம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி 11

**संसृतिवार्धेः**–பிறவிக்கடலிலிருந்து, **अतिमात्रात्**–மிகவும் **भीताः**–பயந்த, **धन्याः**–பாக்யசாலிகளான, **सन्तः**–ஸாதுக்கள், **यस्य**–எவருடைய, **पूर्णशशाङ्कद्युति**–பூர்ண சந்திரன்போன்ற காந்தியுள்ள, **वक्त्रं**–முகத்தை, **सेवन्ते**–ஸேவிக்கிறார்களோ, **तं**–அந்த, **अनन्तं**–நாசமற்றவரும், **वटमूलं अध्यासीनं**–ஆலமரத்தடியில் அமர்ந்திருப்பவரும், **प्रत्यञ्चं**–ஆத்மஸ்வரூபியுமான, **दक्षिणवक्त्रं**–தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**–தியானிக்கிறேன்.

ஸம்ஸாரம் என்பது பெரிய ஆழ்கடல். இதில் அமிழ்ந்தவர்கள் ஈசனது அருளில்லாமல் கரையேற முடியாது. ஆகையால் இந்த பிறவிக்கடலைக் கண்டு மிகுந்த பயங்கொண்ட சிலர் பூர்ண சந்திரன்போல் ஸகல தாபங்களையும் போக்கும் பகவானின் வதனாரவிந்தத்தை ஸேவிக்கிறார்கள். இவர்களே பாக்யசாலிகள். இவருக்கு நாசமே கிடையாது. ஆலமரத்தடியில் அமர்ந்திருக்கும் இந்த ஆத்மஸ்வரூபியான தக்ஷிணாமூர்த்தியை தியானிக்கிறேன். பூர்ணசந்திரனைக் கண்டால் கடல் மேலே எழும்பும். பகவானின் முகசந்திரனைக்கண்டால் பிறவிக்கடல் வற்றிவிடும். (6)

**तेजस्स्तोमैरङ्गदसंघट्टितभास्व-**
**न्माणिक्योत्थैर्भासितविश्वो रुचिरैर्यः ।**
**तेजोमूर्तिं खानिलतेजःप्रमुखाब्धिं**
**तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ ७ ॥**

தேஜஸ்ஸ்தோமைரங்கத ஸங்கட்டித பாஸ்வன்
மாணிக்யோத்தைர் பாஸிதவிச்வோ ருசிரைர் ய: 1
தேஜோமூர்த்திம் கானிலதேஜ: ப்ரமுகாப்திம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி 11

**यः**–எவர், **अङ्गदसंघट्टित**–தோள்வளைகளில் பதிப்பிக்கப் பட்ட, **भास्वन्माणिक्योत्थैः**–பிரகாசிக்கிற மாணிக்க ரத்னங்

களிலிருந்து கிளம்பும், रुचिरैः–அழகிய, तेजस्स्तोमैः–ஒளிக் கூட்டங்களால், भासितविश्वः–பிரகாசிக்கப்பட்ட பிரபஞ்சத்தை உடையவராக இருக்கிறாரோ, तेजोमूर्ति–ஒளியையே உருவமாகக்கொண்டவரும், खानिलतेजःप्रमुखाब्धि–ஆகாசம், வாயு, தேஜஸ் முதலானவைகளுக்கு ஆதாரமாயுமிருக்கும், तं–அந்த, प्रत्यञ्चं–ஆத்மஸ்வரூபியான, दक्षिणवक्त्रं–தக்ஷிணாமூர்த்தியை, कलयामि–தியானிக்கிறேன்.

பகவானுடைய ஸ்வரூபம் தேஜோமயம். அதிலும் அவருடைய தோள்வளைகளில் நன்கு பதிக்கப்பட்ட ஒளியுள்ள மாணிக்க ரத்னங்களிலிருந்து கிளம்புகின்ற அழகிய ஒளிக் கூட்டங்களால் உலகம் முழுவதும் பிரகாசிக்கப்படுகிறது. ஆகாசம், வாயு, தேஜஸ் முதலியவைகளுக்குக் கடலாக இருக்கிறார் ஈசுவரன். தண்ணீரைத் தாங்கிக்கொண்டு அதற்கு ஆதாரமாக ஸமுத்ரம் இருப்பதுபோல் ஆகாசம் முதலான பூதங்கள், பௌதிகமான பிரபஞ்சம் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு ஆதாரமாக இருக்கும் ஆத்மரூபியான தக்ஷிணா மூர்த்தியை வணங்குகிறேன். (7)

दध्याज्यादिद्रव्यककर्माण्यखिलानि
त्यक्त्वा काङ्क्षां कर्मफलेष्वत्र करोति ।
यज्जिज्ञासारूपफलार्थी क्षितिदेव-
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ ८ ॥

தத்யாஜ்யாதி த்ரவ்யக கர்மாண்யகிலானி
த்யக்த்வா காங்க்ஷாம் கர்மபலேஷ்வத்ர கரோதி ।
யஜ்ஜிஞாஸாரூபபலார்த்தீ க்ஷிதிதேவஸ்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

यज्जिज्ञासारूपफलार्थी–எவரை அறியவேண்டுமென்ற தீவ்ரமான விருப்பத்தையே பலனாக அடைய ஆசைப்படும் क्षितिदेवः–பிராஹ்மணர், अत्र–இவ்வுலகில், कर्मफलेषु–அந்தந்த கர்மாக்களுக்கு ஏற்பட்ட பலன்களில், काङ्क्षां–ஆசையை, त्यक्त्वा–விட்டு, अखिलानि–ஸமஸ்தமான, दध्याज्यादिद्रव्यक–தயிர், நெய், இது முதலியவற்றை திரவ்யமாகக்கொண்ட,

**कर्माणि**–கர்மாக்களை, **करोति**-செய்கிறாரோ, **तं**-அந்த, **प्रत्यञ्चं**-ப்ரத்யகாத்மஸ்வரூபியான, **दक्षिणवक्त्रं**-தக்ஷிணாமூர்த்தியை **कलयामि**–தியானிக்கிறேன்.

உலகில் சிறந்த பிராஹ்மணர்கள் தயிர், நெய் முதலான ஹவிஸ்ஸுகளைக்கொண்டு வைதிகமான பலவித கர்மாக்களைச் சிரத்தையுடன் அனுஷ்டித்துவருகின்றனர். இந்த கர்மாக்களுக்கு வேதத்தில் பலன் கூறப்பட்டுள்ளபோதிலும் அந்தப் பலனை இவர்கள் விரும்புவதில்லை. ஆனாலும் சித்தசுத்தி, வைராக்யம் முதலியவைகள்மூலம் ஈசுவர ஸ்வரூபத்தை நன்கு அறிவதில் தீவிர விருப்பம் ஏற்படுவதற்காகவே கர்மாக்களை அனுஷ்டிக்கின்றனர். அந்த ஆத்மஸ்வரூபியாயும் ஈசுவரனுயுமுள்ள தக்ஷிணாமூர்த்தியை தியானிக்கிறேன். (8)

**क्षिप्रं लोके यं भजमानः पृथुपुण्यः**
**प्रध्वस्ताधिः प्रोज्झितसंसृत्यखिलार्तिः ।**
**प्रत्यग्भूतं ब्रह्म परं सन्रमते च**
**तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ ९ ॥**

க்ஷிப்ரம் லோகே யம் பஜமாநः ப்ருதுபுண்யः
ப்ரத்வஸ்தாதிः ப்ரோஜ்ஜித ஸம்ஸ்ருத்யகிலார்த்திः ।
ப்ரத்யக்பூதம் ப்ரஹ்ம பரம் ஸன் ரமதே ச
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**लोके**-உலகில், **यं**–எவரை, **भजमानः**–பஜிக்கின்ற, **पृथुपुण्यः**–மிகுந்த புண்யம் செய்தவன், **क्षिप्रं**-விரைவில், **प्रध्वस्ताधिः**–தோஷங்கள் அழிந்து, **प्रोज्झितसंसृत्यखिलार्तिः**–ஸம்ஸாரத்தால் உண்டாகும் எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபட்டவனுக **प्रत्यग्भूतं**–உள்ளே விளங்கும், **परं ब्रह्म सन्**–பரப்ரஹ்மமாக இருந்துகொண்டு, **रमते**–ஆனந்தம் அடைகிறானே,**तं**–அந்த, **प्रत्यञ्चं**-ப்ரத்யகாத்ம ஸ்வரூபியான, **दक्षिणवक्त्रं**–தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**–தியானிக்கிறேன்.

மிகுந்த புண்யம் செய்தவன்தான் தக்ஷிணாமூர்த்தியை பஜிப்பதில் ஈடுபடுவான். அவனுக்கு விரைவில் மனதிலுள்ள தோஷங்களெல்லாம் விலகி பிறவித் துன்பங்களெல்லாம் ஒழிந்து

ஜீவாத்மாபின்னமான பரப்ரஹ்மமாகவேயாகி எப்பொழுதும் ஆனந்தானுபவத்துடன் விளங்குகிருன். அந்த ப்ரத்யகாத்ம ஸ்வரூபியான தக்ஷிணமூர்த்தியை தியானிக்கிறேன். (9)

णानेत्येवं यन्मनुमध्यस्थितवर्णा-
न्भक्ताः काले वर्णगृहीत्यै प्रजपन्तः ।
मोदन्ते संप्राप्तसमस्तश्रुतितन्त्रा-
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १० ॥

ணேத்யேவம் யன்மனு மத்ய ஸ்தித வர்ணன்
பக்தா: காலே வர்ண க்ருஹீத்யை ப்ரஜபந்த: ।
மோதந்தே ஸம்ப்ராப்த ஸமஸ்த ச்ருதி தந்த்ராஸ்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

भक्ताः–பக்தர்கள், वर्णगृहीत्यै–சப்த ஞானம் ஏற்படுவதற்காக, काले–அந்தந்த காலத்தில், णानेत्येवं–ண, ந இது முதலான, यन्मनुमध्यस्थितवर्णान्–எவருடைய மந்திரத்தின் நடுவிலுள்ள வர்ணங்களை, प्रजपन्तः-நன்கு ஜபித்துக் கொண்டு, संप्राप्तसमस्तश्रुतितन्त्राः–எல்லா வேதங்களையும் சாஸ்திரங்களையும் அறிந்து, मोदन्ते – ஆனந்தமடைகிறார்களோ, तं – அந்த, प्रत्यञ्चं – ப்ரத்யகாத்மஸ்வரூபியான, दक्षिणवक्त्रं–தக்ஷிணமூர்த்தியை, कलयामि–தியானிக்கிறேன்.

தக்ஷிணமூர்த்தி மஹாமந்திரத்தில் 'ண' 'ந' இது முதலான அக்ஷரங்கள் நடுவில் இருக்கின்றன. பக்தர்கள் இந்த வர்ணங்களுடன் கூடிய மந்திரத்தை அந்தந்தக் காலத்தில் ஜபம் செய்கிருர்கள். இம்மந்திர ப்ரபாவத்தால் சப்தஞானம் ஏற்பட்டு எல்லா வேதங்களையும் சாஸ்திரங்களையும் நன்கு தெரிந்து கொண்டு ஸந்தோஷமடைகின்றனர். (10)

मूर्तिश्छायानिर्जितमन्दाकिनिकुन्द-
प्रालेयाम्भोराशिसुधाभूतिसुरेभा ।
यस्याभ्राभाहासविधादक्षशिरोधिं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ ११ ॥

மூர்த்திச்சாயா நிர்ஜித மந்தாகினி குந்த
ப்ராலேயாம்போராஸி ஸுதா பூதி ஸுரேபா ।
யஸ்யாப்ராபாஹாஸவிதள தக்ஷஸிரோதிம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**यस्य**-எவருடைய, **मूर्तिः**-வடிவம், **छाया**-காந்தியால், **निर्जित**-ஜயிக்கப்பட்ட, **मन्दाकिनी**-கங்கை, **कुन्द**-குந்தமலர், **प्रालेयाम्भोराशि**- பனிநீர் ஸமுத்ரம், **सुधा**-அமிருதம், **भूति**-விபூதி, **सुरेभा**-தேவயானையான ஐராவதம் இவைகளை உடையதோ, **अभ्राभाहासविधा**-நீருண்ட மேகத்தின் காந்தியைப்பழிக்கும் காரியத்தில், **दक्ष**-திறமையுள்ள, **शिरोधिं**-கழுத்தை உடைய, **तं**-அந்த, **प्रत्यञ्चं**-ப்ரத்யகாத்மாவான, **दक्षिणवक्त्रं**-தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**- தியானிக்கிறேன்.

பகவானுடைய சரீரம் கங்கை, குந்தபுஷ்பம், பனி ஸமுத்ரம், அமிருதம். விபூதி, ஐராவதயானை இவைகளைக்காட்டிலும் வெளுப்பானது கழுத்துமட்டும் நீருண்டமேகம் போல் கருப்பானது. அப்பேற்பட்ட தக்ஷிணாமூர்த்தியை தியானிக்கிறேன்,

तप्तस्वर्णच्छायजटाजूटकटाह-
प्रोद्यद्वीचीवल्लिविराजत्सुरसिन्धुम् ।
नित्यं सूक्ष्मं नित्यनिरस्ताखिलदोषं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १२ ॥

தப்தஸ்வர்ணச்சாய ஜடாஜூட கடாஹ
ப்ரோத்யத் வீசீவல்லி விராஜத் ஸுரஸிந்தும் ।
நித்யம் ஸூக்ஷ்மம் நித்யநிரஸ்தாகிலதோஷம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**तप्तस्वर्णच्छाय**-நெருப்பில் உருக்கிய ஸுவர்ணம்போன்ற காந்தியுள்ள, **जटाजूटकटाह**-பெரிய அகன்ற பாத்திரம் போன்ற ஜடாபந்தத்தில், **प्रोद्यत्**-கிளம்புகிற, **वीचीवल्लि**-கொடிபோன்ற அலைகளுடன், **विराजत्**-விளங்கும், **सुरसिन्धुं** தேவநதியான கங்கையை உடையவரும், **नित्यं**-அழிவற்ற

வரும், **सूक्ष्मं**—ஸூக்ஷ்மமானவரும் (அறியமுடியாதவரும்), **नित्यनिरस्ताखिलदोषं**—எப்பொழுதும் எல்லா தோஷங்களும் விலகியவரும், **प्रत्यञ्चं**—ப்ரத்யகாத்மஸ்வரூபியுமான, **तं**—அந்த, **दक्षिणवक्त्रं**—தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**—தியானம் செய்கிறேன்.

*அக்னியில் உருக்கிய ஸுவர்ணம் போன்ற காந்தியுள்ள பகவானின் ஜடாபந்தத்தில் அலைகளுடன் கூடிய கங்கை தங்கி இருப்பது அகன்ற பெரிய பாத்திரத்தில் தண்ணீரை நிரப்பி வைத்திருப்பது போல் காக்ஷியளிக்கிறது. இந்த பகவானின் ஸ்வரூபத்திற்கு உத்பத்தி நாசம் இரண்டும் கிடையாது. நித்யமான வஸ்து. இது ஸூக்ஷ்மம். சுலபமாய் இந்திரியங்களால் இவரை அறியமுடியாது. தோஷங்களெல்லாம் எப்பொழுதுமே இவரிடம் கிடையாது. அவ்விதமான ப்ரத்யகாத்மஸ்வரூபியான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை தியானிக்கிறேன்.* (12)

**येन ज्ञातेनैव समस्तं विदितं स्या-**
**द्यस्मादन्यद्वस्तु जगत्यां शशशृङ्गम् ।**
**यं प्राप्तानां नास्ति परं प्राप्यमनादिं**
**तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १३ ॥**

*யேந ஞாதேநைவ ஸமஸ்தம் விதிதம் ஸ்யாத்*
*யஸ்மாதன்யத் வஸ்து ஜகத்யாம் ஶஶச்ருங்கம் ।*
*யம் ப்ராப்தாநாம் நாஸ்தி பரம் ப்ராப்யமநாதிம்*
*தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥*

**येन**—எவர், **ज्ञातेनैव**—அறியப்பட்டதாலேயே, **समस्तं**—எல்லாம், **विदितं**—அறியப்பட்டதாக, **स्यात्**-ஆகுமோ, **जगत्यां**-உலகில், **यस्मात्**—எவரைக்காட்டிலும், **अन्यत्**—வேருன, **वस्तु**—பொருள், **शशशृङ्गं**-முயல் கொம்புபோன்றதோ, **यं**—எவரை, **प्राप्तानां**—அடைந்தவர்களுக்கு, **परं**—மேலான, **प्राप्यं**—அடைய வேண்டியது, **नास्ति**—இல்லையோ, **अनादिं**—பிறப்பற்ற, **तं**—அந்த, **प्रत्यञ्चं**-ப்ரத்யகாத்மஸ்வரூபரான, **दक्षिणवक्त्रं**-தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**—தியானம் செய்கிறேன்.

ஈசுவர தத்வத்தை அறிந்துகொண்டதாலேயே எல்லாம் அறிந்ததாக ஆகிவிடும். மண் காரணப்பொருள். மண்ணிலிருந்து உண்டாகும் குடம், சட்டி, பானை முதலியவை காரியம் காரணமான மண்ணைத்தெரிந்துகொண்டால் அதன் காரியங்கள் எல்லாம் தெரிந்ததாக ஆகிவிடுகிறது. ஏனெனில் குடம், பானை முதலியவற்றிலும் இருப்பது மண்தான். மண்ணைத்தவிற வேறு ஒன்றும் குடத்தில் இல்லை. உருவமும் பெயரும்தான் மாறியிருக்கிறதே தவிற இருப்பது அதே மண்தான். இதுபோல் இந்த பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் காரணம் ஈசுவரன். நாமரூபங்கள் வேறாகத் தோன்றினாலும் ப்ரபஞ்சத்தில் இருப்பது ஈசுவர ஸ்வரூபம்தான். மண்ணைத் தெரிந்துகொண்டால் குடம் முதலியவற்றின் ஸ்வரூபம் தெரிவதுபோல் காரணமான ஈசுவரனைத் தெரிந்துகொண்டு விட்டால் கார்யமான பிரபஞ்சத்தின் தத்வம் தெரிந்துவிடும். ஈசுவரனேதான் பிரபஞ்சமாக காக்ஷியளிக்கிறார். முயல் கொம்பு போலத்தான். ஈசுவரனைக்காட்டிலும் வேறான பிரபஞ்சமும் தத்வஞானத்தால் ஒருவன் இந்த ஈசுவர ஸ்வரூபத்தை அடைந்து விட்டால் அதன்பின் அவனுக்கு அடையவேண்டிய மேலான பதம் வேறொன்றுமில்லை. (13)

मत्तो मारो यस्य ललाटाक्षिभवाग्नि-
स्फूर्जत्कीलप्रोषितभस्मीकृतदेहः ।
तद्भस्मासीद्यस्य सुजातः पटवास-
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ।। १४ ।।

மத்தோ மாரோ யஸ்ய லலாடாக்ஷிபவாக்னி-
ஸ்பூர்ஜத்கீல ப்ரோஷித பஸ்மீக்ருததேஹ: ।
தத் பஸ்மாஸீத் யஸ்ய ஸுஜாத: படவாஸஸ்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**मत्तः**—கர்வம்கொண்ட, **मारः**—காமன், **यस्य**—எவருடைய, **ललाटाक्षिभवाग्नि**—நெற்றிக்கண்ணிலிருந்து உண்டான நெருப்பிலிருந்து, **स्फूर्जत्**—வெடித்துக்கிளம்பிய, **कील**—பொரியால், **प्लोषित**—எரிக்கப்பட்டு, **भस्मीकृतदेहः**—சாம்பலாக்கப்பட்ட சரீரமுள்ளவனாக ஆய்விட்டானோ, **तद्भस**—அந்த சாம்பல், **यस्य**—எவருக்கு, **सुजातः**—சிறந்த, **पटवासः**—வாசனைப்பொடியாக,

आसीत् -ஆனதோ, तं-அந்த, प्रत्यञ्चं-ப்ரத்யகாத்மாவான, दक्षिणवक्त्रं - தக்ஷிணாமூர்த்தியை, कलयामि-தியானிக்கிறேன்.

மன்மதன் மிக கர்வம்கொண்டு பரமசிவனை மயங்கச் செய்ய மலரம்பைத் தொடுத்தான். அவருடைய நெற்றிக்கண்ணிலிருந்து கிளம்பிய நெருப்புப் பொரியால் எரிக்கப்பட்டு சாம்பலாகி விட்டது அவனுடைய சரீரம். அந்த சாம்பலே பகவானுக்கு உடம்பில் பூசிக்கொள்ளும் சிறந்த வாசனைப் பொடியாக ஆகி விட்டது. இவ்வாறு காமத்தை ஜயித்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை தியானிக்கிறேன். (14)

ह्यम्भोराशौ संसृतिरूपे लुठतां त-
त्पारं गन्तुं यत्पदभक्तिर्दृढनौका ।
सर्वाराध्यं सर्वगमानन्दपयोधिं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १५ ॥

ஹ்யம்போராசௌ ஸம்ஸ்ருதிரூபே லுடதாம் தத்
பாரம் கந்தும் யத்பதபக்திர் த்ருடநௌகா ।
ஸர்வாராத்யம் ஸர்வகமாநந்த பயோதிம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

संसृतिरूपे-ஸம்ஸாரரூபமான, अम्भोराशौ-கடலில், लुठतां-சுழலுகிறவர்களுக்கு, तत्पारं-அதன் அக்கரையை, गन्तुं-அடைவதற்கு, यत्पदभक्तिः-எவருடைய சரணத்தில் செலுத்தும் பக்தியானது, दृढनौका-உறுதியான ஓடமாக ஆகிறதோ, सर्वाराध्यं-எல்லோராலும் பூஜிக்கத்தக்கவரும், सर्वगं-எங்கும் இருப்பவரும், आनन्दपयोधिं-ஆனந்த ஸமுத்திரமாக இருப்பவரும், प्रत्यञ्चं-ப்ரத்யகாத்மாவாயுமுள்ள, तं-அந்த, दक्षिणवक्त्रं-தக்ஷிணாமூர்த்தியை, कलयामि-தியானிக்கிறேன்.

ஸம்ஸாரமாகிற பெரிய கடலில் விழுந்து முழ்கித் தத்தளிப்பவர்கள் அதன் கரையை அடைவதற்கு பகவத் பாதாரவிந்த பக்திதான் திடமான ஓடமாக ஆகிறது. கடலில் விழுந்தவன் ஓடம்

கிடைத்தால் அதில் ஏறி அக்கரை சேர்வான். இதுபோல் பிறவி, மரணம் என்ற கடலில் அகப்பட்டுத் தவிப்பவன் பகவத் பாதார விந்தத்தில் பக்தியைச் செலுத்தினுல் பக்தியின் பிரபாவத்தால் பிறவாத நிலையை அடைவான். அவர் எல்லோராலும் போற்றத் தகுந்தவர். ஆகையால் யாரும் அவரை பஜிக்கலாம். அவர் எங்கும் இருப்பவர். ஆதலால் நாம் இருக்குமிடத்தில் இருந்து கொண்டே பக்தி பண்ணலாம். அவர் ஆனந்த ஸமுத்ரம் அதை பக்தர்களுக்கு அள்ளி அள்ளி எவ்வளவு கொடுத்தாலும் கொஞ்சமும் குறையாது. அப்பேற்பட்ட ப்ரத்யகாத்ம ஸ்வரூபியான ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியை தியானிக்கிறேன். (15)

मेधावी स्यादिन्दुवतंसं धृतवीणं
कर्पूराभं पुस्तकहस्तं कमलाक्षम् ।
चित्ते ध्यायन्यस्य वपुर्द्राङ्निमिषार्धं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १६ ॥

மேதாவீ ஸ்யாதிந்துவதம்ஸம் த்ருத வீணம்
கர்பூராபம் புஸ்தகஹஸ்தம் கமலாக்ஷம் ।
சித்தே த்யாயன் யஸ்ய வபுர் த்ராங் நிமிஷார்த்தம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**इन्दुवतंसं**–சந்திரனை சிரோபூஷணமாக அணிந்ததும், **धृतवीणं**–வீணையை தரித்திருப்பதும், **कर्पूराभं**–பச்சைக்கர்ப்பூரம்போன்ற காந்தியுள்ளதும், **पुस्तकहस्तं**–கையில் புஸ்தகத்தை வைத்திருப்பதும், **कमलाक्षं**–தாமரைபோன்ற நேத்ரமுடையதுமான, **यस्य**–எவருடைய, **वपुः**–சரீரத்தை, **निमिषार्धं**–அரைநிமிஷம், **चित्ते**–மனதில், **ध्यायन्**–த்யானம் செய்கிறவன், **द्राक्**–சீக்கிரம், **मेधावी**–சிறந்த மேதையுள்ளவனுக, **स्यात्**–ஆவானே, **तं**–அந்த, **प्रत्यञ्चं**–ப்ரத்யகாத்மாவான **दक्षिणवक्त्रं**–தக்ஷிணமூர்த்தியை, **कलयामि**–தியானிக்கிறேன்.

சிரஸ்ஸில் சந்திரகலை, கையில் வீணை, புஸ்தகம், பச்சைக் கற்பூரம்போன்ற நிறம், தாமரைபோன்ற கண்கள் இவ்விதமான பகவானின் ஸ்வரூபத்தை அரைநிமிஷமாவது மனதில் தியானம் செய்கிறவன் உடனே மேதாவியாக ஆவான். (16)

धाम्नां धाम प्रौढरुचीनां परमं य-
त्सूर्यादीनां यस्य न हेतुर्जगदादेः ।
एतावान्यो यस्य न सर्वेश्वरमीड्यं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १७ ॥

*தாம்னாம் தாம ப்ரௌடருசீனாம் பரமம் யத்*
*ஸூர்யாதீனாம் யஸ்ய ந ஹேதுர் ஜகதாதே: ।*
*ஏதாவான் யோ யஸ்ய ந ஸர்வேஶ்வரமீட்யம்*
*தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥*

**प्रौढरुचीनां**-மிகுந்த ஒளியுள்ள, **सूर्यादीनां**-ஸூரியன் முதலியவைகளின், **धाम्नां**-பிரகாசங்களுக்கும், **परमं**-மேலான **धाम**-ஒளியாக, **यत्**-எது உள்ளதோ, **जगदादेः**-பிரபஞ்சத்திற்குக் காரணமான, **यस्य**-எதற்கு, **हेतुः**-காரணம், **न**-இல்லையோ, **यः**-எது, **एतावान्**-இவ்வளவு பிரபஞ்சமாகவும் தோன்றுகிறதோ (உண்மையில்), **यस्य**-எதற்கு, **न**-(ஒன்றும் இல்லையோ, **सर्वेश्वरं**-எல்லாவற்றிற்கும் ஈசுவரனையும், **ईड्यं**-போற்றத்தகுந்தவராயும், **प्रत्यञ्चं**-பிரத்யகாத்மாவாயுமுள்ள, **तं**-அந்த, **दक्षिणवक्त्रं**-தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**-தியானம் செய்கிறேன்.

*உலகில் அதிகமான ஒளியுள்ள ஸூரியன் முதலியவைகளில் உள்ள ஒளியைவிட மேலான பிரகாச ஸ்வரூபமாக ஈசுவரன் விளங்குகிறார். எல்லாவற்றிற்கும் அவரே காரணம். அவருக்குக் காரணம் வேறொன்றுமில்லை. அவரே எல்லாவற்றையும் அடக்கி ஆள்கிறார். எல்லோரும் அவரையே போற்றுகிறார்கள். நாம் காணும் இந்த பிரபஞ்சம் முழுவதும் அவரேதான். விசாரித்துப் பார்த்தால் இந்த பிரபஞ்சம் வாஸ்தவமில்லை என்பது புலப்படும். ஆதலால் அந்த ஈசுவரனைக்காட்டிலும் வேறாக ஒன்றுமில்லை. அவரை தியானிக்கிறேன்.* (17)

प्रत्याहारप्राणनिरोधादिसमर्थै-
र्भक्तैर्दान्तैः संयतचित्तैर्यतमानैः ।

स्वात्मत्वेन ज्ञायत एव त्वरया य-
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १८ ॥

*ப்ரத்யாஹார ப்ராணநிரோதாதி ஸமர்த்தைः*
*பக்தைர் தாந்தை: ஸம்யதசித்தைர் யதமாநை: ।*
*ஸ்வாத்மத்வேன ஞாயத ஏவ த்வரயா யஸ்*
*தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥*

**प्रत्याहार**–விஷயங்களில்போகும் புலன்களை அவற்றிலிருந்து திருப்புதல், **प्राणनिरोधादि**–பிராணனை அடக்குதல் இதுமுதலியவற்றில், **समर्थैः**–திறமையுள்ளவர்களாலும், **भक्तैः**–பக்தர்களாலும், **दान्तैः**–அடக்கமுள்ளவர்களாலும், **संयतचित्तैः**–மனதை அடக்கியவர்களாலும், **यतमानैः**–முயற்சிக்கிறவர்களாலும், **त्वरया**-வேகமாக, **यः**–எவர், **स्वात्मत्वेनैव**-தனது ஆத்மஸ்வரூபமாகவே, **ज्ञायते**–அறியப்படுகிறாரோ, **तं**–அந்த, **प्रत्यञ्चं**–ப்ரத்யகாத்மாவான, **दक्षिणवक्त्रं**–தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**–தியானம் செய்கிறேன்.

யோகாப்யாஸ முறையில் சிலர் மூச்சையடக்கி, விஷயங்களை நோக்கிச்செல்லும் புலன்களைத் தடுத்துத் திருப்பி உள்ளேயே நிறுத்துகிறார்கள் சிலர் வேறு உபாயங்களைக் கைக்கொண்டு மனதையும் இந்திரியங்களையும் அடக்குகிறார்கள். மேலும் பலவித முயற்சிசெய்கிறார்கள். சிலர் ஈசுவரனையே பஜிக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் கடைசியில் ஈசுவரனையே தனது ஆத்மாவாக அறிந்துவிடுகிறார்கள். இந்த ஞானம் ஏற்படத்தான் இத்தனை உபாயங்களும் ஏற்பட்டுள்ளன. இந்த ஈசுவரனை தக்ஷிணாமூர்த்தியை தியானிக்கிறேன். (18)

ज्ञांशीभूतान्प्राणिन एतान्फलदाता
चित्तान्तःस्थः प्रेरयति स्वे सकलेऽपि ।
कृत्ये देवः प्राक्तनकर्मानुसरः सं-
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ १९ ॥

*ஞாம்ஸீபூதான் ப்ராணின ஏதான் பலதாதா*
*சித்தாந்தஸ்த்த: ப்ரேரயதி ஸ்வே ஸகலேऽபி ।*

க்ருத்யே தேவ: ப்ராக்தன கர்மானுஸர: ஸன்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ||

**प्राक्तनकर्मानुसरः सन्**-முன்னால் செய்த கர்மாவை அனுஸரித்துக்கொண்டு, **फलदाता**-பலனைக்கொடுக்கிற, **देवः**-ஈசுவரன், **चित्तान्तःस्थः**-மனதிற்குள் இருந்துகொண்டு, **शांशीभूतान्**-சைதன்யஸ்வரூபத்தின் அம்சமாக இருக்கிற, **एतान् प्राणिनः**-இந்த பிராணிகளை, **स्वे**-தன்னுடையதான, **सकले कृत्येपि**-எல்லாக் காரியத்திலும், **प्रेरयति**-ஏவுகிறார், **तं**-அந்த, **प्रत्यञ्चं**-ப்ரத்யகாத்மாவான, **दक्षिणवक्त्रं**-தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**-தியானிக்கிறேன்.

ஈசுவரன் அகண்ட சைதன்ய ஸ்வரூபி. அந்த சைதன்யத்தின் அம்சம்தான் எல்லா பிராணிகளிடமும் கொஞ்சம் கொஞ்சம் விளங்குகிறது. அதனால்தான் பிராணிகள் சேதனர்கள். இவர்களின் மனதில் ஸாக்ஷியாக பகவான் வஸிக்கிறார். தன் தன் காரியத்தைச் செய்யும்படி பிராணிகளை ஏவுகிறவர் இவரே. பிராணிகள் முன்னால் செய்த நல்வினை தீவினைகளுக்குத் தக்கபடி ஸுகத்தையும் துக்கத்தையும் கொடுக்கிறவரும் இவரே. பிராணிகள் முன்னால் செய்துள்ள புண்ய பாபங்களின் வாஸனையை ஒட்டி புண்யத்தையோ பாபத்தையோ செய்யும்படி தூண்டுகிறார் என்றும் அர்த்தம் கூறலாம். ஈசுவரன் ப்ரேரகராயிருந்தாலும் ஸூர்யன்போல் ஸாக்ஷியாக மட்டும் இருப்பதால் பிராணிகள் செய்யும் காரியங்களின் பலன் அவரிடம் ஒட்டுவதில்லை. மனதில் சைதன்ய ஸ்வரூபியாக ஈசுவரன் விளங்குவதால்தான் ஜடமான சரீரம் தன் காரியத்தைச் செய்ய முடிகிறது என்பது இதன் கருத்து. (19)

**प्रज्ञामात्रं प्रापितसंविन्निजभक्तं**
**प्राणाक्षादेः प्रेरयितारं प्रणवार्थम् ।**
**प्राहुः प्राज्ञा यं विदितानुश्रवतत्त्वा-**
**स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ २० ॥**

ப்ரஜ்ஞாமாத்ரம் ப்ராபித ஸம்விந்நிஜபக்தம்
ப்ராணக்ஷாதே: ப்ரேரயிதாரம் ப்ரணவார்த்தம் |
ப்ராஹு: ப்ராஜ்ஞா யம் விதிதானுச்ரவதத்வாஸ்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ||

**विदितानुश्रवतत्वाः**-ப்ரஹ்ம தத்வத்தை அறிந்த, **प्राज्ञाः**-அறிவிற்சிறந்தவர்கள், **य**-எவரை, **प्रज्ञामात्रं**-ஞானத்தையே ஸ்வரூபமாகக்கொண்டவராகவும், **प्रापितसंविन्निजभक्तं**-தன் பக்தர்கள் ஞானத்தை அடையும்படி செய்பவராகவும், **प्राणाक्षादेः**-பிராணன், இந்திரியம், முதலியவற்றை, **प्रेरयितारं**-ஏவுகிறவராகவும், **प्रणवार्थं**-ப்ரணவப்பொருளாகவும், **प्राहुः**-கூறுகிறார்களோ, **तं**-அந்த, **प्रत्यञ्चं**-ப்ரத்யகாத்மாவான, **दक्षिणवक्त्रं**-தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**-தியானம் செய்கிறேன்.

*வேறு ஒன்றும் கலக்காத சுத்தசைதன்யமே ஈசுவரஸ்வரூபம். இவர் தம் பக்தர்களுக்கு ஞானத்தை அருளுகிறார். ஜடமான பிராணன் இந்திரியம் முதலானவற்றை இயங்கும்படி செய்கிறவர் இவரே. ஓங்காரத்தின் அர்த்தமும் இவர்தான் என்று ப்ரஹ்ம ஞானிகள் கூறுகிறார்கள். குருவின் உபதேசத்தைக் காதால் கேட்டு அதன்மூலம் உபநிஷத்தால் அறிந்துகொள்ளப்படுவதால் ஆனுச்ரவதத்வம் என்பது ப்ரஹ்மத்தைக் குறிக்கும்.* (20)

**यस्याज्ञानादेव नृणां संसृतिबन्धो**
**यस्य ज्ञानादेव विमोक्षो भवतीति ।**
**स्पष्टं ब्रूते वेदशिरो देशिकमाद्यं**
**तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ २१ ॥**

*யஸ்யாஞானதேவ ந்ருணம் ஸம்ஸ்ருதிபந்தோ*
*யஸ்ய ஞானதேவ விமோக்ஷோ பவதீதி ।*
*ஸ்பஷ்டம் ப்ரூதே வேதசிரோ தேசிகமாத்யம்*
*தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥*

**यस्य**-எவரை, **अज्ञानादेव**-அறியாததனாலேயே, **नृणां**-மனிதர்களுக்கு, **संसृतिबन्धः**-ஸம்ஸாரபந்தமும், **यस्य ज्ञानादेव**-எவரை அறிந்துகொள்வதனாலேயே, **विमोक्षः**-முக்தியும், **भवति**-ஏற்படுகிறது, **इति**-என்று, **वेदशिरः**-உபநிஷத்து, **स्पष्टं**-தெளிவாக, **ब्रूते**-சொல்கிறதோ, **तं**-அந்த, **आद्यं देशिकं**-ஆதிகுருவும், **प्रत्यञ्चं**-ப்ரத்யகாத்மாவுமான, **दक्षिणवक्त्रं**-தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**-தியானிக்கிறேன்.

ஈசுவர தத்வத்தை நன்கு அறிந்து கொள்ளாததால்தான் பிறவி, மரணம் என்ற ஸம்ஸாரபந்தத்தில் அகப்பட்டுத் தவிக்கிறார்கள். அவரை அறிந்துகொண்டுவிட்டால் எல்லா பந்தமும் விலகி பேரானந்தமடைவான். ஸம்ஸாரபந்தத்திற்கு அக்ஞானம் தான் மூலகாரணம். இது இல்லாவிட்டால் பந்தம் இருக்காது. இதுபோல முக்திக்கு ஞானம்தான் ஸாதனம். ஞானம் ஏற்படாதவரை முக்தியைப் பெறமுடியாது. இந்த விஷயம் உபநிஷத்துக்களில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. 'ज्ञात्वा देवं मुच्यते सर्वपाशैः' 'य एतद्विदुरमृतास्ते भवन्ति' 'तमेव विदित्वाऽतिमृत्युमेति नान्यः पन्था विद्यतेऽयनाय' (சுவேதா உப) (21)

छन्नेऽविद्यारूपपटेनैव च विश्वं
यत्राध्यस्तं जीवपरेशत्वमपीदम् ।
भानोर्भानुष्वम्बुवदस्ताखिलभेदं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ २२ ॥

சந்நேऽவித்யாரூப படேனைவ ச விச்வம்
யத்ராத்யஸ்தம் ஜீவபரேசத்வமபீதம் ।
பானோர் பானுஷ்வம்புவதஸ்தாகில பேதம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

यत्र–எந்த ஸ்வரூபம், अविद्यारूपपटेन–அவித்யை என்ற திரைத்துணியால், छन्ने एव–மறைக்கப்பட்ட பொழுது தான், इदं विश्वं च–இந்த பிரபஞ்சமும், जीवपरेशत्वमपि–ஜீவன் பரமாத்மா என்ற தன்மையும், भानोः–ஸூரியனுடைய, भानुषु–கிரணங்களில், अम्बुवत्–நீர்போல், अध्यस्तं–ஆரோபிதமாகத் தோன்றுகிறதோ, अस्ताखिलभेदं–எல்லா வேற்றுமைகளும் நீங்கிய, तं–அந்த, प्रत्यञ्चं–ப்ரத்யகாத்மஸ்வரூபியான, दक्षिणवक्त्रं–தக்ஷிணாமூர்த்தியை, कलयामि–தியானிக்கிறேன்.

உலகில் திரையைப் போட்டால் உள்ளே இருக்கும் பொருள் மறைந்து நம் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதுபோல் அவித்யை என்னும் திரையால் ப்ரஹ்மம் மறைக்கப்பட்டிருப்பதால் நமக்கு அது தெரிவதில்லை. இதுமட்டுமல்ல; மற்றொரு விசேஷமும் உண்டு. துணித் திரை, இருக்கும் வஸ்துவை மறைப்பதோடு

நின்றுவிடுகிறது. அவித்யை என்னும் திரை ப்ரஹ்மத்தை மறைப்பதோடு, இல்லாததான பிரபஞ்சத்தையும், ஜீவன், ஈசுவரன் என்ற வேற்றுமையையும் தோன்றச் செய்கிறது. உண்மையில் தண்ணீர் இல்லாமலிருந்தும் வெகுதூரத்திலிருந்து பார்க்கும்பொழுது ஸூர்ய கிரணத்தில் தண்ணீர் என்ற ப்ராந்தி ஏற்படுவதில்லையா! சமீபத்தில் போய்ப் பார்த்தால் 'தண்ணீர்' என்ற ப்ரமம் நீங்கிவிடுகிறது. இதுபோல ப்ரஹ்மத்தை அறிந்து அவித்யை நீங்கிவிட்டால் ப்ரபஞ்சத்தோற்றமும் நீங்கி விடும் ஆகவே பிரபஞ்சத் தோற்றத்திற்கு அவித்யைதான் காரணம். அவித்யை நீங்கினால் உடன் ப்ராந்தியும் நீங்கிவிடும்.

स्वापस्वप्नौ जाग्रदवस्थापि न यत्र
प्राणश्चेतः सर्वगतो यः सकलात्मा ।
कूटस्थो यः केवलसच्चित्सुखरूप-
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ २३ ॥

ஸ்வாபஸ்வப்நௌ ஜாக்ரதவஸ்த்தாபி ந யத்ர
ப்ராணச்சேத: ஸர்வகதோ ய: ஸகலாத்மா ।
கூடஸ்த்தோ ய: கேவலஸச்சித்ஸுகரூப:
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**यत्र**–எந்தஸ்வரூபத்தில், **स्वापस्वप्नौ**–ஸுஷுப்தி, கனவு **जाग्रदवस्थापि**-ஜாக்ரதவஸ்தையும், **प्राणः**–பிராணனும், **चेतः**–மனமும், **न**–இல்லையோ, **यः**–எவர், **सर्वगतः**–எங்கும் உள்ளவராகவும், **सकलात्मा**–எல்லாஸ்வரூபமாகவும் இருக்கிறாரோ, **यः**–எவர், **कूटस्थः**–விகாரமற்றவராகவும், **केवलसच्चित्सुखरूपः**–கலப்பில்லாத சுத்த ஸச்சிதானந்தரூபமாகவும் இருக்கிறாரோ **तं**–அந்த, **प्रत्यञ्चं**-ப்ரத்யகாத்மஸ்வரூபியான, **दक्षिणवक्त्रं**–தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**–த்யானம் செய்கிறேன்.

கண், காது முதலான இந்திரியங்களும் மனமும் வேலை செய்யும் நிலைக்கு 'ஜாக்ரத்' என்று பெயர். இந்திரியங்கள் அடங்கி மனம் மட்டும் வேலை செய்யும் நிலை ஸ்வப்னம் எனப்படும். இந்திரியம் மனம் எல்லாம் அடங்கி அவித்யைமட்டும் உள்ள நிலை ஸுஷுப்தி எனப்படும். எங்கும் உள்ளதும் எல்லாமாக இருப்

பதும் ஒருவித மாறுபாடும் அற்றதும் ஸச்சிதானந்த ஸ்வரூபியுமான ஆத்மா எப்பொழுதும் ஸ்வயம்ப்ரகாசமாக இருப்பதால் இம்மூன்று நிலைகளும் ஆத்மாவுக்குக் கிடையாது. மனம், ப்ராணன் முதலியனவும் ஆத்மாவுக்கு இல்லை. அப்பேற்பட்ட ஆத்மஸ்வரூபியான தக்ஷிணாமூர்த்தியை தியானிக்கிறேன். (23)

हा हेत्येवं विस्मयमीयुर्मुनिमुख्या
ज्ञाते यस्मिन्स्वात्मतयानात्मविमोहः ।
प्रत्यग्भूते ब्रह्मणि यातः कथमित्थं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥ २४ ॥

ஹா ஹேத்யேவம் விஸ்மயமீயுர் முனிமுக்யா:
ஞாதே யஸ்மின் ஸ்வாத்மதயாऽநாத்மவிமோஹ: ।
ப்ரத்யக்பூதே ப்ரஹ்மணி யாத: கதமித்தம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி ॥

**प्रत्यग्भूते**–உள்ளே விளங்கும், **यस्मिन् ब्रह्मणि**-எந்த ப்ரஹ்மம், **स्वात्मतया**–தனது ஆத்மஸ்வரூபமாக, **ज्ञाते**-அறியப்பட்டதும், **अनात्मविमोहः**–அநாத்ம ப்ரமம், **इत्थं**-இவ்வாறு, **कथं यातः**–எப்படி நீங்கிவிட்டது? **हा हा**–ஹா ஹா, **इत्येवं**-என்றிவ்வாறு, **मुनिमुख्याः**–முனிவர்களில் சிறந்தவர்கள், **विस्मयं ईयुः**–ஆச்சர்யத்தை அடைந்தனரோ, **तं**–அந்த, **प्रत्यञ्चं**–ப்ரத்யகாத்மாவான, **दक्षिणवक्त्रं**–தக்ஷிணாமூர்த்தியை, **कलयामि**–தியானிக்கிறேன்.

ஸத்குருவின் உபதேசத்தாலும் சிரவண மனன நிதித்யாஸனங்களாலும் 'நானே ப்ரஹ்மம்' என்ற ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்ட மாத்திரத்திலேயே அநாத்மப்ரமம் நீங்கப்பெற்ற ஞானிகள் முன்னிருந்த நிலையையும் இப்பொழுது ஏற்பட்டுள்ள நிலையையும் எண்ணிப்பார்த்து ஆச்சர்யப்படுகின்றனர். கயிற்றை பாம்பு என்று எண்ணி பயத்தால் பலவிதமாகத் துன்பப்பட்டவன் 'இது கயிறுதான்' என்று தெரிந்த பிறகு 'இந்தக் கயிறு என்னபாடு படுத்திவிட்டது' என்று ஆச்சர்யம் அடைவதுபோல் பிரபஞ்சத்தைப் பொய் என்று தெரிந்துகொண்ட ஞானிகளும்

"வாஸ்தவத்தில் இல்லாத இப்பிரபஞ்சம் அநாதிகாலமாக எத்தனையோ விதமாக துன்பப்படுத்திவிட்டு இப்பொழுது ஒரே க்ஷணத்தில் எங்கோ மறைந்துவிட்டதே" என்று ஆச்சர்யப்படுகின்றனர். (24)

यैषा रम्यैर्मत्तमयूराभिधवृत्तै-
रादौ क्लृप्ता यन्मनुवर्णैर्मुनिभङ्गी ।
तामेवैतां दक्षिणवक्त्रः कृपयासा-
वूरीकुर्याद्देशिकसम्राट् परमात्मा ॥ २५ ॥

*யைஷா ரம்யைர் மத்தமயூராபிதவ்ருத்தை-*
*ராதௌ க்லுப்தா யன்மனுவர்ணைர் முனிபங்கீ ।*
*தாமேவைதாம் தக்ஷிணவக்த்ர: க்ருபயாஸா-*
*வூரீகுர்யாத் தேஶிக ஸம்ராட் பரமாத்மா ॥*

**या एषा मुनिभङ्गी**–எந்த இந்த முனிபங்கியானது, **रम्यैः**–அழகிய, **मत्तमयूराभिधवृत्तैः**–மத்தமயூரம் என்ற வ்ருத்தங்களால், **आदौ**–முதலில், **यन्मनुवर्णैः**–எவருடைய மந்திர வர்ணங்களால், **क्लृप्ता**–ஆக்கப்பட்டதோ, **तामेव एतां**–அந்த இதையே, **देशिकसम्राट्**–குருசக்ரவர்த்தியும், **परमात्मा**–பரமாத்மாவுமான, **असौ**–அந்த, **दक्षिणवक्त्रः**–தக்ஷிணாமூர்த்தி **कृपया**–தயவுடன், **ऊरीकुर्यात्**–ஏற்றுக்கொள்ளட்டும்.

தக்ஷிணாமூர்த்தி மஹாமந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் வரிசையாக ஒவ்வொரு சுலோகத்தின் முதல் எழுத்தாகக் கொண்ட இந்த ஸ்தோத்ரம் மத்தமயூரம் என்ற விருத்தத்தில் அமைந்துள்ளது இதை ஆசார்ய ஸார்வபௌமரான பரமாத்மா தக்ஷிணாமூர்த்தி ஸ்வீகரித்துக்கொண்டு அருள்செய்யட்டும். (25)

**ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வர்ணமாலா ஸ்தோத்ரம் முற்றும்.**



॥ श्रीः ॥

# ॥ वेदसारशिवस्तोत्रम् ॥

# வேதஸார சிவ ஸ்தோத்ரம்

[வேதஸார சிவ ஸ்தோத்ரம் 11 சுலோகங்கள் கொண்டது. பரமசிவனுடைய மஹிமையை நன்கு எடுத்துக்காட்டும் பல நாமாக்களை இதில் காணலாம். சிவனுடைய ஸகுணஸ்வரூப வர்ணனம் இதில் சிறிதளவுதான். அவரை நிர்விசேஷமான பரப்ரஹ்மமாகக் காட்டி உபநிஷத்தில் கூறியுள்ள ரீதியில்தான் அதிகமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. **'तुरीयं, तमःपारं, द्वैतहीनं, शिवं, निराकारं, सदानन्दं, चिदानन्दमूर्तं'** இவைகள் ஔபநிஷதமான ப்ரஹ்மத்தைக் குறிக்கும் பதங்களல்லவா! மேலும் உபநிஷத்தில் போலவே 'பூமியல்ல' 'ஜலமல்ல' என்று நிஷேத முகமாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதனால்தான் 'வேதஸார சிவ ஸ்தோத்ரம்' என்ற பெயர் இதற்கு ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது.]

**पशूनां पतिं पापनाशं परेशं गजेन्द्रस्य कृत्तिं वसानं वरेण्यम् ।**
**जटाजूटमध्ये स्फुरद्गाङ्गवारिं महादेवमेकं स्मरामि स्मरारिम् ॥ १ ॥**

பசூநாம் பதிம் பாபநாசம் பரேசம்
கஜேந்த்ரஸ்ய க்ருத்திம் வஸாநம் வரேண்யம் ।
ஜடாஜூடமத்யே ஸ்புரத்காங்கவாரிம்
மஹாதேவமேகம் ஸ்மராமி ஸ்மராரிம் ॥

**पशूनां**–பசுக்களுக்கு (ஜீவர்களுக்கு), **पतिं**–தலைவரும், **पापनाशं**–பாபத்தை அழிப்பவரும், **परेशं**–மேலான ஈசுவரனும், **गजेन्द्रस्य**–சிறந்த யானையின், **कृत्तिं**–தோலை, **वसानं**–அணிந்திருப்பவரும், **वरेण्यं**–துதிக்கத்தக்கவரும், **जटाजूटमध्ये**–ஜடாபந்தத்தின் நடுவில், **स्फुरद्गाङ्गवारिं**–விளங்கும் கங்கா தீர்த்தத்தை உடையவரும், **स्मरारिं**–மன்மதனை எரித்தவருமான, **महादेवमेकं**–மஹாதேவன் ஒருவரை, **स्मरामि**–நினைக்கிறேன்,

ஜீவர்களுக்குத் தலைவர், பாபங்களை அழிப்பவர், எல்லோருக்கும் மேலான ஈசுவரன் யானைத்தோலை இடுப்பில் அணிந்திருப்பவர், போற்றத்தக்கவர். இவருடைய ஜடாபந்தத்தின் நடுவில் கங்காதீர்த்தம் விளங்குகிறது. காமனை எரித்தவர்- இவ்விதமான மஹாதேவர் ஒருவரையே நினைக்கிறேன். மாடுகளைக் கட்டவோ அவிழ்த்துவிடவோ அதன் யஜமானனால்தான் முடியும். சரீரத்தில் அபிமானம்கொண்டு அதைப் போஷிப்பதிலேயே ஈடுபடும் அவிவேகிகளான ஜீவர்களும் பசுக்கள்தான். நம்மை இந்த ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிப்பவர் நமது யஜமானரான பரமேசுவரர்தான். அவரை உபாஸித்தால் பாபம், காமம், ஆஸுரஸ்வபாவம் எல்லாம் விலகி கங்காதீர்த்தம்போல் தூய்மை பெறலாம். (1)

**महेशं सुरेशं सुरारातिनाशं विभुं विश्वनाथं विभूत्यङ्गभूषम् ।**
**विरूपाक्षमिन्द्वर्कवह्नित्रिनेत्रं सदानन्दमीडे प्रभुं पञ्चवक्त्रम् ॥ २ ॥**

மஹேசம் ஸுரேசம் ஸுராராதி நாசம்
விபும் விச்வநாதம் விபூத்யங்க பூஷம் ।
விரூபாக்ஷமிந்த்வர்க்க வஹ்னி த்ரிநேத்ரம்
ஸதானந்தமீடே ப்ரபும் பஞ்சவக்த்ரம் ॥

**सुरेशं**-தேவர்களுக்கும் ஈசுவரனும், **सुरारातिनाशं**-தேவர்களின் எதிரியான அஸுரர்களை அழிப்பவரும், **विभुं**-எங்கும் உள்ளவரும், **विश्वनाथं**-எல்லோரையும் காப்பாற்றுபவரும், **विभूत्यङ्गभूषं**-சரீரத்திற்கு அலங்காரமாக விபூதியை அணிந்தவரும், **विरूपाक्षं**-விருபமான கண்களை உடையவரும், **इन्द्वर्कवह्नित्रिनेत्रं**-சந்திரன், சூரியன், அக்னி இவர்களைக் கண்களாகக்கொண்டவரும், **सदानन्दं**-எப்பொழுதும் இருப்பவரும் ஆனந்தரூபியும், **प्रभुं**-யஜமானரும், **पञ्चवक्त्रं**-ஐந்து முகங்களுள்ளவருமான, **महेशं**-மஹேசுவரனை, **ईडे**-துதிக்கிறேன்.

தேவர்களுக்கும் ஈசுவரன் தேவர்களின் சத்துருக்களான அஸுரர்களை அழித்து அவர்களைக் காப்பாற்றுபவர். எங்கும் நிறைந்தவர். எல்லோரையும் காப்பாற்றுபவர். விபூதியை அணிந்தவர். ஸூர்யன், சந்திரன், அக்னி இம்மூவரையும் கண்களாகக் கொண்டவர், உலகில் தாரணைதபடி நெற்றியில் கண்

இருப்பதால் லோகவிலக்ஷணமான நேத்ரங்கள் உள்ளவர். ஸத்தாகவும் ஆனந்தமாகவும் இருப்பவர். ஐந்து முகங்கள் உள்ளவர். எல்லோருக்கும் யஜமானர். இந்த மஹேசுவரனை துதிக்கிறேன். (2)

गिरीशं गणेशं गले नीलवर्णं गवेन्द्राधिरूढं गुणातीतरूपम् ।
भवं भास्वरं भस्मना भूषिताङ्गं भवानीकलत्रं भजे पञ्चवक्त्रम् ॥

கிரீஶம் கணேசம் கலே நீலவர்ணம்
கவேந்த்ராதிரூடம் குணாதீதரூபம் ।
பவம் பாஸ்வரம் பஸ்மனா பூஷிதாங்கம்
பவானீகளத்ரம் பஜே பஞ்சவக்த்ரம் ॥

**गिरीशं**–கைலாஸமலையின் ஈசனும், **गणेशं**–ப்ரமதகணங்களின் நாயகரும், **गले**–கழுத்தில், **नीलवर्णं**–நீலநிறமுள்ளவரும், **गवेन्द्राधिरूढं**–சிறந்த விருஷபத்தில் ஏறிஅமர்ந்திருப்பவரும், **गुणातीतरूपं**–குணங்களுக்கு அப்பாற்பட்ட ஸ்வரூபமுள்ளவரும் (குணமற்றவரும்), **भवं**–காரணமாக இருப்பவரும், **भास्वरं**–பிரகாசிக்கிறவரும், **भस्मना**–விபூதியால், **भूषिताङ्गं**–அலங்கரிக்கப்பட்ட சரீரமுள்ளவரும், **भवानीकलत्रं**–பார்வதியை மனைவியாகக்கொண்டவரும், **पञ्चवक्त्रं**–ஐந்து முகங்களுள்ளவருமான பரமசிவனை, **भजे**–பஜிக்கிறேன்.

கைலாஸமலைக்கு அதிபதி. ப்ரமதகணங்களுக்குத் தலைவர். கழுத்தில் நீலநிறமுள்ளவர். சிறந்த விருஷபத்தில் ஏறி அமர்ந்திருப்பவர். முக்குணங்களுக்கும் அப்பாற்பட்ட ஸ்வரூபமுள்ளவர். காரணப் பொருள். ஒளியுடன் கூடியவர். உடலில் விபூதியை அணிந்தவர். பார்வதியை மனைவியாகக் கொண்டவர். ஐந்து முகமுள்ளவர். இவ்விதமான மஹேசுவரனை பஜிக்கிறேன். (3)

शिवाकान्त शंभो शशाङ्कार्धमौले महेशान शूलिञ्जटाजूटधारिन् ।
त्वमेको जगद्व्यापको विश्वरूपः प्रसीद प्रसीद प्रभो पूर्णरूप ॥

ஶிவாகாந்த ஶம்போ ஶஶாங்கார்த்தமௌளே
மஹேஶான ஶூலின் ஜடாஜூடதாரின் ।
த்வமேகோ ஜகத்வ்யாபகோ விச்வரூப:
ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ பூர்ணரூப ॥

**शिवाकान्त**–பார்வதியின் நாயகனே, **शम्भो**–சம்புவே, **शशाङ्कार्धमौले**–அர்த்த சந்திரனை சிரஸ்ஸில் தரித்திருப்பவரே, **महेशान**–மஹேசுவரரே, **शूलिन्**–சூலாயுதமுள்ளவரே, **जटाजूटधारिन्**–ஜடாபந்தம் தரித்தவரே, **त्वमेकः**–நீர் ஒருவரே, **जगद्व्यापकः**–உலகம் முழுவதும் பரவியிருப்பவர், **विश्वरूपः**–எல்லா வடிவமாகவும் இருப்பவர். **प्रभो**–ஸ்வாமியே, **पूर्णरूप**–நிறைந்த ஸ்வரூபமுள்ளவரே, **प्रसीद प्रसीद**– அருள் புரியும் அருள்புரியும்.

*பார்வதியின் மணாளனே! மங்களங்களை அருள்பவனே; அர்த்தசந்திரனை சிரஸில் தரித்திருப்பவனே! மஹேசான! சூலாயுதம் ஏந்தியவனே! ஜடாபந்தம் தரித்தவனே! நீ ஒருவனே உலகம் முழுவதும் இருப்பவன். பலவித உருவம் கொண்டவன். எல்லாம் உன் ஸ்வரூபம். ப்ரபோ! நிறைந்த ஸ்வரூபம் உள்ளவனே! அருள்புரியும் அருள்புரியும்.* (4)

**परात्मानमेकं जगद्बीजमाद्यं निरीहं निराकारमोंकारवेद्यम् ।**
**यतो जायते पाल्यते येन विश्वं तमीशं भजे लीयते यत्र विश्वम् ॥**

*பராத்மாநமேகம் ஜகத்பீஜமாத்யம்*
*நிரீஹம் நிராகாரமோங்கார வேத்யம் ।*
*யதோ ஜாயதே பால்யதே யேந விச்வம்*
*தமீசம் பஜே லீயதே யத்ர விச்வம் ॥*

**यतः**–எவரிடமிருந்து, **विश्वं**–பிரபஞ்சம், **जायते**–உண்டாகிறதோ, **येन**–எவரால், **पाल्यते**–காப்பாற்றப்படுகிறதோ, **यत्र**–எவரிடம், **विश्वं**–பிரபஞ்சம், **लीयते**–லயமடைகிறதோ, **तं**–அந்த, **परात्मानं**–பரமாத்மாவும், **एकं**–ஒருவராயும், **जगद्बीजं**–உலகிற்குக் காரணமாயும், **आद्यं**–முதன்மையானவரும், **निरीहं**-ஆசையற்றவரும், **निराकारं**–உருவமற்றவரும், **ओंकारवेद्यं**-பிரணவத்தால் அறியத்தக்கவருமான, **ईशं**-ஈசனை, **भजे**-பஜிக்கிறேன்.

*பரமாத்மா ஒரே வஸ்து உலகிற்கு மூலகாரணம், அதனல் முதலில் இருப்பவர் ஆசையற்றவர், உருவமற்றவர். ஆனலும்*

ப்ரணவத்தால் அறியத்தக்கவர். ப்ரபஞ்சத்தை ஸிருஷ்டித்துப் பரிபாலிப்பவர். முடிவில் எல்லாம் மறைவதும் இவரிடம்தான் அப்பேற்பட்ட ஈசனை பஜிக்கிறேன். (5)

न भूमिर्न चापो न वह्निर्न वायुर्न चाकाशमास्ते न तन्द्रा न निद्रा।
न चोष्णं न शीतं न देशो न वेषो न यस्यास्ति मूर्तिस्त्रिमूर्तिं तमीडे ॥

ந பூமிர் ந சாபோ ந வஹ்நிர் ந வாயுர்
ந சாகாஶமாஸ்தே ந தந்த்ரா ந நித்ரா ।
ந சோஷ்ணம் ந ஶீதம் ந தேஶோர் ந வேஷோ
ந யஸ்யாஸ்தி மூர்த்திஸ் த்ரிமூர்த்திம் தமீடே ॥

यस्य–எவருக்கு, भूमिः–பூமி, न–இல்லை, आपः च–ஜலமும், न–இல்லை. वह्निः–தேஜஸ், न–இல்லை, वायुः–வாயு, न–இல்லை. आकाशं च–ஆகாசமும், न आस्ते–இல்லை. तन्द्रा–சோம்பல், न–இல்லை. निद्रा–தூக்கம், न–இல்லை. उष्णं च–சூடும், न–இல்லை, शीतं–குளிர்ச்சியும், न–இல்லை, देशः–தேசம், न–இல்லை वेषः–வேஷம், न–இல்லை. मूर्तिः–சரீரம், नास्ति–இல்லை, त्रिमूर्तिं–மும்மூர்த்திவடிவினரான, तं–அவரை, ईडे–துதிக்கிறேன்.

பரமாத்ம தத்வம் ஒன்றே உண்மையில் உள்ளது நாம் காணும் இப்பிரபஞ்சம் வெறும் தோற்றமே தவிற வாஸ்தவமாக இல்லை. அதாவது பூமி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம், சோம்பல், தூக்கம், சூடு, குளிர்ச்சி, தேசம், வேஷம் இவை ஒன்றுமே இல்லை சிலவற்றை மாத்திரம் இங்கு குறிப்பிட்டாலும் ப்ரஹ்மத்தைத் தவிற வேறு ஒன்றுமே இல்லை என்பது இதன் கருத்து. இவையாவும் உண்மையாக இல்லை ஆகையினால் பிரபஞ்சம் தோன்றுவது விருத்தமல்ல. பரமாத்மாவுக்கு சரீரம் கிடையாது. ஆனாலும் மாயையிலுள்ள ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களைக் கொண்டு மூன்று சரீரத்துடன் விளங்குகிறது. ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் என்று மூன்றாகப் பிரிந்திருந்தாலும் தத்வம் ஒன்றுதான், அந்த பரமாத்மாவைப் போற்றுகிறேன். (6)

अजं शाश्वतं कारणं कारणानां शिवं केवलं भासकं भासकानाम् ।
तुरीयं तमःपारमाद्यन्तहीनं प्रपद्ये परं पावनं द्वैतहीनम् ॥ ७ ॥

*அஜம் மாச்வதம் காரணம் காரணனும்*
*மிவம் கேவலம் பாஸகம் பாஸகானும் ।*
*துரீயம் தம:பாரமாத்யந்த ஹீனம்*
*ப்ரபத்யே பரம் பாவனம் த்வைதஹீனம் ॥*

**अजं**-பிறப்பில்லாதவரும், **शाश्वतं**-எப்பொழுதும் இருப் பவரும், **कारणानां**-காரணப் பொருள்களுக்கும், **कारणं**-காரண மாக இருப்பவரும், **केवलं**-தான் மாத்திரமாக இருப்பவரும், **भासकानां**-பிரகாசிக்கும் வஸ்துக்களையும், **भासकं**-பிரகாசப் படுத்துபவரும், **तुरीयं**-நான்காவது பொருளும், **तमःपारं**-அக்ஞானத்திற்கு அப்பாற்பட்டவரும், **आद्यन्तहीनं**-ஆதியும் அந்தமும் இல்லாதவரும், **परं**-மேலானவரும், **पावनं**-பரிசுத்த மானவரும், **द्वैतहीनं**-இரண்டற்றவருமான, **शिवं**-சிவனை, **प्रपद्ये**-சரணமடைகிறேன்.

*பிறக்காதவர், ஆகையால் எப்பொழுதும் இருப்பவர் (அழிவற்றவர்), காரணமான பஞ்சபூதங்களுக்கும் காரணமாக இருப்பவர், மங்களஸ்வரூபி, தனித்து இருப்பவர், ஒளியுள்ள ஸூரியன் முதலியவற்றையும் பிரகாசிக்கச் செய்பவர். வ்யஷ்டி யில் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தை களுக்கும் முறையே அபிமானிகளான விச்வன், தைஜஸன், ப்ராஜ்ஞன் இம்மூவர்களுக்கும், ஸமஷ்டியில் வைச்வாநரன், ஹிரண்யகர்ப்பன். ஸூத்ராத்மா இம்மூவர்களுக்கும் மேற்பட்ட. நான்காவது பொருள், அக்ஞானத்திற்கு அப்பாலிருப்பவர், ஆதியும் அந்தமுமற்றவர், மேலானவர், பரிசுத்தமான பொருள், இரண்டற்றவர். இந்த தத்வத்தைச் சரணமடைகிறேன்.* (7)

**नमस्ते नमस्ते विभो विश्वमूर्ते नमस्ते नमस्ते चिदानन्दमूर्ते ।**
**नमस्ते नमस्ते तपोयोगगम्य नमस्ते नमस्ते श्रुतिज्ञानगम्य ॥**

*நமஸ்தே நமஸ்தே விபோ விச்வமூர்த்தே*
*நமஸ்தே நமஸ்தே சிதானந்தமூர்த்தே ।*
*நமஸ்தே நமஸ்தே தபோயோககம்ய*
*நமஸ்தே நமஸ்தே ச்ருதிஞானகம்ய ॥*

**विभो**-எங்கும் உள்ளவரே, **विश्वमूर्ते**-பிரபஞ்சத்தையே சரீரமாகக்கொண்டவரே, **ते**-உமக்கு, **नमः**-நமஸ்காரம், **ते**-

உமக்கு, नमः—நமஸ்காரம், चिदानन्दमूर्ते—சைதன்யத்தையும் ஆனந்தத்தையும் ஸ்வரூபமாகக்கொண்டவரே, ते—உமக்கு, नमः-நமஸ்காரம், ते—உமக்கு, नमः—நமஸ்காரம், तपोयोगगम्य—தவத்தாலும் யோகத்தாலும் அடையத்தக்கவரே, ते-உமக்கு नमः-நமஸ்காரம், ते-உமக்கு, नमः-நமஸ்காரம், श्रुतिज्ञानगम्य—வேதாந்த ஞானத்தால் அறியத்தக்கவரே, ते—உமக்கு, नमः-நமஸ்காரம், ते-உமக்கு, नमः—நமஸ்காரம்.

எங்கும் உள்ளவரே! பிரபஞ்சம் எல்லாவற்றையும் சரீரமாகக் கொண்டவரே! உமக்கு நமஸ்காரம், உமக்கு நமஸ்காரம். அறிவையும் ஆனந்தத்தையும் சரீரமாகக்கொண்டவரே! உமக்கு நமஸ்காரம், உமக்கு நமஸ்காரம். தவயோகத்தால் அடையத்தக்கவரே! உமக்கு நமஸ்காரம், உமக்கு நமஸ்காரம். வேதாந்த ஞானத்தால் அடையத்தக்கவரே! உமக்கு நமஸ்காரம், உமக்கு நமஸ்காரம். எல்லாமாகவும் அவரே இருப்பதால் அவர் எங்கும் இருப்பவர். ஆனாலும் ஸச்சிதானந்தம்தான் அவருடைய உண்மையான ஸ்வரூபம். தபஸ், யோகாப்யாஸம் முதலான உபாயங்களால் மனதை அடக்கி வேதாந்த விசாரம் செய்து ஞானத்தைப் பெற்றால் அவராகவே ஆகிவிடலாம். (8)

प्रभो शूलपाणे विभो विश्वनाथ
महादेव शंभो महेश त्रिनेत्र ।
शिवाकान्त शान्त स्मरारे पुरारे
त्वदन्यो वरेण्यो न मान्यो न गण्यः ॥ ९ ॥

ப்ரபோ ஶூலபாணே விபோ விச்வநாத
மஹாதேவ ஶம்போ மஹேஶ த்ரிநேத்ர ।
ஶிவாகாந்த ஶாந்த ஸ்மராரே புராரே
த்வதந்யோ வரேண்யோ ந மாந்யோ ந கண்ய: ॥

प्रभो—ஸ்வாமியே, शूलपाणे-சூலாயுதத்தைக் கையில் கொண்டவரே, विभो-எங்கும் உள்ளவரே, विश्वनाथ—ஜகந்நாதா, महादेव-மஹாதேவா, शम्भो-சம்புவே, महेश-மஹேசுவரனே, त्रिनेत्र-முக்கண்ணனே, शिवाकान्त-பார்வதியின் நாயகனே, शान्त-அமைதியுள்ளவரே, स्मरारे-மன்மதனின்

சத்ருவே, **पुरारे**–த்ரிபுரர்களின் எதிரியே, **त्वदन्यः**–உம்மைக் காட்டிலும் வேறு, **वरेण्यः**–போற்றத்தக்கவர், **न**–இல்லை, **मान्यः**–மதிக்கத்தக்கவர், **न**–இல்லை, **गण्यः**–எண்ணத்தக்கவர், **न**–இல்லை.

*ப்ரபோ! சூலத்தைக் கையில் தரித்தவரே! வியாபகரே! விச்வநாதா! மஹாதேவா! சம்போ, மஹேசா! முக்கண்ணனே! பார்வதியின் காந்தனே! அமைதியுள்ளவரே, மன்மதனுக்கு எதிரியே! த்ரிபுரர்களின் சத்ருவே! நீர்தான் போற்றத் தக்கவர். மதிக்கத்தக்கவரும் எண்ணத்தக்கவரும் நீரே. வேறு ஒருவருமல்ல.* (9)

**शंभो महेश करुणामय शूलपाणे**
**गौरीपते पशुपते पशुपाशनाशिन् ।**
**काशीपते करुणया जगदेतदेक-**
**स्त्वं हंसि पासि विदधासि महेश्वरोऽसि ॥ १० ॥**

*ஶம்போ மஹேஶ கருணாமய ஶூலபாணே*
*கௌரீபதே பஶுபதே பஶுபாஶநாஶின் ।*
*காஶீபதே கருணயா ஜகதேததேக-*
*ஸ்த்வம் ஹம்ஸி பாஸி விததாஸி மஹேச்வரோऽஸி ॥*

**शम्भो**–சம்புவே, **महेश**–மஹேச்வரா, **करुणामय**–கருணையின் உருவமே, **शूलपाणे**–கையில் சூலத்தை தரித்தவரே, **गौरीपते**–கௌரியின் நாயகனே, **पशुपते**–பசுக்களின் (பிராணிகளின்) ஸ்வாமியே, **पशुपाशनाशिन्**–பசுக்களின் (ஜீவர்களின்) பாசத்தை ஒழிப்பவரே, **काशीपते**–காசீ நகரத் தலைவனே, **त्वं**–நீர், **एकः**–ஒருவனாக இருந்துகொண்டு, **करुणया**–கருணையினால், **एतत् जगत्**–இந்த பிரபஞ்சத்தை, **विदधासि**–ஸிருஷ்டிக்கிறீர், **पासि**–காப்பாற்றுகிறீர், **हंसि**–அழிக்கிறீர் (அதனால்), **महेश्वरः असि**–மஹேச்வரனாக இருக்கிறீர்.

*சம்போ, மஹேசா, கருணைவடிவமே, சூலத்தைக் கையில் உள்ளவரே! கௌரியின் நாயகரே, ஜீவர்களின் யஜமானரே,*

பிராணிகளின் பந்தத்தை ஒழிப்பவரே, காசீ நகராதிபதியே, நீ ஒருவனே இந்தப் பிரபஞ்சத்தை ஸிருஷ்டித்துக் காப்பாற்றி அழிக்கிறாய் ஜீவர்களின் பேரிலுள்ள கருணையால்தான் இவற்றைச் செய்கிறாய். சரீரத்தையும் போகங்களையும் கொடுத்து துன்பங்களை விலக்கி முடிவில் பேரின்பத்தையும் தருகிறாய் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்யும் சக்தி என்னும் ஐசுவர்யம் உன்னிடமே இருப்பதால் நீயே மஹேசுவரன். (10)

त्वत्तो जगद्भवति देव भव स्मरारे
त्वय्येव तिष्ठति जगन्मृड विश्वनाथ ।
त्वय्येव गच्छति लयं जगदेतदीश
लिङ्गात्मके हर चराचरविश्वरूपिन् ॥ ११ ॥

த்வத்தோ ஜகத் பவதி தேவ பவ ஸ்மராரே
த்வய்யேவ திஷ்டதி ஜகன் ம்ருட விச்வநாத ।
த்வய்யேவ கச்சதி லயம் ஜகதேததீஶ
லிங்காத்மகே ஹர சராசரவிச்வரூபின் ॥

देव-தேவனே, भव-காரணப்பொருளே, स्मरारे-காமனின் எதிரியே, त्वत्तः-உம்மிடமிருந்து, जगत्-பிரபஞ்சம், भवति-உண்டாகிறது, मृड-ஸுகத்தை அளிப்பவரே, विश्वनाथ-ஜகந்நாதா, जगत्-பிரபஞ்சம், त्वय्येव-உம்மிடத்திலேயே, तिष्ठति-நிற்கிறது. ईश-ஈசனே, हर-பாபங்களைப் போக்குபவனே, चराचरविश्वरूपिन्-ஸ்தாவரமாயும் ஜங்கமமாயும் உள்ள பிரபஞ்ச உருவம்கொண்டவரே, लिङ्गात्मके-லிங்க ரூபியான, त्वय्येव-உம்மிடத்திலேயே, एतत् जगत्-இந்த ஜகத் लयं-லயத்தை गच्छति-அடைகிறது.

ஹே தேவா, காரண வஸ்துவே, காமனை அழித்தவரே, பிரபஞ்சம் உம்மிடமிருந்து உண்டாகிறது. ஸுகத்தையளிப்பவரே, ஜகந்நாத, உம்மிடமே பிரபஞ்சம் நிற்கிறது. ஈசனே, ஹரனே, ஸ்தாவரமும் ஜங்கமமுமான பிரபஞ்சமாக இருப்பவனே! காரண ஸ்வரூபமான உம்மிடத்தில்தான் இந்த பிரபஞ்சம் லயத்தையடைகிறது.
(11)

வேதஸார சிவ ஸ்தோத்ரம் முற்றும்.

# ॥ कालभैरवाष्टकम् ॥

## காலபைரவாஷ்டகம்

[ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்யாள் வாராணசியில் தங்கியிருந்த சமயத்தில் அங்கு கோயில் கொண்டுள்ள ஸ்ரீ காலபைரவரை தர்சித்து ஸ்தோத்ரம் செய்தருளியிருக்கிறார். அதுதான் 9 சுலோகங்கள் கொண்ட இந்த காலபைரவாஷ்டகம் முதல் 8 சுலோகங்கள் ஸ்தோத்ரமாகவும், கடைசி சுலோகம் பலச்ருதியாகவும் அமைந்துள்ளது இது.]

देवराजसेव्यमानपावनांघ्रिपङ्कजं
व्यालयज्ञसूत्रमिन्दुशेखरं कृपाकरम् ।
नारदादियोगिवृन्दवन्दितं दिगम्बरं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥ १ ॥

தேவராஜ ஸேவ்யமான பாவனாங்க்ரி பங்கஜம்
வ்யாள யக்ஞஸூத்ரமிந்து ஶேகரம் க்ருபாகரம் ।
நாரதாதி யோகிப்ருந்த வந்திதம் திகம்பரம்
காஶிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥

**देवराज**–தேவேந்திரனால், **सेव्यमान**–ஸேவிக்கப்படுகிற, **पावन**–தூய்மையான, **अंघ्रिपङ्कजं**–தாமரைபோன்ற திருவடிகளை உடையவரும், **व्याल**–பாம்பை, **यज्ञसूत्र**–யக்ஞோபவீதமாகக்கொண்டவரும், **इन्दुशेखरं**–சந்திரனை சிரோபூஷணமாகக்கொண்டவரும், **कृपाकरं**–கருணாநிதியும், **नारदादि**–நாரதர் முதலான, **योगिवृन्द**–யோகிகளின் கூட்டத்தால், **वन्दितं**–வணங்கப்பட்டவரும், **दिगम्बरं**–திசைகளையே ஆடையாக உடையவருமான, **काशिकापुराधिनाथ**–காசிமாநகரின் அதிபதியான, **कालभैरवं**–காலபைரவரை, **भजे**–பஜிக்கிறேன்.

காசீநகருக்கு ஸ்வாமியாக விளங்கும் காலபைரவரின் தூய திருவடித் தாமரைகளை தேவேந்திரனும் வணங்குகிறான். பாம்புகளை பூணூலாகத் தரித்துக்கொண்டிருக்கிறார். சிரஸில்

சந்திரன் அலங்காரமாக விளங்குகிறான். கருணாநிதியான இவரை மனதை அடக்கிய நாரதர் முதலான யோகியர்கள் வணங்கு கின்றனர். இடுப்பில் ஆடையில்லாதவர். இந்தக் காலபைரவரை பஜிக்கிறேன். (1)

**भानुकोटिभास्वरं भवाब्धितारकं परं**
**नीलकण्ठमीप्सितार्थदायकं त्रिलोचनम् ।**
**कालकालमम्बुजाक्षमस्तशून्यमक्षरं**
**काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥ २ ॥**

பானு கோடி பாஸ்வரம் பவாப்தி தாரகம் பரம்
நீலகண்டமீப்ஸிதார்த்த தாயகம் த்ரிலோசனம் ।
காலகாலமம்புஜாக்ஷமஸ்தசூன்யமக்ஷரம்
காசிகா புராதிநாத காலபைரவம் பஜே ॥

**भानुकोटि**–கோடி ஸூர்யர்கள்போல், **भास्वरं**–பிரகாசிக்கிறவரும், **भवाब्धितारकं**–ஸம்ஸாரக்கடலைத் தாண்டும்படி செய்கிறவரும், **परं**–மேலானவரும், **नीलकण्ठं**–நீலநிறமான கழுத்தையுடையவரும், **ईप्सितार्थदायकं**–விரும்பும் பொருளைத் தருபவரும், **त्रिलोचनं**–முக்கண்ணனும், **कालकालं**–மிருத்யுவுக்கும் மிருத்யுவாயும், **अम्बुजाक्षं**–தாமரைபோன்ற கண்களுள்ளவரும், **अस्तशून्यं**–சூன்யமற்றவரும், **अक्षरं**–அழிவற்றவருமான, **काशिकापुराधिनाथ**–காசிமாநகரின் அதிபதியான, **कालभैरवं**–காலபைரவரை, **भजे**–பஜிக்கிறேன்.

கோடி ஸூர்யர்கள் ஒரேசமயத்தில் இருந்தால் எத்தனை பிரகாசமிருக்குமோ அத்தனை பிரகாசமுள்ளவர். பிறவிக் கடலில் விழுந்து துன்பமுறும் நம்மை அக்கரை சேர்ப்பவர். அவரே மேலான தெய்வம். கழுத்தில் நீல நிறமும் தாமரை போன்ற கண்களுமுள்ளவர். வேண்டியதை எல்லாம் கொடுப்பவர் முக்கண்ணன் காலனையும் நிக்ரஹம் செய்த இவர் மிருத்யு பயத்தைப் போக்குபவர். அழிவற்றவர். இவர் இல்லாத இடமும் காலமும் இல்லை. இந்த காசீநகரஸ்வாமியான காலபைரவரை பஜிக்கிறேன். (2)

शूलटङ्कपाशदण्डपाणिमादिकारणं
श्यामकायमादिदेवमक्षरं निरामयम् ।
भीमविक्रमं प्रभुं विचित्रताण्डवप्रियं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥ ३ ॥

*ஶூல டங்க பாஶ தண்ட பாணிமாதிகாரணம்*
*ச்யாம காயமாதிதேவமக்ஷரம் நிராமயம் ।*
*பீமவிக்ரமம் ப்ரபும் விசித்ர தாண்டவப்ரியம்*
*காஶிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥*

**शूलटङ्कपाशदण्डपाणिं**-சூலம், உளி, பாசம், தண்டம் இவைகளைக் கையில் வைத்திருப்பவரும், **आदिकारणं**-முதற் காரணமாக இருப்பவரும், **श्यामकायं**-கருப்பான உடலுள்ள வரும், **आदिदेव**-முதலாவது தேவனும், **अक्षरं**-நாசமில்லாத வரும், **निरामयं**-பிணியில்லாதவரும், **भीमविक्रमं**-பயங்கரமான பராக்ரமமுள்ளவரும், **प्रभुं**-ஸ்வாமியும், **विचित्रताण्डवप्रियं**-ஆச்சர்யமான தாண்டவத்தில் ப்ரீதி உள்ளவரும், **काशिकापुराधिनाथ**-காசிமாநகரின் அதிபதியான, **कालभैरवं**-காலபைரவரை, **भजे**-பஜிக்கிறேன்.

கைகளில் சூலம், டங்கம், பாசம், தண்டம் இந்த ஆயுதங்களை வைத்திருப்பவர். எல்லாவற்றிற்கும் மூலகாரணம் உடல் வெளுப்பாக இருந்தபோதிலும் கழுத்திலுள்ள விஷத்தால் கருப்பாகவும் தெரிகிறது. முதலாவது தேவன், நாசமில்லாதவர், வியாதி-துன்பம் ஒன்றுமில்லாதவர். துஷ்டர்களுக்கு பயத்தைத் தரும் பராக்ரமமுள்ளவர் எல்லோரும் ஆச்சர்யப்படும்படி பலவிதமாக தாண்டவம் செய்வதில் ப்ரீதி உள்ளவர். இந்த காசி நகரத்தலைவனை காலபைரவரை பஜிக்கிறேன். (3)

भुक्तिमुक्तिदायकं प्रशस्तचारुविग्रहं
भक्तवत्सलं स्थिरं समस्तलोकविग्रहम् ।
निक्वणन्मनोज्ञहेमकिङ्किणीलसत्कटिं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥ ४ ॥

புக்தி முக்தி தாயகம் ப்ரஸஸ்த சாருவிக்ரஹம்
பக்த வத்ஸலம் ஸ்திரம் ஸமஸ்தலோக விக்ரஹம் ।
நிக்வணன் மனோக்ஞ ஹேம கிங்கிணீ லஸத்கடிம்
காஶிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥

**भुक्तिमुक्तिदायकं**—போகத்தையும் மோக்ஷத்தையும் தருபவரும், **प्रशस्त**-சிறந்த, **चारु**—அழகிய, **विग्रहं**-சரீரமுள்ளவரும் **भक्तवत्सलं**—பக்தர்களிடம் வாத்ஸல்யமுள்ளவரும், **स्थिरं**—நிலைத்து இருப்பவரும், **समस्तलोकविग्रहं**—எல்லா உலகங்களையும் சரீரமாகக்கொண்டவரும், **निक्वणन्मनोज्ञ**—ஒலிக்கின்ற அழகிய, **हेमकिङ्किणी**—தங்கச் சலங்கைகளுடன், **लसत्**—விளங்கும், **कटिं**—இடுப்பை உடையவருமான, **काशिकापुराधिनाथ**—காசி நகரத்தின் அதிபதியான, **कालभैरवं**—காலபைரவரை, **भजे**—பஜிக்கிறேன்.

இவ்வுலகிலும் மேலுலகிலும் போகங்களையும் மோக்ஷத்தையும் அளிப்பவர். மிகச்சிறந்ததும் அழகியதுமான சரீரமுள்ளவர். பக்தர்களிடம் அன்புகொண்டவர். நிலைத்திருப்பவர். எல்லா உலகங்களையும் சரீரமாகக்கொண்டவர். இடுப்பில் ஒலிக்கும் அழகிய தங்கச்சலங்கைகளுடன் கூடிய அரைஞாண்கட்டிக்கொண்டிருக்கிறார். இந்த காசிநகராதிபதியான காலபைரவரை பஜிக்கிறேன். (4)

धर्मसेतुपालकं त्वधर्ममार्गनाशकं
कर्मपाशमोचकं सुशर्मदायकं विभुम् ।
स्वर्णवर्णकेशपाशशोभिताङ्गनिर्मलं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥ ५ ॥

தர்ம ஸேது பாலகம் த்வதர்ம மார்க்க நாஶகம்
கர்ம பாஶ மோசகம் ஸுஶர்மதாயகம் விபும் ।
ஸ்வர்ண வர்ண கேஶ பாஶ ஶோபிதாங்க நிர்மலம்
காஶிகா புராதிநாத காலபைரவம் பஜே ॥

**धर्मसेतु**—தர்மமாகிற அணையை, **पालकं**—காப்பாற்றுகிறவரும், **अधर्ममार्गनाशकं**—அதர்ம வழியை அழிப்பவரும், **कर्म-**

**पाशमोचकं**-கர்மபாசத்திலிருந்து விடுவிப்பவரும், **सुशर्मदायकं**-சிறந்த ஸுகத்தைத்தருபவரும், **विभुं**-எங்கும் உள்ளவரும், **स्वर्णवर्ण**-தங்க நிறமுள்ள, **केशपाश**-கேசஸமூஹங்களால், **शोभिताङ्गनिर्मलं**-விளங்கும் தூய்மையான சரீரமுள்ளவருமான **काशिकापुराधिनाथ**-காசீ நகராதிபதியான, **कालभैरवं**-காலபைரவரை, **भजे**-பஜிக்கிறேன்.

தர்மம் என்னும் அணையை அழியாமல் காப்பாற்றுபவர். அதர்ம வழியை அழிப்பவர். கர்ம பந்தத்திலிருந்து விடுவிப்பவர். சிறந்த ஸுகத்தைத் தருபவர், வியாபகர், தங்கநிறமுள்ள கேச ஸமூஹத்தால் விளங்கும் தூய்மையான சரீரமுள்ளவர். இந்த காசிமாநகரபதியான காலபைரவரை பஜிக்கிறேன். (5)

रत्नपादुकाप्रभाभिरामपादयुग्मकं
नित्यमद्वितीयमिष्टदैवतं निरञ्जनम् ।
मृत्युदर्पनाशनं करालदंष्ट्रभूषणं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥ ६ ॥

ரத்னபாதுகா ப்ரபாபிராம பாத யுக்மகம்
நித்யமத்விதீயமிஷ்ட தைவதம் நிரஞ்ஜனம் ।
ம்ருத்யுதர்ப நாஶனம் கராளதம்ஷ்ட்ர பூஷணம்
காஶிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥

**रत्नपादुका**-ரத்னம் பதித்த பாதுகைகளின், **प्रभा**-ஒளியால், **अभिराम**-அழகிய, **पादयुग्मकं**-இருபாதங்களையுடையவரும், **नित्यं**-பிறப்பு இறப்பு அற்றவரும், **अद्वितीयं**-இரண்டற்றவரும், **इष्टदैवतं**-இஷ்ட தைவமும், **निरञ्जनं**-தோஷங்கள் அற்றவரும், **मृत्युदर्पनाशनं**-யமனின் கொழுப்பை ஒழித்தவரும், **करालदंष्ट्रभूषणं**-பயங்கரமான கோரைப்பற்களை ஆபரணமாகக்கொண்டவருமான, **काशिकापुराधिनाथ**-காசி நகரபதியான, **कालभैरवं**-காலபைரவரை, **भजे**-பஜிக்கிறேன்.

பாதுகைகளில் பதிக்கப்பட்ட ரத்னங்களின் ஒளியால் இரு திருவடிகளும் அழகுடன் விளங்குகிறது. அழிவற்றவர். இரண்டாவது பொருள் இல்லாதவர். இஷ்டமான தைவம்,

தோஷங்களற்றவர். யமனின் கர்வத்தைப் போக்கியவர். பயங்கரமான கோரைப்பற்களை அணியாகக்கொண்டவர். இந்த காசீநகரபதியான காலபைரவரை பஜிக்கிறேன். (6)

अट्टहासभिन्नपद्मजाण्डकोशसंततिं
दृष्टिपातनष्टपापजालमुग्रशासनम् ।
अष्टसिद्धिदायकं कपालमालिकाधरं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥ ७ ॥

அட்டஹாஸ பிந்ந பத்மஜாண்ட கோசஸந்ததிம்
த்ருஷ்டிபாத நஷ்ட பாபஜாலமுக்ரசாஸநம் ।
அஷ்டஸித்தி தாயகம் கபாலமாலிகா தரம்
காசிகா புராதிநாத காலபைரவம் பஜே ॥

**अट्टहास**–உரத்த சிரிப்பினால், **भिन्न**–பிளக்கப்பட்ட, **पद्मजाण्डकोशसन्ततिं**–மொட்டுப்போன்ற ப்ரஹ்மாண்டங்களின் கூட்டங்களை உடையவரும், **दृष्टिपात**–பார்வையைச் செலுத்துவதால், **नष्ट**–அழிந்துபோகும், **पापजालं**–பாபக்கூட்டத்தை உடையவரும், **उग्रशासनं**–கடுமையான உத்தரவுகளை உடையவரும், **अष्टसिद्धिदायकं**–எட்டு ஸித்திகளையும் தருபவரும், **कपालमालिकाधरं**–மண்டையோட்டு மாலையைத் தரித்தவருமான, **काशिकापुराधिनाथ**–காசீ நகராதிபதியான, **कालभैरवं**–காலபைரவரை, **भजे**–பஜிக்கிறேன்.

இவர் செய்யும் அட்டஹாஸத்தின் பேரொலியால் ப்ரஹ்மாண்டங்கள் எல்லாம் பிளக்கப்பட்டுவிடுகின்றன. இவருடைய கடாக்ஷம் விழுந்தால் எல்லா பாபங்களும் அழிந்துவிடும். இவருடைய கடுமையான உத்தரவை யாரும் மீறமுடியாது. பக்தர்களுக்கு அணிமா முதலான எட்டு ஸித்திகளையும் தருபவர். எத்தனையோ ப்ரஹ்மாக்களின் மண்டையோடுகளை மாலையாக அணிந்திருக்கிறார். இந்த காசிபுரத்தலைவனை காலபைரவரை பஜிக்கிறேன். (7)

भूतसङ्घनायकं विशालकीर्तिदायकं
काशिवासिलोकपुण्यपापशोधकं विभुम् ।

नीतिमार्गकोविदं पुरातनं जगत्पतिं
काशिकापुराधिनाथकालभैरवं भजे ॥ ८ ॥

பூதஸங்கநாயகம் விஶாலகீர்த்திதாயகம்
காஶிவாஸி லோக புண்ய பாப ஶோதகம் விபும் ।
நீதிமார்க்க கோவிதம் புராதனம் ஜகத்பதிம்
காஶிகாபுராதிநாத காலபைரவம் பஜே ॥

**भूतसंघनायकं**-பூதக்கூட்டங்களின் தலைவரும், **विशाल-कीर्तिदायकं**-விஸ்தாரமான கீர்த்தியைத் தருபவரும், **काशि-वासि**-காசீ க்ஷேத்திரத்தில் வஸிக்கின்ற, **लोक**-ஜனங்களின் **पुण्यपाप**-புண்ய பாபங்களை, **शोधकं**-சோதிப்பவரும், **विभुं**-வியாபகரும், **नीतिमार्गकोविदं**-நியாய வழியை நன்கு அறிந்தவரும், **पुरातनं**-பழமையானவரும், **जगत्पतिं**-உலகங்களின் தலைவருமான, **काशिकापुराधिनाथ**-காசீ நகராதிபதியான, **कालभैरवं**-காலபைரவரை, **भजे**-பஜிக்கிறேன்.

பூதகணங்களுக்குத் தலைவர், பக்தர்களுக்கு விஸ்தாரமான புகழைத் தருபவர். காசீ க்ஷேத்திரத்தில் வஸிக்கும் ஜனங்களின் புண்யங்களையும் பாபங்களையும் சோதிப்பவர். தான்யங்களை சல்லடையைக் கொண்டு சலித்தால் அஸாரமான அம்சங்களை நீக்கி ஸாரமான அம்சங்களை மட்டும் மிஞ்சச் செய்கிறது. இது போல் பாபங்களையெல்லாம் நீக்கி புண்யத்தை மட்டும் மிஞ்சச் செய்கிறார். வியாபகர், நியாய முறைகளை நன்கு அறிந்தவர். எல்லாவற்றிற்கும் முன்னால் இருப்பவர். உலகங்களுக்குத் தலைவர் - இந்த காசிமாநகர பதியான கால பைரவரை பஜிக்கிறேன். (8)

कालभैरवाष्टकं पठन्ति ये मनोहरं
ज्ञानमुक्तिसाधकं विचित्रपुण्यवर्धनम् ।
शोकमोहलोभदैन्यकोपतापनाशनं
ते प्रयान्ति कालभैरवांघ्रिसन्निधिं ध्रुवम् ॥ ९ ॥

காலபைரவாஷ்டகம் படந்தி யே மனோஹரம்
ஞானமுக்திஸாதகம் விசித்ரபுண்ய வர்த்தனம் ।

*சோக மோஹ லோப தைன்ய கோப தாப நாசநம்*
*தே ப்ரயாந்தி காலபைரவாங்க்ரி ஸந்நிதிம் த்ருவம் ||*

**ये**-எவர்கள், **मनोहरं**-இனிமையானதும், **ज्ञानमुक्तिसाधकं**-ஞானம் மூலம் முக்தியைப்பெற ஸாதனமாக உள்ளதும், **विचित्रपुण्यवर्धनं**-பலவித புண்யங்களை வளரச்செய்வதும், **शोक**-சோகம், **मोह**-மோஹம், **लोभ**-லோபம், **दैन्य**-தைன்யம், **कोप**-கோபம், **ताप**-தாபம் இவைகளை, **नाशनं**-போக்குவது மான, **कालभैरवाष्टकं**-காலபைரவாஷ்டகம் என்ற இந்த ஸ்தோத்ரத்தை, **पठन्ति**-படிக்கிறார்களோ, **ते**-அவர்கள், **ध्रुवं**-நிச்சயமாக, **कालभैरवांघ्रिसन्निधिं**-காலபைரவரின் பாதார விந்தத்தின் ஸமீபத்தை **प्रयान्ति**-அடைகிறார்கள்.

எட்டு சுலோகங்கள் கொண்ட இந்தக் காலபைரவாஷ்டகம் படிப்பதற்கும் கேட்பதற்கும் இனிமையானது. ஞானத்தைக் கொடுத்து அதன் மூலம் மோக்ஷத்தையும் தரவல்லது. ஞானத் திற்கு ஸாதனமாக ஏராளமான புண்யங்களைப் பெருக்குகிறது. சோகம் (வஸ்துக்களின் பிரிவினால் உண்டாகும் துக்கம்) மோஹம் (ப்ராந்தி) பேராசை, ஏழ்மை, கோபம், ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம் என்ற தாபங்கள் இவற்றையெல்லாம் அடியுடன் போக்கக்கூடியது. இந்த ஸ்தோத்திரத்தை தினமும் படிப்பவர்கள் நிச்சயமாகக் கால பைரவரின் சரணாரவிந்த ஸந்நிதியை அடைவார்கள். (9)

காலபைரவாஷ்டகம் முற்றும்



॥ श्रीः ॥

# ॥ सुवर्णमालास्तुतिः ॥

## ஸுவர்ணமாலா ஸ்துதி

[50 சுலோகங்கள் கொண்ட ஸுவர்ணமாலா ஸ்துதி தாளத்திற்கு இசைவாக அமைந்துள்ளது. அகாரம் முதல் க்ஷகாரம் வரை உள்ள அக்ஷர வரிசைப்படி ஒவ்வொரு சுலோகத்திலும் முதல் அக்ஷரம் இருப்பதால் இதற்கு ஸுவர்ணமாலா ஸ்துதி என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. பூர்வார்த்தம் (சுலோகத்தின் முன்பாதி) வெவ்வேருக இருந்தாலும் உத்தரார்த்தம் (பின்பாதி) எல்லா சுலோகங்களிலும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கிறது. அநேகமாக எல்லாம் ஸம்போதனமாகவே உள்ளது. இந்த ஸ்துதியில் பகவத் சரணத்தையே சரணமடைகிருர்]

**अथ कथमपि मद्रसनां त्वद्गुणलेशैर्विशोधयामि विभो ।**
**[1]साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १ ॥**

அத கதமபி மத்ரஸனாம்
 த்வத்குணலேசைர் விசோதயாமி விபோ ।
ஸாம்ப ஸதாசிவ சம்போ சங்கர
 சரணம் மே தவ சரணயுகம் ॥

**विभो**–எங்கும் நிறைந்த பரமேசனே! **अथ**–முதலில், **त्वद्गुणलेशैः**–உம்முடைய குணத்துளிகளால், **कथमपि**–எப்படியாவது, **मद्रसनां**–என் நாக்கை, **विशोधयामि**–தூய்மையாக்கிக்கொள்கிறேன். **साम्ब**–அம்பிகையுடன் கூடியவரே, **सदाशिव**–எப்பொழுதும் மங்களஸ்வரூபியே, **शंभो**–மங்களங்களுக்குக்காரணமானவரே, **शंकर**–மங்களத்தைச் செய்பவரே **मे**–எனக்கு, **तव**–உம்முடைய, **चरणयुगं**–இரு திருவடிகளும், **शरणम्**–அடைக்கலம்.

---

1. முதல் சுலோகத்தில் உள்ளது போலவே பின்வரும் எல்லா சுலோகங்களிலும் உத்தரார்த்தம் (சுலோகத்தின் பின் பாதி) ஒரே மாதிரியாகவே இருப்பதால் இங்கு கூறியுள்ள தமிழ் உரையையே எல்லா சுலோகங்களிலும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

பகவானுடைய குணங்களைச் சொல்லி நாக்கை சுத்தம் செய்வதாக அகாரத்திலாரம்பிக்கும் முதல் சுலோகத்தில் கூறி துதியை ஆரம்பிக்கிறார். பேசுவதற்காக ஏற்பட்டது நாக்கு. சொல்லத்தகாத விஷயங்களை எல்லாம் பேசி நாக்குக்கு அசுத்தி ஏற்பட்டுள்ளது. இந்த அசுத்தி நீங்குவதற்கு பகவானுடைய குணங்களைச் சொல்லவேண்டும் பகவானுடைய குணங்கள் மலைபோன்றது. அளவிட முடியாதது. அதில் சிறிதளவு சொன்னால் போதும். எல்லாப் பாபங்களும் விலகி நாக்கு பரிசுத்தமாகிவிடும். உலக ஸமாசாரங்களையெல்லாம் பேசும் நாக்கு பகவானைப்பற்றிப் பேசும்பொழுது மௌனமாகிவிடும். இதற்கும் பூர்வஸுகிருதம் வேண்டும். குற்றமுள்ள நாம் பகவத் சரணத்தை சரணமடைவதைத் தவிர வேறு வழியில்லை. தந்தையின் கோபத்தைத் தணித்துத் தாய்தான் குழந்தையைக் காப்பாற்றும்படி செய்வாள். அதனால்தான் அம்பிகையுடன் கூடிய பகவானை சரணமடைகிறார். ஈசன் எப்பொழுதும் மங்கள உருக்கொண்டவர். எல்லா மங்களங்களுக்கும் இவர்தான் காரணம், மங்களத்தைத் தருபவரும் இவரே. ஆகையால் சிவனின் திருவடியை அண்டினால் எல்லா மங்களங்களும் கிடைக்கும். (1)

**आखण्डलमदखण्डनपण्डित तण्डुप्रिय चण्डीश विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २ ॥**

ஆகண்டல மத கண்டன பண்டித
தண்டுப்ரிய சண்டீஶ விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**आखण्डल**—இந்திரனின், **मद**—கர்வத்தை, **खण्डन**—ஒழிப்பதில், **पण्डित**—திறமையுள்ளவரே, **तण्डुप्रिय**—தண்டு என்ற பக்தனிடம் ப்ரீதியுள்ளவரே, **चण्डीश**—சண்டியின் நாயகரே **विभो**—எங்கும் உள்ளவரே, **साम्ब**—அம்பிகையுடன் கூடியவரே, ... **शरणम्**—அடைக்கலம்.

மூன்று உலகங்களுக்கும் அதிபதியாக இருந்தாலும் தேவேந்திரன் செருக்குற்றால் அவன் கர்வத்தையடக்கி அருள் செய்பவர். தண்டு என்ற தம் பக்தனிடம் ப்ரீதி கொண்டவர். சண்டியின் நாயகர். (2)

इभचर्माम्बर शम्बररिपुवपुरपहरणोज्ज्वलनयन विभो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३ ॥

இபசர்மாம்பர ஶம்பரரிபு வபு-
ரபஹரணோஜ்வல நயன விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**इभचर्माम्बर**-யானைத் தோலை ஆடையாக அணிந்தவரே, **शम्बररिपु**-சம்பராஸுரனின் எதிரியாகிய காமனின், **वपुरपहरण**-சரீரத்தை அழிப்பதில், **उज्वल**-மிகுந்த பிரகாசமுள்ள, **नयन**-கண்களை உடையவரே, **विभो** எங்குமுள்ளவரே **साम्ब**-ஸாம்பனே ... **शरणम्**-அடைக்கலம்.

உலகிற்குத் தீங்கு செய்த யானை உருவம்கொண்ட கஜாஸுரனைக் கொன்று அவன் தோலை (யானைத் தோலை) மேலாடையாக அணிந்தவர். சம்பரனை அடக்கிய மன்மதனின் உடலைத் தம் கண்பார்வையாலேயே தஹித்தவர். (3)

ईश गिरीश नरेश परेश महेश बिलेशयभूषण भो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४ ॥

ஈஶ கிரீஶ நரேஶ பரேஶ ம
ஹேஶ பிலேஶய பூஷண போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**भो ईश**-ஹே ஈசுவரனே, **गिरीश**-கைலாஸமலைக்கு அதிபனே, **नरेश**-மனிதர்களுக்குத் தலைவனே, **परेश**-மேலான ஈசனே, **महेश**-மஹேசுவரனே, **बिलेशयभूषण**-புற்றில் வாழும் ஸர்ப்பங்களை அணியாகக் கொண்டவனே, **साम्ब**-ஸாம்பனே ... **शरणम्**-அடைக்கலம்.

பாம்புகளையே தம் சரீரத்தில் ஆபரணமாக அணிந்திருக்கிறார் ஆனாலும் எல்லாவற்றிற்கும் ஈசன் (ப்ரபு) அவர்தான். (4)

उमया दिव्यसुमङ्गलविग्रहयालिङ्गितवामाङ्ग विभो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ।। ५ ।।

உமயா திவ்ய ஸுமங்கள விக்ரஹ
யாலிங்கித வாமாங்க விபோ।
ஸாம்ப ஸதாபிவ பூம்போ சங்கர
பரணம் மே தவ சரணயுகம் ॥

दिव्य-அழகான, सुमङ्गल - நல்ல மங்களம் பொருந்திய, विग्रहया-சரீரத்துடன்கூடிய, उमया-பார்வதியினுல், आलिङ्गित-தழுவிக் கொள்ளப்பட்ட, वामाङ्ग - சரீரத்தின் இடதுபக்க முடையவரே, विभो-வியாபகரே, साम्ब-ஸாம்பனே...शरणम्-அடைக்கலம்.

பகவான் மங்களரூபி. இவர் பத்னியான உமையின் சரீரமும் திவ்யமங்களரூபம். இவளுக்கு 'ஸர்வ மங்களா' என்று பெயர். பகவானின் இடதுபக்கத்தில் பார்வதி ஆலிங்கனம் செய்து கொண்டிருக்கிருள். (5)

ऊरीकुरु मामज्ञमनाथं दूरीकुरु मे दुरितं भो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ।। ६ ।।

ஊரீகுரு மாமஜ்ஞமநாதம்
தூரீகுரு மே துரிதம் போ।
ஸாம்ப ஸதாபிவ பம்போ சங்கர
பரணம் மே தவ சரணயுகம் ॥

अज्ञं - அறிவிலியாயும், अनाथं - கதியில்லாதவனுமான, मां-என்னை, ऊरीकुरु-ஏற்றுக்கொள். भो-ஹே பரமேசா, मे-என்னுடைய, दुरितं-பாபத்தை, दूरीकुरु-போக்குவாயாக, साम्ब-ஸாம்பனே ... शरणम् -அடைக்கலம்.

புண்யசாலிகள்தான் பகவானை அடையமுடியும். பாபமுள்ளவர்கள் அடையமுடியாது. நானே மஹா பாபி. உங்களை அடைவதற்குவேண்டிய ஸாதனங்களை அறியாதவன் எனக்கு வேறு கதியுமில்லை. உங்கள் திருப்பாதங்களையே நம்பி சரண

மடைகிறேன். தாங்கள் என் பேரில் கிருபைசெய்து என் பாபங்களைப்போக்கி என்னை ஏற்றுக்கொள்ளவேண்டும். (6)

**ऋषिवरमानसहंस चराचरजननस्थितिलयकारण भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ७ ॥**

*ருஷிவர மானஸ ஹம்ஸ சராசர*
*ஜனன ஸ்திதிலய காரண போ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரண யுகம் ॥*

**ऋषिवर**-சிறந்த முனிவர்களின், **मानस**-மனமாகிற மானஸஸரஸ்ஸில், **हंस**-ஹம்ஸம்போல் விளங்குபவரே, **चराचर**-ஸ்தாவரமாயும் ஜங்கமமாயும் உள்ள எல்லாவற்றினுடையவும், **जननस्थितिलय**-பிறப்பு, இருப்பு, அழிவு இவைகளுக்கு, **कारण**-காரணமானவரே, **भो साम्ब**-ஹே ஸாம்பனே ... **शरणम्**-அடைக்கலம்.

*ஹம்ஸங்கள் மானஸஸரஸ்ஸில் மிகுந்த ப்ரீதியுடன் வாஸம் செய்யும். தாங்கள் சிறந்த மஹரிஷிகளின் மனதில் வாஸம் செய்கிறீர்கள், முனிவர்கள் தம் மனதைவிட்டு நீர் அகலாதபடி எப்பொழுதும் உம்மை தியானம் செய்கிறார்கள். ஆகையால் எப்பொழுதும் அவர்கள் மனதில் விளங்கிக்கொண்டிருக்கிறீர். இப்பிரபஞ்சத்தை நீர்தான் ஸிருஷ்டிக்கிறீர். காப்பாற்றுவதும் நீர்தான். முடிவில் எல்லாம் உம்மிடத்தில்தான் லயமடைகின்றன. நீர்தான் ஈசன்.* (7)

**ऋक्षाधीशकिरीट महोक्षारूढ विधृतरुद्राक्ष विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ८ ॥**

*ருக்ஷாதீஶ கிரீட மஹோக்ஷா-*
*ரூட வித்ருத ருத்ராக்ஷ விபோ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரணயுகம் ॥*

**ऋक्षाधीश**-நக்ஷத்திரங்களுக்கு நாயகனான சந்திரனை, **किरीट**-கிரீடத்தில் அணியாகக் கொண்டவரே, **महोक्षारूढ**-

பெரிய விருஷப வாஹனத்தில் ஏறி—அமர்ந்திருப்பவரே, विधृतरुद्राक्ष-ருத்ராக்ஷத்தை தரித்திருப்பவரே, विभो-வியாபகரே, साम्ब-ஸாம்பனே ... शरणम्-அடைக்கலம்.

ருத்ராக்ஷங்களை தரித்துக்கொண்டு சந்திரனை சிரஸில் அணிந்து விருஷப வாஹனத்தில் அமர்ந்துள்ள உம் ஸ்வருபத்தை தியானிக்கிறேன். (8)

ऌवर्णद्वन्द्वमवृन्तसुकुसुममिवाङ्घ्रौ तवार्पयामि विभो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ९ ॥

ளுவர்ணத்வந்த்வமவ்ருந்த குஸுமமி
வாங்க்ரௌ தவார்பயாமி விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

विभो-வியாபகரே, ऌवर्णद्वन्द्वमिव-இரண்டு 'ளு' வர்ணங்களைப் போன்ற, अवृन्तसुकुसुमम्-காம்பில்லாத நல்ல மலரை तव-உம்முடைய, अंघ्रौ-பாதத்தில், अर्पयामि-அர்ப்பணம் செய்கிறேன். साम्ब-ஸாம்பனே .... शरणम्-அடைக்கலம்.

ளு வர்ணஜோடிபோன்ற காம்பற்ற சிறந்தபூவை உம்து திருவடியில் ஸமர்ப்பிக்கிறேன். (9)

एकं सदिति श्रुत्या त्वमेव सदसीत्युपास्महे मृड भो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १० ॥

ஏகம் ஸதிதி ச்ருத்யா த்வமேவ
ஸதஸீத்யுபாஸ்மஹே ம்ருட போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

भो मृड-ஹே ஸுகரூபியே, एकं सत् इति—'एकं सद्विप्रा बहुधा वदन्ति' என்ற श्रुत्या-ச்ருதியினால், त्वमेव-நீர் தான் सत्-எப்பொழுதும் எங்கும் எல்லாமாகவும், असि-இருக்கிறீர் इति-என்று, उपास्महे-தியானிக்கிறோம். साम्ब-ஸாம்பனே, शरणम्-அடைக்கலம்.

'एकं सत् विप्रा बहुधा वदन्ति' என்ற சுருதியானது 'ஒரே தத்வத்தைத்தான் பலவாகப் பேசுகிறார்கள்' என்று கூறுகிறது. 'ஸத்' என்ற பதத்திற்கு எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் எல்லாப்பொருளாகவும் இருக்கிறது என்று பொருள். அந்த 'ஸத்' என்று கூறப்படும் தத்வம் நீர்தான் என்று தியானிக்கிறோம். நீரே ஆநந்தரூபி. (10)

**ऐक्यं निजभक्तेभ्यो वितरसि विश्वंभरोऽत्र साक्षी भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ११ ॥**

ஐக்யம் நிஜபக்தேப்யோ விதரஸி
விச்வம்பரோऽத்ர ஸாக்ஷீ போ ।
ஸாம்ப ஸதாசிவ சம்போ சங்கர
சரணம் மே தவ சரணயுகம் ॥

**भो**-ஹே ஈசா, **निजभक्तेभ्यः**-தன் பக்தர்களுக்கு, **ऐक्यं**-(தன்னுடன்) ஒன்றாக ஆவதை, **वितरसि**-கொடுக்கிறீர். **अत्र**-இந்த விஷயத்தில், **विश्वंभरः**-உலகையெல்லாம் தன்னிடம் தரிக்கிற விஷ்ணு, **साक्षी**-ஸாக்ஷியாக ஆவார். **साम्ब**-ஸாம்பனே ... **शरणम्**-அடைக்கலம்.

தன்னை பஜிப்பவர்களுக்குத் தன்னுடன் ஐக்யத்தையே பகவான் கொடுத்துவிடுகிறார். இது விஷயத்தில் உலகையே தம் குக்ஷியில் தாங்கும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவையே ஸாக்ஷியாகப் பார்க்கலாம். விஷ்ணு சிவனுடன் ஐக்யமாகி சங்கரநாராயணர் என்ற ஒரே உருவமாகக் காக்ஷியளிக்கிறார். ஆதலால் சிவனை பஜித்தால் எதையும் பெறலாம். (11)

**ओमिति तव निर्देष्ट्री मायाऽस्माकं मृडोपकर्त्री भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १२ ॥**

ஓமிதி தவ நிர்தேஷ்ட்ரீ மாயா-
ऽஸ்மாகம் ம்ருடோபகர்த்ரீ போ ।
ஸாம்ப ஸதாசிவ சம்போ சங்கர
சரணம் மே தவ சரணயுகம் ॥

भो मृड-ஸுகரூபியான ஹே ஈசா, ओमिति-ஓம் என்று तव-உம்மை, निर्दिष्टी - சுட்டிக்காட்டுகிற, माया - மாயை, अस्माकं-எங்களுக்கு, उपकर्त्री-உபகாரம் செய்கிறதாக இருக்கிறது. साम्ब-ஸாம்பனே .... शरणम् - அடைக்கலம்.

பகவானுக்கு நாமாவோ ரூபமோ ஒன்றும் கிடையாது. ஆதலால் அந்தப் பரதத்வத்தை வாக்கால் சொல்லவோ மனதால் நினைக்கவோ ஸாத்யமில்லை, உத்தமாதிகாரிகள் தான் இந்தப் பரதத்வத்தை அறிந்துகொள்ளமுடியும் நம்மால் முடியாது. நம்மையும் கரையேற்றத்தான் அந்த பரதத்வம் மாயையால் அநேக ரூபங்களையும் அநேகம் நாமாக்களையும் தாங்குகிறது. எல்லா நாமாக்களிலும் 'ஓம்' என்ற பிரணவமே மிகச் சிறந்தது. அந்தரங்கமானது பிரணவத்தை ஜபித்து தியானம் செய்தால் பரதத்வத்தை அறிந்துகொள்ளலாம். எல்லாவற்றையும் பரித்யாகம் செய்து ஞானமார்க்கத்தில் செல்கிற பரிவ்ராஜகர்கள் இதையே ஜபித்து த்யானம் செய்கிறார்கள். நாமரூபமற்ற பரதத்வத்திற்கு ஓம் என்ற பெயரை நமக்காக ஏற்படுத்திக்கொடுத்த மாயையைப்போல் உதவி செய்பவர்கள் நமக்கு ஒருவருமில்லை.

**औदास्यं स्फुटयति विषयेषु दिगम्बरता च तवैव विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १३ ॥**

ஔதாஸ்யம் ஸ்புடயதி விஷயேஷு தி-
கம்பரதா ச தவைவ விபோ ।
ஸாம்ப ஸதாசிவ சம்போ சங்கர
சரணம் மே தவ சரணயுகம் ॥

विभो-வியாபகரே, दिगम्बरता चैव-திசைகளையே ஆடையாகக் கொண்டிருக்கும் தன்மையே (ஆடையில்லாமலிருப்பதே), विषयेषु-விஷயங்களில், तव-உமக்கு, औदास्यं-பற்றின்மையை, स्फुटयति-தெளிவாகக் காட்டுகிறது. साम्ब-ஸாம்பனே ... शरणम् - அடைக்கலம்.

உலகம் எல்லாவற்றிற்கும் பிரபுவாக இருந்தாலும் அவருக்கு ஒன்றிலும் பற்றுக்கிடையாது. தனக்கென ஒன்றையும் வைத்துக் கொள்ளமாட்டார். எல்லாவற்றையும் பக்தர்களுக்கே அளித்து

விடுவார். பகவானுக்கு திசைகளே ஆடை. அதாவது ஆடையே இல்லாமல் நிர்வாணமாகக் காக்ஷியளிக்கிறார். பக்தர்கள் கேட்பதையெல்லாம் வாரி வழங்கும் ஸர்வலோகேச்வரன் ஆடையற்றிருப்பதே ஒன்றிலும் அவருக்குப் பற்று இல்லை என்பதை நன்கு எடுத்துக்காட்டுகிறது. "தன் ஆடையான திசைகளைக்கூட திக்பாலகர்களுக்கு கொடுத்துவிட்டார். ஐச்வர்யத்தை விஷ்ணுவுக்கும், தன் பேச்சான வேதத்தை ப்ரஹ்மாவுக்கும் கொடுத்துவிட்டார். ஒன்றுமில்லாத கேவல நிலையில் இருக்கிறார்" என்று ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் கூறுகிறார். (13)

**अन्तःकरणविशुद्धिं भक्तिं च त्वयि सतीं प्रदेहि विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १४ ॥**

அந்தக்கரண விஶுத்திம் பக்திம்
ச த்வயி ஸதீம் ப்ரதேஹி விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரண யுகம் ॥

**विभो**–விபுவே, **अन्तःकरणविशुद्धिं**–மனத்தூய்மையையும், **त्वयि**–உம்மிடத்தில், **सतीं**–சிறந்த, **भक्तिं च**–பக்தியையும், **प्रदेहि** - (எனக்கு) கொடுக்கவேணும். **साम्ब**–ஸாம்பனே, **शरणं**–அடைக்கலம்.

என் மனத்திலுள்ள தோஷங்களையெல்லாம் போக்கித் தூய்மையாக்கி சிறந்த பக்தியை எனக்கு அருளவேண்டும். உலக ஆசைகளும், காமக்ரோதாதி தோஷங்களும் உள்ளவரை பகவானிடத்தில் ப்ரீதி வராது. உலக போகங்களில் ஆசை அடியோடு நீங்கி வைராக்யம் ஏற்பட்டால்தான் பகவத்பக்தி ஏற்படும். அதனால்தான் சித்த சுத்தியை முதலில் வேண்டுகிறார். பக்தியும் பலவிதம், உலகவிஷயங்களைப் பெறுவதற்காகப் பக்தி பண்ணுவது சிறந்ததல்ல. நிஷ்காம பக்தியே சிலாக்யமானது. அதனால் ஸச்சிதானந்த ஸ்வரூபமான பகவானையே அடையலாம். அதனால் தான் சிறந்த பக்தியை வேண்டுகிறார். (14)

**अस्तोपाधिः समस्तव्यस्तै रूपैर्जगन्मयोऽसि विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १५ ॥**

அஸ்தோபாதி: ஸமஸ்த வ்யஸ்தை:
ரூபைர் ஜகன்மயோzஸி விபோ |
|| ஸாம்ப ஸதாசிவ சம்போ சங்கர
சரணம் மே தவ சரணயுகம் ||

**विभो**–விபுவே, (உண்மையில்) **अस्तोपाधिः**–உபாதிகளற்றநீர், **समस्तव्यस्तैः**–ஸமஷ்டியாயும் (சேர்ந்தும்) வ்யஷ்டியாயும் (தனித்தனியாகவும்) உள்ள, **रूपैः**–உருவங்களால், **जगन्मयः**–பிரபஞ்ச ஸ்வரூபியாக, **असि**–இருக்கிறீர். **साम्ब**–ஸாம்பனே ... **शरणं**–அடைக்கலம்.

பகவானுக்கு உண்மையில் ஒரு உபாதியும் கிடையாது. ஆனாலும் மாயா ஸம்பந்தத்தால் ஸமஷ்டியாயும் வ்யஷ்டியாயுமுள்ள எல்லா ரூபங்களையும் தரிக்கிறார். ஆதலால் பிரபஞ்சம் முழுவதும் அவருடைய ஸ்வரூபம்தான். இந்த மாயையும் வாஸ்தவமல்லவாதலால் உண்மையில் அவருக்கு ரூபம் ஒன்றுமில்லை. (15)

करुणावरुणालय मयि दास उदासस्तवोचितो न हि भो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १६ ॥

கருணா வருணாலய மயி தாஸ உ–
தாஸஸ்தவோசிதோ நஹி போ |
ஸாம்ப ஸதாசிவ சம்போ சங்கர
சரணம் மே தவ சரணயுகம் ||

**भो करुणावरुणालय**–கருணா ஸமுத்திரமான ஹே ஈசா, **तव**–உமக்கு, **दासे**–தாஸனான, **मयि**–என்னிடம், **उदासः**–ஔதாஸீன்யம், **न उचितो हि**–உசிதமில்லையல்லவா! **साम्ब**–ஸாம்பனே ... **शरणं**–அடைக்கலம்.

ப்ரபோ, நான் உம்முடைய கிங்கரன். எனக்கு யஜமானர் நீங்கள்தான். நீங்களோ கருணைக்கடல். துன்பப்படும் என்னை கவனியாமலிருப்பது தங்களுக்கு உசிதமா? கருணையுள்ளம் படைத்த ஒரு யஜமானன் தன் வேலைக்காரன் துன்பப்படுவதைப் பார்த்துச் சும்மா இருப்பானா? (16)

**खलसहवासं विघटय घटय सतामेव सङ्गमनिशं भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १७ ॥**

கலஸஹவாஸம் விகடய கடய ஸ
தாமேவ ஸங்கமநிஶம் போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**भोः**—ஹே ஈசா, **खलसहवासं**—துஷ்டர்களுடன் சேர்க்கையை, **विघटय**-நீக்கிவிடு **अनिशं**—எப்போதும், **सतां सङ्गमेव** நல்லோர்களின்சேர்க்கையையே, **घटय**—சேர்த்துவை. **साम्ब**—ஸாம்பனே ... **शरणं**—அடைக்கலம்.

ஈசனே, துஷ்டர்களின் பழக்கத்தை நீக்கவேண்டும். ஸாதுக்களின் ஸங்கத்தையே அருளவேண்டும். எவ்வளவு நல்லவனாக இருந்தாலும் துஷ்டர்களுடன் சேர்ந்து வஸிப்பது, அவர்களுடன் பேசுவது, பழகுவது இவற்றைக் கைக்கொண்டால் அவர்களிடமுள்ள தோஷங்கள்தான் இவனிடமும் வந்துசேரும். நல்லோர்களுடன் சேர்ந்து பழகினால் அவர்களின் நற்குணங்கள் இவனிடமும் நிலைத்து நிற்கும். (17)

**गरलं जगदुपकृतये गिलितं भवता समोऽस्ति कोऽत्र विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १८ ॥**

கரளம் ஜகதுபக்ருதயே கிலிதம்
பவதா ஸமோ஽ஸ்தி கோ஽த்ர விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**जगदुपकृतये**—உலகிற்கு உதவிசெய்வதற்காக, **गरलं**—விஷமானது, **गिलितं**—விழுங்கப்பட்டது, **अत्र**—இங்கு, **भवता समः**—உமக்கு ஸமமானவர், **कोऽस्ति**—யார் இருக்கிறார்? **विभो**—விபுவே, **साम्ब**—ஸாம்பனே ... **शरणं**—அடைக்கலம்.

உலகில் தனக்குத் தீங்கு நேராத வரையில்தான் பிறருக்கு உதவி செய்வார்கள். பிறருக்கு உதவி செய்வதன் மூலம் தன் உயிருக்கே ஆபத்து ஏற்படக்கூடுமானால் அந்தக்காரியத்தில்

ஒருவனும் இரங்கமாட்டான். பாற்கடலிலிருந்து முதலில் கிளம்பிய விஷம் உலகத்தையே அழிக்கும்பொழுது உலகத்தோரைக் காப்பாற்றுவதற்காக அந்தக்கொடிய ஹாலாஹல விஷத்தை விழுங்கினீர்களே! உங்களைப்போல் ப்ரோபகாரி வேறு யார் இருக்கிறார்? (18)

**घनसारगौरगात्र प्रचुरजटाजूटबद्धगङ्ग विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ १९ ॥**

கனஸார கௌரகாத்ர ப்ரசுரஜ-
டாஜூட பத்த கங்க விபோ I
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் II

**घनसार**-பச்சைக்கற்பூரம்போல், **गौर**-வெண்மையான, **गात्र**-சரீரமுள்ளவரே, **प्रचुर**-பெரிய, **जटाजूट**-ஜடாபந்தத்தில், **बद्धगङ्ग**-கட்டப்பட்ட கங்கையை உடையவரே, **विभो**-விபுவே **साम्ब**-ஸாம்பனே ... **शरणं**-அடைக்கலம்.

பச்சைக் கற்பூரம் போல வெண்மையான உடலுடன் கூடியதும் பெரிய ஜடாபாரத்தில் கட்டுப்பட்ட கங்கையை உடையதுமான பகவத்ஸ்வரூபத்தை தியானிக்கிறார். (19)

**ज्ञप्तिः सर्वशरीरेष्वखण्डिता या विभाति सा त्वं भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २० ॥**

ஞப்தி: ஸர்வ ஶரீரேஷ்வகண்டி
தா யா விபாதி ஸா த்வம் போ I
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் II

**भो**-ஹே ஈசனே, **सर्वशरीरेषु**-எல்லா சரீரங்களிலும், **अखण्डिता**-பிரிக்கமுடியாத (ஒன்றான), **या**-எந்த, **ज्ञप्तिः**-அறிவு (சைதன்யம்), **विभाति**-விளங்குகிறதோ, **सा**-அது, **त्वं**-நீர்தான். **साम्ब**-ஸாம்பனே ... **शरणं**-அடைக்கலம்.

சரீரங்கள் வெவ்வேருக இருந்தாலும் பிரிக்கமுடியாத ஞானஸ்வரூபமான ஒரே சைதன்யம்தான் எல்லா சரீரங்களிலும் விளங்குகிறது. ஒரே தத்வம் உபாதி பேதத்தால் பலவாகத் தோன்றுகிறது. இந்த அகண்டமான ஆத்ம சைதன்யம் நீர்தான்.

**चपलं मम हृदयकपिं विषयद्रुचरं दृढं बधान विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २१ ॥**

சபலம் மம ஹ்ருதயகபிம் விஷய
த்ருசரம் த்ருடம் பதான விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**विभो**—விபுவே, **विषयद्रुचरं**—விஷயங்களாகிற மரங்களில் சஞ்சரிக்கும், **चपलं**—சஞ்சலமான, **मम**—என்னுடைய, **हृदय-कपिं**—மனக்குரங்கை, **दृढं**—உறுதியாக, **बधान**—கட்டிவிடும், **साम्ब**—ஸாம்பனே ... **शरणं**—அடைக்கலம்.

குரங்கு சஞ்சல ஸ்வபாவமுள்ளது. ஸ்திர புத்தி கிடையாது. ஒரு இடத்தில் நிலைத்து நிற்காது. மரத்திற்கு மரம் தாவிக் கொண்டே போகும். இம்மாதிரி மனமும் இருக்கிறது. எப்பொழுதும் விஷயங்களை நோக்கிச் சென்றுகொண்டே இருக்கிறது. அதாவது ஒரு பொருளில் ஆசைகொள்கிறது. அது கிடைத்தால் அத்துடன் திருப்தியடையாமல் வேருெரு பொருளில் ஆசை கொள்கிறது- அது கிடைக்காவிட்டால் துன்பப்படுகிறது. இவ்விதம் குரங்குபோல் விஷயங்களிலேயே சென்று கொண்டிருக்கும் என் மனதை என்னல் அடக்கமுடியவில்லை. கயிற்றினல் கட்டிவிட்டால் குரங்கு ஒரே இடத்தில் நின்றுவிடும். தன் இஷ்டப்படி மரத்திற்கு மரம் தாவிச்செல்ல முடியாது. இது போல பக்தி என்ற கயிருல் என் மனதையும் தாங்கள் கட்ட வேண்டும். தங்களிடத்தில் மாருத நிலையான ப்ரீதி மனதில் உண்டாகும்படி தாங்கள் அருள் செய்துவிட்டால் பிறகு ஒரு பொருளிலும் ஆசை கொள்ளாது. இதே கருத்தை '**हृदय-कपिमत्यन्तचपलं दृढं भक्त्या बद्ध्वा शिव भवदधीनं कुरु विभो**' என்று சிவானந்தலஹரியில் (சு. 20) கூறுகிருர். (21)

**छाया स्थाणोरपि तव तापं नमतां हरत्यहो शिव भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २२ ॥**

சாயா ஸ்த்தாணோரபி தவ தாபம்
நமதாம் ஹரத்யஹோ சிவ போ ।
ஸாம்ப ஸதாமிவ மம்போ சங்கர
மரணம் மே தவ சரணயுகம் ॥

**भो शिव**–ஹே சிவனே, **स्थाणोरपि**–மரத்தூணாக இருந்த போதிலும், **तव**–உம்முடைய, **छाया**–நிழல், **नमतां**–வணங்குபவர்களுடைய, **तापं**–தாபத்தை, **हरति**–போக்குகிறது, **अहो**–ஆச்சர்யம்! **साम्ब**–ஸாம்பனே ... **शरणं**–அடைக்கலம்.

ஸ்தாணு என்ற பதம் மரத்திலிருந்து வெட்டப்பட்ட கட்டை, தூண் இவைகளைக்குறிக்கும். கட்டை அசைவற்றிருப்பதுபோல் த்ரிபுரர்களை எதிர்பார்த்து தான் ஸஜ்ஜராக அசைவற்று இருந்ததாலும், சலனம் முதலான எவ்வித விகாரமும் இல்லாமல் நிலையாக இருப்பதாலும் பரம சிவனுக்கும் ஸ்தாணு என்று பெயர். '**वृक्ष इव स्तब्धो दिवि तिष्ठत्येकः**' என்று ச்ருதி கூறுகிறது. மரக்கட்டைக்கு தாபத்தைப்போக்குகின்ற நிழல் கிடையாது. பகவானுடைய நிழலை அண்டியவர்களுக்கு அதாவது பாதாரவிந்தத்தை அண்டியவர்களுக்கு எல்லாவித தாபங்களும் விலகிவிடும். ஸ்தாணுவாக இருந்தாலும் தன் நிழலால் தாபத்தைப் போக்கச்செய்வது ஆச்சரியமில்லையா! ஆதலால் உம் திருவடி நிழலையே சரணமடைகிறேன். (22)

**जय कैलासनिवास प्रमथगणाधीश भूसुरार्चित भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २३ ॥**

ஜய கைலாஸநிவாஸ ப்ரமதக
ணாதீம பூஸுரார்சித போ ।
ஸாம்ப ஸதாமிவ மம்போ சங்கர
மரணம் மே தவ சரணயுகம் ॥

**कैलासनिवास**–கைலாஸத்தில் வாஸம் செய்பவரே, **प्रमथगणाधीश**–ப்ரமத கணங்களின் தலைவனே, **भूसुरार्चित**–

பிராஹ்மணர்களால் பூஜிக்கப்பட்டவரே, **जय**-சிறப்புடன் விளங்குவீராக. **भो साम्ब**-ஹே ஸாம்பனே ... **शरणं**-அடைக்கலம்.

*மஹா கைலாஸத்தில் வாஸம் செய்யும் ப்ரமதகண நாயகரே! உம்மைத்தான் பிராஹ்மணர்கள் பூஜிக்கின்றனர். நீர் சிறப்புடன் விளங்குவீராக.* (23)

**झणुतकझङ्किणुझणुतत्किटतकशब्दैर्नटसि महानट भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २४ ॥**

*ஜணுதக ஜங்கிணு ஜணுதத் கிடதக*
*சப்தைர் நடஸி மஹாநட போ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரண யுகம் ॥*

**भो महानट**-நாட்யம் ஆடுபவர்களில் பெரியவரே, **झणुतकझंकिणुझणुतत्किटतकशब्दैः**-ஜணு தக ஜங் கிணு ஜணு தத் கிட தக என்ற சப்தங்களுடன், **नटसि**-நர்த்தனம்புரிகிறீர். **साम्ब**-ஸாம்பனே ... **शरणं**-அடைக்கலம்.

*நாட்யகலையை உலகிற்கு உபதேசித்தவர் நடராஜர். தாமே நாட்யமாடுகிறார், எல்லா நடர்களுக்கும் மேலானவர். அதனால் அவர் மஹாநடர். அவர் நடனம் செய்யும்பொழுது நாட்யத்திற்கு இசைவாகத் தாளம் போடுகிறார்கள். அதிலிருந்து 'ஜணு தக ஜம் கிணு ஜணு தத்கிட தக' என்ற சப்தங்கள் ஒலிக்கின்றன.* (24)

**ज्ञानं विक्षेपावृतिरहितं कुरु मे गुरुस्त्वमेव विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २५ ॥**

*ஞானம் விக்ஷேபாவ்ருதி ரஹிதம்*
*குரு மே குருஸ்த்வமேவ விபோ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரணயுகம் ॥*

**विभो**-விபுவே, **गुरुः**-குருவான, **त्वमेव**-நீரே, **मे**-எனக்கு, **विक्षेपावृतिरहितं**-விக்ஷேபம், ஆவரணம் இரண்டுமற்ற, **ज्ञानं**-

ஞானத்தை, कुरु-செய்யும், साम्ब-ஸாம்பனே ... शरणं-அடைக்கலம்.

அவித்யைக்கு ஆவரணம் விக்ஷேபம் என்ற இரண்டு சக்திகள் உண்டு. கயிறு பாம்பாகத்தோன்றுவதற்கு அக்ஞானம் தான் காரணம். இந்த அக்ஞானம் முதலில் கயிறை மறைத்துவிடுகிறது. இதுதான் ஆவரண சக்தி என்பது இதனால் அங்கு கயிறு இருந்தும் நம் கண்ணால் பார்த்தும்கூட 'இது கயிறு' என்பது நமக்குத் தெரிவதில்லை. இதோடு நின்றால் தேவலை. ஆனால் அந்தக் கயிறைப் பாம்பாகப் பார்க்கிறோம். இதுதான் விக்ஷேப சக்தி ஒரு பொருள் வேறொரு பொருளாகத் தெரிவது தான் விக்ஷேபம். இதுபோல உலகில் உள்ளது ஸச்சிதானந்தமான பரதத்வம் ஒன்று தான். அது நமக்குத்தெரிவதில்லை. இது ஆவரண சக்தியின் கார்யம். இல்லாததான பிரபஞ்சம் தெரிகிறது. இது விக்ஷேப சக்தியின் காரியம். இவ்விரண்டு சக்திகளும் நீங்கி அக்ஞானம் தொலைந்து ப்ரஹ்மஞானம் ஏற்படும்படி அருள்புரிய வேண்டும். விபரீதமான பிரபஞ்சத்தின் தோற்றம் ஒழிந்து உண்மையான ப்ரஹ்ம சைதன்யத்தின் ஸ்வரூபம் முழுவதும் நன்கு விளங்கவேண்டும் "இந்த ப்ரஹ்ம ஞானத்தை குருதான் உபதேசிக்க முடியும். ஆகவே குருவினிடம் செல்" என்று தாங்கள் சொல்லக்கூடாது. ஆதி குரு தாங்கள் தானே! ப்ரஹ்மாவிற்கும் ஸநகாதி யோகிகளுக்கும் உபதேசம் செய்த தங்களைக் காட்டிலும் மேலான குரு வேறு யார் இருக்கிறார்? குரு பரம்பரையிலும் தாங்கள் தானே முதல்வர். ஆகையால் ஞானம் பெறுவதற்காக ஆதிகுருவான தங்கள் திருவடிகளையே சரணமடைகிறேன். (25)

**टङ्कारस्तव धनुषो दलयति हृदयं द्विषामशनिरिव भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २६ ॥**

டங்காரஸ்தவ தனுஷோ தளயதி
ஹ்ருதயம் த்விஷாமஶனிரிவ போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

भो-ஹே ஈசனே, तव-உம்முடைய, धनुषः-வில்லின், टङ्कारः-டங்கார சப்தமானது, अशनिरिव-இடிபோல், द्विषां-

சத்ருக்களின், हृदयं–மனதை, दलयति–பிளக்கிறது. साम्ब– ஸாம்பனே ... शरणं– அடைக்கலம்.

தங்கள் கையில் பிநாகம் என்ற வில்லை எடுத்து டங்காரம் செய்தால் அதன் ஒலியே இடிபோன்று சத்ருக்களின் ஹிருதயத்தைப் பிளந்து விடுகின்றது. (26)

**ठाकृतिरिव तव माया बहिरन्तः शून्यरूपिणी खलु भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २७ ॥**

*ட்டாக்ருதிரிவ தவ மாயா பஹிர–*
*ந்த: ஶூன்யரூபிணீ கலு போ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரணயுகம் ॥*

भो–ஹே ஈசனே, तव–உம்முடைய, माया–மாயையானது ठाकृतिरिव–'ட்ட' என்ற எழுத்தின் வடிவம் (O) போல், बहिरन्तः–வெளியிலும் உள்ளேயும், शून्यरूपिणी खलु–ஒன்றுமில்லாததாக இருக்கிறதல்லவா! साम्ब-ஸாம்பனே ... शरणं–அடைக்கலம்.

'ட்ட' என்ற எழுத்தின் வடிவம் கிரந்த லிபியில் 'O' என்றவாறு காணப்படுகிறது. இது தனியாக இருந்தால் சூன்யத்தை அதாவது ஒன்றுமில்லை என்பதைக் குறிக்கும். இதுபோலத்தான் உம்முடைய மாயையும். பிரபஞ்சம் முழுவதையும் தோன்றச் செய்து உலகில் எல்லா வியவஹாரங்களையும் நடக்கச்செய்வது உம்முடைய மாயா சக்திதான். ஆனால் மாயையின் ஸ்வரூபத்தை நன்கு விசாரிக்க ஆரம்பித்தோமானால் அது மறைந்துவிடுகிறது. உள்ளேயோ வெளியிலேயோ ஒன்றுமில்லை என்பதாக நன்கு தெரியவருகிறது. या मा सा माया – எது இல்லையோ அது மாயை என்றும் கூறுவதுண்டு. (27)

**डम्बरमम्बुरुहामपि दलयत्यनघं त्वदंघ्रियुगलं भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ २८ ॥**

*டம்பரமம்புருஹாமபி தளய*
*த்யநகம் த்வதங்க்ரி யுகளம் போ ।*

ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ||

**भो**-ஹே ஈசனே, **अनघं**-தோஷமில்லாத, **त्वदंघ्रियुगलं**-உமது இரு திருவடிகள், **अम्बुरुहां**-தாமரைப்பூக்களின், **डम्बरमपि**-அழகையும், **दलयति**-பழிக்கிறது. **साम्ब**-ஸாம்பனே ... **शरणं**-அடைக்கலம்.

தங்கள் திருவடிகள் தாமரைபோல் இருக்கின்றன என்று கவிகள் வர்ணிப்பது உண்டு. இந்தத் திருவடிகளின் எதிரில் தாமரை தன் சோபையை இழந்துவிடுவதால் தாமரைப்பூவைக் காட்டிலும் தங்கள் திருவடிகள் மிக்க அழகுவாய்ந்தவை என்றுதான் கூறவேண்டும். (28)

**ढक्काक्षसूत्रशूलद्रुहिणकरोटीसमुल्लसत्कर भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ।। २९ ।।**

டக்காக்ஷ ஸூத்ர ஶூல த்ருஹிணக-
ரோடீ ஸமுல்லஸத்கர போ |
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ||

**ढक्काक्षसूत्रशूलद्रुहिणकरोटी**-உடுக்கை, ஜபமாலை, சூலம், பிரஹ்மாவின் மண்டையோடு இவைகளுடன், **समुल्लसत्कर**-விளங்கும் கைகளை உடைய, **भो साम्ब**-ஹே சாம்பனே ... **शरणं**-அடைக்கலம்.

தங்கள் திருக்கைகளில் உடுக்கை, ஜபமாலை, சூலம், பிரம்ம கபாலம் இவைகள் விளங்குகின்றன. இந்த உடுக்கையிலிருந்து தான் வ்யாகரண சாஸ்திரத்திற்கு மூலமான **अइउण्** முதலான ஸூத்ரங்கள் வெளியாகியுள்ளன. ப்ரஹ்மாவின் சிரஸ்ஸைக் கொய்து அதன் கபாலத்தைக் கையில் தரித்திருக்கிறீர்கள். இதிலிருந்து எத்தனையோ ப்ரஹ்மாக்களைத் தோன்றவும் மறையவும் செய்துகொண்டிருக்கிறீர்கள் என்பது தெரிய வருகிறது. (29)

**णाकारगर्भिणी चेच्छुभदा ते शरगतिर्नृणामिह भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३० ॥**

ணாகாரகர்ப்பிணீ சேத் ஶுபதா
தே ஶரகதிர் ந்ருணாமிஹ போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**ते**-உம்முடைய, **शरगतिः**-அம்பான விஷ்ணுவின் கதியானது, **णाकारगर्भिणी**-'ண' என்ற எழுத்தை நடுவில் உடையதாக, **चेत्**-இருக்குமானால் **नृणां**-மனிதர்களுக்கு, **इह**-இங்கு, **शुभदा**-நன்மையை கொடுக்கிறதாக ஆகும். **भो साम्ब**-ஹே சாம்பனே ... **शरणं**-அடைக்கலம்.

த்ரிபுர ஸம்ஹார காலத்தில் விஷ்ணு பரமேசுவரனுக்கு அம்பாக வந்து வில்லில் அமர்ந்துகொண்டார். அம்பு எங்கு செல்கிறதோ அங்கு அது துன்பத்தைத்தான் கொடுக்கும். ஆனால் உம்முடைய அம்பு அப்படியல்ல, ணகாரத்தை நடுவில் உடையது அஷ்டாக்ஷர மந்திரம். இம்மந்திரத்தை ஜபித்து பகவானை உபாஸித்தோமானால் பகவான் நமக்கு நன்மையையே தருகிறார். உம்முடைய அம்பே அம்புக்குள்ள ஸ்வபாவத்தை விட்டுவிட்டு சுபத்தைக் கொடுக்குமானால் உம்மைப்பற்றிச் சொல்லவும்வேண்டுமா? (30)

**तव मन्त्रतिसंजपतः सद्यस्तरति नरो हि भवाब्धिं भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३१ ॥**

தவ மன்வதிஸஞ்ஜபத: ஸத்யஸ்-
தரதி நரோஹி பவாப்திம் போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**तव**-உம்முடைய, **मन्त्रतिसंजपतः**-மந்திரத்தை (பஞ்சாக்ஷரத்தை) அதிகமாக ஜபம் செய்வதால், **नरः**-மனிதன், **भवाब्धिं**-பிறவிக்கடலை, **सद्यः**-உடனேயே, **तरति हि**-தாண்டுகிறானல்லவா! **भो साम्ब**-ஹே சாம்பனே... **शरणं**-சரணம்.

தங்கள் மந்திரமான பஞ்சாக்ஷரத்தை ஜபம் செய்கிறவன் பிறவிக்கடலைத் தாண்டிவிடுகிறான். (31)

**थूत्कारस्तस्य मुखे भूयात्ते नाम नास्ति यस्य विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३२ ॥**

தூத்காரஸ்தஸ்ய முகே பூயாத்
தே நாம நாஸ்தி யஸ்ய விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரண யுகம் ॥

**विभो**–ஈசனே, **यस्य**–எவனுடைய, **मुखे**–முகத்தில், **ते**–உம்முடைய, **नाम**–நாமாவானது, **नास्ति**–இல்லையோ, **तस्य मुखे**–அவன் முகத்தில், **थूत्कारः**–' தூ ' என்ற இகழ்ச்சி, **भूयात्**–ஏற்படட்டும், **साम्ब**–ஸாம்பனே... **शरणं**–அடைக்கலம்.

தன் கடமையைச் செய்யாதவனை ' தூ ' என்று இகழ்வது உலக வழக்கம். உம்முடைய நாமாவை எவன் தன் வாயால் சொல்வதில்லையோ அவன் வாயில் காறி உமிழவேண்டியதுதான். அவன் இகழ்ச்சிக்கு இலக்காக ஆகிவிடுகிறான். (32)

**दयनीयश्च दयालुः कोऽस्ति मदन्यस्त्वदन्य इह वद भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३३ ॥**

தயனீயச்ச தயாளு: கோ஽ஸ்தி ம-
தன்யஸ்த்வதன்ய இஹ வத போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**मदन्यः**–என்னைக்காட்டிலும் வேறு, **दयनीयः**–தயவு காட்டத்தக்கவனும், **त्वदन्यः**–உம்மைக்காட்டிலும் வேறு, **दयालुश्च**–இரக்கமுள்ளவனும், **इह**–இங்கு, **कोऽस्ति**–எவன் இருக்கிறான்? **वद**–சொல்லும், **भो साम्ब**–ஹே ஸாம்பனே... **शरणं**–சரணம்.

உலகில் உம்மைக் காட்டிலும் கருணைமூர்த்தி வேறு ஒருவரும் இல்லை. தயவுக்குப் பாத்திரமாகக்கூடியவன் என்னைக் காட்டிலும் வேறு ஒருவனும் இல்லை. துன்பப்படுபவனிடம்தான்

தயவுகாட்டவேண்டும். என்னைப்போல் துன்பப்படுபவர்கள் வேறு ஒருவருமில்லாததால் நானே உம் தயவைப் பெறுவதற்கு மிகத் தகுதிவாய்ந்தவன். கருணையுள்ளம் படைத்தவர்களில் உம்மைவிட மேலானவர் ஒருவருமில்லாததால் மிகக் குற்றவாளியான நான் உம்மையே சரணமடைகிறேன். நீர்தான் மன்னித்துக் காப்பாற்றவேண்டும். (33)

**धर्मस्थापनदक्ष त्र्यक्ष गुरो दक्षयज्ञशिक्षक भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३४ ॥**

தர்மஸ்த்தாபன தக்ஷ த்ர்யக்ஷ கு-
ரோ தக்ஷயஜ்ஞ ஶிக்ஷக போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**धर्मस्थापनदक्ष**-தர்மத்தை நிலைநிறுத்துவதில் ஸாமர்த்தியமுள்ளவரே, **त्र्यक्ष**-முக்கண்ணனே, **गुरो**-குருவே, **दक्षयज्ञशिक्षक**-தக்ஷனின் யாகத்தை அழித்தவரே, **भो साम्ब**-ஹே ஸாம்பனே... **शरणं**-சரணம்.

தர்மம் அழிந்துபோகாமல் காப்பாற்றி நிலைநிறுத்துவதில் மிகவும் சக்திவாய்ந்தவரே, முக்கண்ணனே, அக்ஞானத்தைப் போக்கும் குருவே, தக்ஷனின் யாகத்தை அழித்தவரே, உம் திருவடிகளே கதி. (34)

**ननु ताडितोऽसि धनुषा लुब्धधिया त्वं पुरा नरेण विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३५ ॥**

நநு தாடிதோ஽ஸி தநுஷா லுப்ததி-
யா த்வம் புரா நரேண விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**विभो**-விபுவே, **पुरा**-முன்ஒரு சமயம், **नरेण**-மனிதனால், **धनुषा**-வில்லால், **लुब्धधिया**-வேடன் என்ற எண்ணத்தால், **त्वं**-நீர், **ननु ताडितोऽसि**-அடிக்கப்பட்டிருக்கிறீர் அல்லவா! **साम्ब**-ஸாம்பனே... **शरणं**-அடைக்கலம்.

முன் ஒரு சமயம் ஒரு மனிதன் உம்மை வேடன் என்று எண்ணி வில்லால் அடித்தான். அர்ஜுனன் பாசுபதாஸ்திரம் பெறத் தவம் செய்யும்பொழுது துர்யோதனனால் ஏவப்பட்ட ஓர் அஸுரன் பன்றி உருக்கொண்டு அர்ஜுனனிடம் வர அவன் அப் பன்றியின்மேல் அம்பை எய்தான். அதே சமயம் அர்ஜுனனுக்கு அருள்செய்ய வேடுவ வேஷம் பூண்டு அங்கு வந்த பரமசிவனும் அப்பன்றிமேல் ஓர் அம்பை எய்தார். ஒரே இலக்கில் இருவரும் அம்பை எய்ததால் இருவருக்கும் வாக்குவாதம் ஏற்பட்டு சண்டை நடந்தது. மஹேசன் அர்ஜுனனின் வில்லின் நாண் கயிற்றை அறுத்துவிட்டார். உடன் அந்த வில்லால் மஹேசனின் மண்டையில் அர்ஜுனன் அடித்தான். அந்தப் பக்தனை அர்ஜுனனின் அடியை ஸந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டு சிறிதும் கோபம் கொள்ளாமல் அவனுக்குப் பாசுபதாஸ்திரம் கொடுத்து அனுக்ரஹமும் செய்தீர்கள். தங்களைப்போன்ற பக்த பராதீன தேவதை வேறு யார் இருக்கிறார்? ஆகையால் உம்மையே சரணமடைகிறேன். (35)

**परिमातुं तव मूर्तिं नालमजस्तत्परात्परोऽसि विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३६ ॥**

பரிமாதும் தவ மூர்த்திம் நாலம-
ஜஸ்தத்பராத்பரோஸி விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**विभो**–விபுவே, **तव**–உம்முடைய, **मूर्तिं**–மூர்த்தியை **परिमातुं**–அளப்பதற்கு, **अजः**–பிரஹ்மாவும் (விஷ்ணுவும்) **नालं**–ஸமர்த்தரல்ல. **तत्**–ஆகையால் (நீர்), **परात् परोऽसि**–உயர்ந்தவரைக்காட்டிலும் உயர்ந்தவராக இருக்கிறீர். **साम्ब**–ஸாம்பனே... **शरणं**–சரணம்.

உம்முடைய மூர்த்தியை அளந்து நிர்ணயம் செய்வதற்கு பிறப்பில்லாத ப்ரஹ்மாவாலும் விஷ்ணுவாலும்கூட முடியவில்லை. ஒரே ஜ்யோதி ஸ்வரூபமாக லிங்கோத்பவ மூர்த்தியாக பகவான் நின்ற சமயம் அடியும் மேலும் காணமல் பிரஹ்மா ஹம்ஸ உருவத்துடன் மேலேயும் விஷ்ணு வராஹ உருவத்துடன் கீழேயும் எவ்வளவு தூரம் சென்றும் முடிவைக்காணமல் திரும்பி வந்தனர். ஆகையால் பிரஹ்மா முதலியவர்களுக்கும் தாங்கள் மேலானவர். (36)

फलमिह नृतया जनुषस्त्वत्पदसेवा सनातनेश विभो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३७ ॥

பலமிஹ ந்ருதயா ஜனுஷஸ்த்வத்பத
ஸேவா ஸனாதநேஶ விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**विभो**-விபுவே, **सनातन**-எப்பொழுதும் உள்ளவரே, **ईश**-ஈசனே, **इह**-இவ்வுலகில், **नृतया**-மனிதனாக, **जनुषः**-பிறவிக்கு, **त्वत्पदसेवा**-உமது திருவடிகளை ஸேவிப்பது, **फलं**-பயன், **साम्ब**-ஸாம்பனே... **शरणं**-சரணம்.

எப்பொழுதும் உள்ள ஈசனே, உயர்ந்த மானிடப்பிறவியைப் பெற்றதன் பயன் உம்முடைய திருவடியை ஸேவிப்பதுதான். ஒருவன் தங்கள் பாதங்களை ஸேவிக்காமல் தன் வாழ்நாளைக் கழித்தானானால் எத்தனையோ புண்யத்தின் பயனாகப்பெற்ற இந்த மானிட ஜன்மாவை அவன் வீணாக்கிவிடுகிறான். (37)

बलमारोग्यं चायुस्त्वद्गुणरुचितां चिरं प्रदेहि विभो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३८ ॥

பலமாரோக்யம் சாயுஸ் த்வத்குண
ருசிதாம் சிரம் ப்ரதேஹி விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**विभो**-விபுவே, **बलं**-வலிமையையும், **आरोग्यं**-பிணியில்லாமையையும், **आयुः**-ஆயுளையும், **त्वद्गुणरुचितां च**-உமது குணங்களில் ப்ரீதியையும், **चिरं**-வெகுகாலம், **प्रदेहि**-கொடுங்கள், **साम्ब**-ஸாம்பனே... **शरणं**-சரணம்.

உமது திருவடியை ஸதா ஸேவிப்பதற்கு அனுகூலமாக சரீரத்தில் பலத்தையும் ஆரோக்யத்தையும் ஆயுளையும் உமது குணங்களில் ருசியையும் கொடுத்து இவை சிறிதும் குறையாமல் எப்பொழுதும் இருக்குமாறும் அருள்புரியவேண்டும். (38)

भगवन्भर्ग भयापह भूतपते भूतिभूषिताङ्ग विभो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ३९ ॥

பகவன் பர்க்க பயாபஹ பூதப-
தே பூதிபூஷிதாங்க விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

भगवन्-பகவானே, भर्ग-பாபங்களை அழிப்பவரே, भयापह-பயத்தைப்போக்குபவரே, भूतपते-பூதங்களின் தலைவனே, भूतिभूषिताङ्ग-விபூதியினால் அலங்கரிக்கப்பட்ட உடலை உடையவரே, विभो-விபுவே, साम्ब-ஸாம்பனே... शरणं-அடைக்கலம்

ஐசுவர்யம், வீர்யம், புகழ், ஞானம், வைராக்யம் இவை முழுவதும் எப்பொழுதும் இருப்பதால் பகவான் என்று கூறப்படுகிறார். எல்லாப் பாபங்களையும் போக்கியருள்வதால் பர்க்கர். பயங்களைப்போக்குபவர், பூதங்களின் தலைவன், தம் உடலில் விபூதியால் அலங்கரித்துக்கொண்டிருக்கிறார். எங்கும் எல்லாமாகவும் இருப்பவர். (39)

महिमा तव न हि माति श्रुतिषु हिमानीधरात्मजाधव भो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४० ॥

மஹிமா தவ நஹி மாதி ச்ருதிஷு ஹி-
மாநீதராத்மஜாதவ போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

भो हिमानीधरात्मजाधव-ஹிமவானின் பெண்ணான பார்வதியின் நாயகரே, श्रुतिषु-வேதங்களிலும்கூட, तव-உமது, महिमा-மாஹாத்ம்யம், नहि माति- அளவுக்கு உட்படுகிறதில்லை. साम्ब-ஸாம்பனே... शरणं-அடைக்கலம்.

பனிமலையின் பெண்ணான பார்வதியின் நாயகனே, உமது திவ்ய மஹிமைகளை வேதங்களாலும் அளவிட்டுக்கூற முடியாது. அதனால்தான் வாக்குக்கு எட்டாதது என்று வேதம் கூறுகிறது.

यमनियमादिभिरङ्गैर्यमिनो हृदये भजन्ति स त्वं भो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४१ ॥

யம நியமாதிபிரங்கைர் யமினோ
ஹ்ருதயே பஜந்தி ஸ த்வம் போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

यमिनः–யோகிகள், यमनियमादिभिः अङ्गैः–யமம், நியமம் முதலான அஷ்டாங்கயோகங்களால், हृदये–மனதில், भजन्ति–(எவரை) பஜிக்கிறார்களோ, सः–அவர், त्वं–நீர்தான், भो साम्ब–ஹே ஸாம்பனே... शरणं–சரணம்.

யோகிகள் யமம். நியமம், ஆஸனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி என்னும் அஷ்டாங்க யோகங்களால் உம்மையேதான் ஹ்ருதயத்தில் பஜிக்கிறார்கள்.

रज्जावहिरिव शुक्तौ रजतमिव त्वयि जगन्ति भान्ति विभो ।
साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४२ ॥

ரஜ்ஜாவஹிரிவ ஶுக்தௌ ரஜதமி-
வ த்வயி ஜகந்தி பாந்தி விபோ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

विभो-விபோ, रज्जौ-பழுதையில், अहिरिव-பாம்புபோலவும் शुक्तौ–கிளிஞ்சலில், रजतमिव–வெள்ளிபோலவும், त्वयि–உம்மிடம், जगन्ति–உலகங்கள், भान्ति–தோன்றுகின்றன. साम्ब–ஸாம்பனே... शरणं- அடைக்கலம்.

கயிற்றில் பாம்பு போலவும், கிளிஞ்சலில் வெள்ளி போலவும் உம்மிடத்தில் உலகங்கள் தோன்றுகின்றன. உண்மைப்பொருள் கயிறும், கிளிஞ்சலும் தான். அவைகளில் தோன்றும் பாம்பும், வெள்ளியும் உண்மைப் பொருளல்ல. இவை கொஞ்சகாலம் மட்டும் தோன்றி மறையக்கூடியவை. ஆகையால் இவை ப்ராதிபாஸிகம். இது போலவே நாம் காணும் பிரபஞ்சம் எல்லாம்

ப்ரஹ்மத்தில் தோன்றி மறைந்து விடுகின்றன. அந்தப் பாரமார்த்திகமான ப்ரஹ்மமே தாங்கள், (42)

**लब्ध्वा भवत्प्रसादाच्चक्रं विधुरवति लोकमखिलं भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४३ ॥**

லப்த்வா பவத்ப்ரஸாதாத் சக்ரம்
விதுரவதி லோகமகிலம் போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**विधुः**—விஷ்ணுவானவர், **भवत्प्रसादात्**-தங்கள் அனுக்ரஹத்தால், **चक्रं**-சக்ராயுதத்தை, **लब्ध्वा**-பெற்று, **अखिलं लोकं**—எல்லா லோகத்தையும், **अवति**—காப்பாற்றுகிறார். **भो साम्ब**—ஹே ஸாம்பனே... **शरणं**—அடைக்கலம்.

தங்கள் அனுக்ரஹத்தால் சக்ராயுதத்தைப் பெற்று மஹாவிஷ்ணு எல்லா உலகங்களையும் காப்பாற்றுகிறார். ததீசி முனிவர் மேல் பிரயோகித்த சக்ராயுதம் வீணாகி நாசமுற்றதைக்கண்டு வருந்தி விஷ்ணுவானவர் மறுபடியும் சக்ராயுதம் பெறுவதற்காக தினமும் ஆயிரம் கமலங்களால் மஹாதேவனைப் பூஜித்துவர, ஒரு தினம் ஒரு மலர் குறையவே தனது நேத்ரத்தையே பகவத் பாதத்தில் ஸமர்ப்பித்தார். இது கண்டு ஸந்தோஷமடைந்த மஹாதேவன் விஷ்ணுவுக்கு ஸுதர்சன சக்ரத்தையும் கமலக் கண்ணன் என்ற திருநாமாவையும் அளித்து அனுக்ரஹித்தார் என்று ஸ்காந்தம் கூறும். (43)

**वसुधातद्धरतच्छयरथमौर्वीशर पराकृतासुर भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४४ ॥**

வஸுதா தத்தர தச்சய ரத மௌ-
ர்வீஶர பராக்ருதாஸுர போ ।
ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர
ஶரணம் மே தவ சரணயுகம் ॥

**वसुधा**-பூமி, **तद्धर**—அதைத்தாங்கும் ஆதிசேஷன், **तच्छय**—அதில் படுத்துக்கொண்டிருக்கும் விஷ்ணு இவர்களை,

**रथमौर्वीशर**-தேராகவும் நாண்கயிருகவும், அம்பாகவும் கொண்டவரே, **पराकृतासुर**-அஸுரர்களை தோல்வியுறச் செய்தவரே, **भो साम्ब**-ஹே ஸாம்பனே... **शरणं**-அடைக்கலம்.

பூமியைத் தேராகவும், பூமியைத்தாங்குகிற ஆதிசேஷனை நாண் கயிருகவும், ஆதிசேஷன் மேல் படுத்துக்கொண்டிருக்கிற மஹா விஷ்ணுவை அம்பாகவும் கொண்டு அஸுரர்களை அடக்கியவர் தாங்கள். (44)

**शर्व देव सर्वोत्तम सर्वद दुर्वृत्तगर्वहरण विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४५ ॥**

*ஶர்வ தேவ ஸர்வோத்தம ஸர்வத*
*துர்வ்ருத்த கர்வ ஹரண விபோ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரணயுகம் ॥*

**शर्व**-அழிப்பவரே, **देव**-தேவனே, **सर्वोत्तम**-எல்லோரிலும் சிறந்தவரே, **सर्वद**-எல்லாவற்றையும் கொடுப்பவரே, **दुर्वृत्तगर्वहरण**-துஷ்டர்களின் கர்வத்தைப் போக்குபவரே, **विभो**-விபுவே, **साम्ब**-ஸாம்பனே... **शरणं**-அடைக்கலம்.

பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் அழிப்பவரே, தேவனே, எல்லோரினும் உயர்ந்தவரே, எல்லாவற்றையும் கொடுப்பவரே, துஷ்டர்களின் செருக்கைப்போக்குபவரே, எங்கும் உள்ளவரே தங்கள் திருவடிகளே சரணம். (45)

**षड्रिपुषडूर्मिषड्विकारहर सन्मुख षण्मुखजनक विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४६ ॥**

*ஷட்ரிபு ஷடூர்மி ஷட்விகாரஹர*
*ஸன்முக ஷண்முக ஜநக விபோ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரணயுகம் ॥*

**षड्रिपु**-ஆறு எதிரிகள், **षडूर्मि**-ஆறு அலைகள், **षड्विकारहर**-ஆறு விகாரங்கள் இவற்றைப் போக்குபவரே, **सन्मुख**-

ஸத்தையே முகமாகக்கொண்டவரே, **षण्मुखजनक**–ஆறுமுகனின் தந்தையே, **विभो**–விபுவே, **साम्ब**–ஸாம்பனே... **शरणं**–சரணம்.

காமம், கோபம், பேராசை, ப்ராந்தி, கர்வம், பொறுமை இவ்வாறும் அரிஷட்வர்க்கம். இவைகள் நமக்குப் பெரிய சத்ருக்கள். மேலே கிளம்பமுடியாமல் படுகுழியில் அமிழ்த்தி விடுவார்கள். இவர்களில் ஒருவருக்கு இடம் கொடுத்தால்கூட மற்றவர்களும் சேர்ந்துவிடுவார்கள். சோகம், மோஹம், பசி, தாஹம், பிறவி மரணம் இவை ஷடூர்மிகள் எனப்படும், அதாவது ஆறு அலைகள். கடலில் அலைகள் ஓய்வில்லாமல் திரும்பத்திரும்ப வந்துகொண்டே இருக்கும். இதுபோலத்தான் பசி தாஹம் முதலியவைகளுக்கும் முடிவு கிடையாது. திரும்பத்திரும்ப வந்து கொண்டே இருக்கும். ஆதலால் இவற்றை அலைகள் என்று கூறுவர். பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, மாறுதல், குறைவு, நாசம் இவை ஷட்பாவவிகாரமெனப்படும். இவைகளால்தான் நமக்கு எல்லாத்துன்பங்களும். இவைகளை ஒழிக்க பகவானால்தான் முடியும். ஸத்தையே முகமாகக்கொண்டவரே, ஆறுமுகன் தந்தையே விபுவே உமது திருவடிகளே சரணம். (46)

**सत्यं ज्ञानमनन्तं ब्रह्मेत्येतल्लक्षणलक्षित भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४७ ॥**

ஸத்யம் ஞானமநந்தம் ப்ரஹ்மே-
த்யேதல்லக்ஷண லக்ஷித போ ।
ஸாம்ப ஸதாபிவ பம்போ சங்கர
பரணம் மே தவ சரணயுகம் ॥

**ब्रह्म**–ப்ரஹ்மம், **सत्यं**–ஸத்யமானது, **ज्ञानं**–ஞானரூபம், **अनन्तं**–அனந்தமானது, **इत्येतल्लक्षण**–என்ற இந்த லக்ஷணங்களுடன், **लक्षित**–கூடினவரே, **भो साम्ब**–ஹே ஸாம்பனே... **शरणं**–அடைக்கலம்.

தைத்திரீய உபநிஷத்தில் '**सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म**' என்று ப்ரஹ்மத்தின் லக்ஷணம் கூறப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மம் ஸத்யம். உண்மைப்பொருள். பொய்யல்ல முக்காலத்திலும் மறையாமல் அழியாமல் இருப்பது. இது ஞானம் சித்ரூபி சைதன்ய ஸ்வரூபி

ஜடமல்ல. ப்ரஹ்மம் அநந்தம். பரிச்சின்னமல்ல. தேசபரிச்சேதம், கால பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் என்ற மூன்று பரிச்சேதங் களுமற்றது. இதுதான் ப்ரஹ்மலக்ஷணம். இந்த லக்ஷணம் தங்களிடமே பொருந்தியிருப்பதால் தாங்களே ப்ரஹ்மம். (47)

**हाहाहूहूमुखसुरगायकगीतापदानपद्य विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४८ ॥**

*ஹாஹா ஹூஹூ முக ஸுர காயக*
*கீதாபதானபத்ய விபோ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரண யுகம் ॥*

**हाहाहूहूमुख**–ஹாஹா, ஹூஹூ முதலான, **सुरगायक**–தேவலோகத்துப் பாடகர்களான கந்தர்வர்களால், **गीत**–பாடப்பட்ட, **अपदानपद्य**–வீரச்செயல்களின் பாட்டுக்களை உடையவரே, **विभो**–விபுவே, **साम्ब**–ஸாம்பனே... **शरणं**–அடைக்கலம்.

தேவர்களுள்' காயகர்களான (கானம் செய்பவர்களான) ஹாஹா ஹூஹூ முதலான கந்தர்வர்கள் தங்கள் வீரச்செயல் களையெல்லாம் பாட்டாகப் பாடுகின்றனர். (48)

**ळादिर्न हि प्रयोगस्तदन्तमिह मङ्गळं सदास्तु विभो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ॥ ४९ ॥**

*ளாதிர் நஹி ப்ரயோகஸ்ததந்த*
*மிஹ மங்களம் ஸதா஽ஸ்து விபோ ।*
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரணயுகம் ॥*

**ळादिः**–'ள' என்ற எழுத்தை முதலில் உடைய, **प्रयोगः**–சொல்லின் ப்ரயோகம், **नहि**–இல்லையல்லவா! **विभो**–விபுவே, **तदन्तं**–அந்த 'ள' என்ற எழுத்தைக் கடைசியில் கொண்ட, **मङ्गळं**-மங்களமானது, **इह**-இங்கு, **सदा**–எப்பொழுதும், **अस्तु**–இருக்கட்டும், **साम्ब**–ஸாம்பனே.... **शरणं**-அடைக்கலம்.

'ள' என்ற எழுத்தை முதலில் கொண்ட பதமே வழக்கில் இல்லை. ஆகையால் 'ள' என்ற எழுத்தைக்கடைசியில் உள்ள பதத்தைக்கூறுகிறோம். அதுதான் மங்களம் என்பது. இது எப்பொழுதும் இருக்கட்டும். (49)

**क्षणमिव दिवसान्नेष्यति त्वत्पदसेवाक्षणोत्सुकः शिव भो ।**
**साम्ब सदाशिव शंभो शंकर शरणं मे तव चरणयुगम् ।। ५० ।।**

*க்ஷணமிவ திவஸான் நேஷ்யதி த்வத்பத*
*ஸேவா க்ஷணோத்ஸுக: ஶிவ போ* ।
*ஸாம்ப ஸதாஶிவ ஶம்போ சங்கர*
*ஶரணம் மே தவ சரணயுகம்* ॥

**भो शिव**–ஹே சிவனே, **त्वत्पदसेवाक्षणोत्सुकः**–வேறு காரியத்தை விட்டு தங்கள் திருவடி ஸேவையிலேயே ஆவலுடன் ஈடுபடுகிறவன், **दिवसान्**–நாட்களை, **क्षणमिव** நிமிஷம் போல, **नेष्यति**–கழிப்பான். **साम्ब**–ஸாம்பனே, **सदाशिव**–ஸதாசிவனே, **शंभो**–சம்போ, **शंकर**–சங்கர, **तव**–உம்முடைய, **चरणयुगं**-இருபாதங்களும், **मे**-எனக்கு, **शरणम्**-சரணம்.

*வேறு காரியங்களைவிட்டு தங்கள் திருவடிகளை ஸேவிப்பதிலேயே ஆவலுடன் ஈடுபட்டவன் நாட்களையெல்லாம் நிமிஷமாகக் கழித்துவிடுவான். ஹே ஸாம்பா, ஸதாசிவா, சம்போ, சங்கரா, தங்கள் இரு திருவடிகளும் எனக்கு சரணம்.* (50)

ஸுவர்ணமாலா ஸ்துதி முற்றும்



॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥